# யோக வாசிஷ்டம்

## "STORIES FROM YOGAVASISTA"



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

# யோக வாசிஷ்டம்

அருளியவர்
**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம்
**ஸ்ரீ சுவாமி வேதானந்தா**




வெளியிடுவோர் :
**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**
சிவானந்தா ஆஸ்ரமம்
சுவாமி சிவானந்தா சாலை
இராசிபுரம் - **637 408.** நாமக்கல் மாவட்டம்
தமிழ்நாடு
போன் : **04287 223775**

விலை] **2012** [ரூ.**60.00**

தமிழ் வெளியீடு - 24



Tamil Translation of
**"STORIES FROM YOGAVASISTA"**
by Swami Sivananda

| | | |
|---|---|---|
| I | Edition | 1976 |
| II | Edition | 1984 |
| III | Edition | 1993 |
| IV | Edition | 1998 |
| V | Edition | 2003 |
| VI | Edition | 2012 |

Printed out of the magnanimous donation of :

| | |
|---|---|
| R.KANAGASABAPATHY & Smt. K.KUMUDHINI, Salem-5. | Rs. 10,000 |
| Dr. R. SOWMINARAYANAN, M.B.B.S., DIP., NB., Chennai. | Rs. 10,000 |
| உணர்வோம் – உணர்த்துவோம் | Rs. 10,000 |
| Humble Devotee | Rs. 20,000 |
| Smt. R.KAMATCHI, Vembattur. | Rs. 10.000 |

Typeset by : Sivananda Computer, Madurai.
Printed at : The Orient Processors, Sivakasi.

# பொருளடக்கம்

## ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும், வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீசுவாமி சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப்பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் வெளியிட்டு வருகிறது. அதனால் தமிழ்நாட்டிலும், வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழி பெயர்ப்புகள் இன்று இருக்கின்றன.

``STORIES FROM YOGAVAISTA" என்ற ஆங்கில நூலை சுவாமி வேதானந்தா அவர்கள் தமிழில் ``யோக வாசிஷ்டம்" என்று மிக மிக அற்புதமாக தூய எளிய தமிழில் அழகிய முறையில் மொழி பெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் மதுரை `பிரிண்ட் ஷாப்' நிறுவனத்தினர் டைப்செட் செய்து கொடுத்துள்ளனர். சிவகாசி தி ஓரியண்ட் பிராஸஸர்ஸ், மிகச் சிறந்த முறையில் அச்சடித்துக் கொடுத்துள்ளனர். இந்நூல் ஐந்தாம் பதிப்பாக வெளிவருவதைக் கண்டு மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

சுவாமி சிதானந்தா
ஓம்.

5

# யோகவாசிஷ்டக் கதைகள்

## முன்னுரை

யோகவாசிஷ்டம் அல்லது வாசிஷ்ட மகா இராமாயணம் என்பது வேதாந்தம் பற்றிய மகா உன்னத ரகமான அதிபூர்வீக ஸமஸ்கிருத கிரந்தம். இது ஓர் ஞாபகச் சின்னமாக விளங்கும் நூல். ஸமஸ்கிருத இலக்கியத்திலேயே இரண்டாவது இல்லாத முழு முதன்மையானது இது. வசிஷ்ட மகிரிஷி வேதாந்தக் கோட்பாடுகளைத் தமது ராஜபரம்பரை மாணவரும், இராவணன் மீது வெற்றி கொண்டவரும், இராமாயண காவியத்தின் வீரருமான இராமருக்குக் கற்றுக் கொடுத்தார். கோட்பாடுகளை விளக்கக் கூடிய அழகிய கவர்ச்சியான கதைகளை அவர் சொல்லலானார். புத்தகம் வால்மீகியின் பாஷையில் எழுதப்பெற்றது.

வேதாந்த நூல்கள் எல்லாவற்றுக்கும் தலையாய ஆபரணமாக இது விளங்குகிறது. இது ஓர் மகோன்னதமான படைப்பு. இப்புத்தகத்தைக் கற்றால், கற்பவனை தெய்வீக தேஜஸும் பரமானந்தமும் நிலவும் அதிமேம்பட்ட நிலைக்கு உயர்த்துகிறது. உண்மையில் இது பிரம்மாண்டமான ஞானக் களஞ்சியம். ஆத்மசிந்தனையோ, பிரஹ்ம அப்பியாஸமோ அல்லது வேதாந்த ரீதியான தியானமோ பயிலுகின்றவர்கள் அற்புதமான இப் புத்தகத்தில் விலைமதிக்க ஒண்ணாத பொக்கிஷத்தைக் காண்பார்கள். மிகுந்த சிரத்தையோடும் ஒரு முகப்பட்ட உள்ளத்தோடும் இப்புத்தகத்தைக் கற்கிறவன் ஆத்ம சாட்சாத்காரம் பெறாமல் போகமுடியாது. சாதனை பற்றிய அநுபவக் குறிப்புகள் ஒப்பற்றவை. உலகாயத விஷயங்களில் மிகுந்த பற்றுள்ள உள்ளம் படைத்தவன் கூட, இப்புத்தகத்தைப் படிப்பதனால் சித்தவிகாரம் அற்றவனாகி மன அமைதியும், ஸாந்தியும் ஆறுதலும் எய்துவான்.

யோகவாசிஷ்ட இராமாயணம் ஒரு காலத்தில் இந்தியாவில் பல்லோரால் விரும்பிப் படிக்கப்பட்ட புத்தகங்களில் ஒன்றாகத் திகழ்ந்தது. இது சாதாரண தத்துவச் சிந்தனையை விசேஷமாய்ப் பிரபலப்படுத்தியுள்ளது. காலஞ்சென்ற காசி பண்டிதர் பிருந்தாவன சரஸ்வதி

அவர்கள் யோகவாசிஷ்டத்தை ஒரு நூற்று அறுபத்தைந்து தடவை வாசித்துள்ளார்கள். பல விஷயங்களைத் தழுவிய ஆழ்ந்த கருத்துக்களை ஒழுங்காகக் கொண்ட இலக்கிய தத்துவார்த்த நூல் - புராதன இந்தியாவின் சிருஷ்டி வாசிஷ்டம் எனும் பெயர் வசிஷ்டமகிரிஷியின் பெயரிலிருந்து எடுத்தாளப்பட்டுள்ளது. யோகவாசிஷ்டம் என இப்புத்தகம் பெயரிடப்பட்டாலும் இது ஞானத்தையே போதிக்கிறது. அநுபவயோகம் இரண்டு கதைகளில் விளக்கம் பெறுகிறது. யோகம் என்ற வார்த்தை இந்நூலின் முகப்புப் பெயரில் சாதாரண பாணியில் பயன்படுத்தப்பட்டுள்ளது. இது ஞானவாசிஷ்டம் என்ற பெயரால் கூட அறியப்படுகிறது. வால்மீகி மகிரிஷி இராமாயணத்தை இயற்றியவர். அவரே பிரசித்திபெற்ற இப்புத்தகத்தைத் தொகுத்தார். வசிஷ்டமுனிவருக்கும் இராமபிரானுக்கும் நடந்த யோகவாசிஷ்டம் முழுமையும் அவர் பரத்துவாஜ மகரிஷிக்குத் திருவாய் மலர்ந்தருளினார். இரண்டு புத்தகங்கள் உள்ளன;- பிருஹத் யோகவாசிஷ்டம், இலகு யோகவாசிஷ்டம், முன்னது பெரியது; இதில் 32,000 கிரந்தங்கள் அல்லது 64,000 வரிகள் அடங்கியுள்ளன, 'பிருஹத்' என்றால் பெரிய என்று பொருள். பின்னது 8000 கிரந்தங்களைக் கொண்டது. இலகு என்பது சிறிய என்ற அர்த்தம் உடையது.

யோகவாசிஷ்டத்தில் அதற்கு நிகரற்ற புராதன தத்துவார்த்த சித்தாந்தம் நிறைந்துள்ளது. ஆரிய வர்த்தம் அல்லது பாரதவர்ஷம் என்னும் இந்தப் புண்ணிய பூமியில் பண்டைக் காலத்திலிருந்து வழங்கி வரும் மிக்க அபூர்வமான உரிமைப் பொருளாக இது இருந்து வருகிறது. இப்புத்தகத்தில் விளக்கப்பட்டுள்ள சித்தாந்தம் இந்திய சித்தாந்தத்திற்கு மாத்திரமல்லாமல், உலக முழுமைக்கும் உள்ள சித்தாந்தத்திற்கும் உயர்ந்த பாணியில் பெரும் மதிப்பளவில் உதவுவதாயிருக்கிறது. இவ்வுலகினின்று திரும்பிய உள்ளம் படைத்தவர்கள் இவ்வுலகப் பொருள்களிடத்தில் விரக்தி பாவம் கொண்டவர்கள், முக்தித் தாகம் உடையவர்கள் இத் திவ்ய புத்தகத்தைக் கற்பதால் உண்மையாக நலம் பெறுவார்கள். அவர்கள் தங்கள் அன்றாட வாழ்விலே

வழிகாட்டக்கூடிய அநுபவ ஆத்மீகப் போதனைகளும், மகத்தான ஞானச் சுரங்கமும் இந்தப் புத்தகத்தில் காண்பார்கள். யோகவாசிஷ்டம் முதலில் ஒரு கோட்பாட்டை அதன் வெவ்வேறு அம்சங்களில் எடுத்துச் சொல்லி அப்பால் கவர்ச்சிகரமான கதைகள் மூலம் அதைத் தெளிவுபடுத்துகிறது. இது இடையறாமல் கற்பதற்குரிய புத்தகம். இது வாசிக்கப்பட வேண்டும், மீண்டும் வாசிக்கப்பட வேண்டும். இது கற்கப்பட வேண்டும். திரும்பத் திரும்ப கற்கப்பட வேண்டும். எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு தடவைகளில்.

வாழ்வில் நேரும் சகலவிதமான சோதனைகள் வேதனைகளின் இடையில் ஜீவாத்மாவைப் பரமாத்மாவோடு ஐக்கியப்படுத்தும் பொருள் பற்றி யோகவாசிஷ்டம் விளக்குகிறது. பரமாத்மாவோடு ஜீவாத்மா கலந்து ஒருமைப்படுவதற்காக அது பலவிதமான வழிமுறைகளை வகுத்துத்தருகின்றது. பிரஹ்மன் அல்லது ஸத்பொருளின் தன்மை மற்றும் ஆத்மசாக்ஷாத்காரம் பெறுவதற்கான வழிமுறைகள் இப்புத்தகத்தில் தத்ரூபமாக வர்ணிக்கப் பட்டுள்ளன. பிரதான ப்ரச்சினை அதாவது இறுதியான பரமபதம் (மோக்ஷம்) பற்றிய கேள்வி அழகாக விளக்கம் பெற்றுள்ளது. அத்யாத்ம சாஸ்திரம், ஆத்மஞானம், தத்துவார்த்தக் கோட்பாடுகள், உணர்ச்சிகள் பற்றிய சாஸ்திரம் தருமசாஸ்திரம் விதிகள், அநுபவநீதி சாஸ்திரம், பாரமார்த்திகப் பேருரைகள் இன்னும் பலவும் இப்புத்தகத்தில் காணப்படுகின்றன.

இப் புத்தகம் ஆறு பிரகரணங்கள் அல்லது அதிகாரங்களைக் கொண்டது (1) வைராக்கியப் பிரகரணம் (2) முமுக்ஷுப் பிரகரணம். (3) உற்பத்திப் பிரகரணம் (4) ஸ்திதிப் பிரகரணம் (5) உபசாந்திப் பிரகரணம். (6) நிர்வாணப் பிரகரணம் யோகவாசிஷ்டப்படி, பலவித பொருள்கள் காலம், இடம், சட்ட திட்டங்கள் இவைகளோடு ஏற்படும் அநுபவத்திற்கு முகாமையான இந்த உலகமானது உள்ளத்தின் சிருஷ்டியே. அதாவது கற்பனையே. கனவில் மனத்தால் எவ்வாறு பொருள்கள் கற்பனை செய்யப்படு கின்றனவோ, அவ்வாறே விழிப்பு நிலையில் கூட யாவும்

மனத்தால் சிருஷ்டிக்கப்படுகின்றன. மனத்தின் விரிவு நிலையே சங்கல்பம் ஆகும். சங்கல்பமானது தன் பேதகரமான சக்தியால் இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கிறது. காலமும் மனோ கற்பனைகளே. மனத்தின் திருவிளையாடலால் அண்மையிலுள்ள பொருள்கள் தூரத்திலும், தூரத்தி லுள்ளவை அண்மையிலுமாய்த் தோற்றமளிக்கின்றன. மனோவலிமை யினால், கல்பகாலமானது ஒருக்ஷண நேரமாகவும், க்ஷணம் கல்பகாலமாகவும் தோற்ற மளிக்கின்றன. விழிப்பு நிலையில் அநுபவிக்கிற ஒருக்ஷண நேரப்பொழுது கனவு நிலையிலே வருஷங்களாக ஆகிவிடுகிறது. குறுகிய ஜாண் இடத்திற்குள் மைல் கணக்காகவும் மைல்கள் ஒரு ஜாண் மாத்திரமாகவும் அநுபவிக்கப்படுகின்றன. மனம் பிரஹ்மனுக்கு வேறு பட்டதும் அந்நியமானதும் அல்ல. பிரஹ்மன் தன்னை மனமாகவே தோற்றமளிக்கிறார். மனம் கற்பனை செய்யும் சக்தி படைத்தது. மனம் பந்தத்திற்கும் முக்திக்கும் மூலகாரணம்.

திருஷ்டி, சிருஷ்டி வாதம் எனும் கோட்பாடு யோக வாசிஷ்டத்தில் விளக்கப்பட்டுள்ளது. சில இடங்களில் வசிஷ்ட மகரிஷி சங்கராச்சாரியாருடைய மகத்தான குருவாகிய கௌட பாதாச்சாரிய சுவாமிகளின் அஜாதவாதக் கோட்பாட்டைப் பற்றிப் பேசுகிறார். நீ பார்க்கத் தொடங்கினாய். பிறகு சிருஷ்டியிருக்கிறது என்பதை அறிகிறாய். இதுதான் திருஷ்டி சிருஷ்டிவாதம். முக்காலங்களிலும் இந்த உலகம் இருந்ததே கிடையாது. இது அஜாதவாதம் அல்லது பிரபஞ்சத்தின் உற்பத்தியின்மை. இது உற்சாகமூட்டும் புத்தகம். வேதாந்த மாணவன் ஒவ்வொருவனும் இடையறாப் படிப்புக்காக இப்புத்தகத்தை வைத்துக் கொள்கிறான். ஞானயோக மார்க்கத்தில் செல்லும் மாணவனுக்கு இது உயிர்த்தோழன் போன்றது. இது பிரகிரிய கிரந்தம் அல்ல. இது வேதாந்தத்தின் பிரகிரியங்கள் அல்லது பிரிவுகள் பற்றிப் போதிக்கவில்லை (வேதாந்தத்தில்) முன்னேறியுள்ள மாணவர்கள் மாத்திரமே இப்புத்தகத்தைக் கற்பதற்கு எடுத்துக்கொள்ள வேண்டும். சாதகர்கள் யோகவாசிஷ்டத்தைக் கற்றுக் கொள்ளத் தொடங்குவதற்கு முன்னால் முதன் முதலில் ஸ்ரீசங்கராச் சாரியாரின் ஆத்மபோதம், தத்துவபோதம், ஆத்மா அநாத்மா

விவேகம் மற்றும் பஞ்சசேகரன் முதலியவற்றைக் கற்கவேண்டும்.

யோகவாசிஷ்டத்தின் பிரகாரம், மோக்ஷம் என்பது ஆத்மஞானம் மூலம் பிரஹ்மானந்த ஸாரத்தை எய்துதல் ஆகும். மோக்ஷம் என்பது மாசுமறுவற்ற அழியாத பிரஹ்மனுடைய வாசஸ்தலம்; இங்கே சங்கல்பங்களோ வாசனைகளோ கிடையா. மனதானது இங்கே ஒய்வு பெறுகிறது. மோக்ஷத்தினுடைய பேரின்பத்திற்கு ஒப்பிடும் போது, உலக முழுவதிலுமுள்ள சுகபோகங்கள் அனைத்தின் தொகுதி, வெறும் துளி எனலாம். மோக்ஷம் என அழைக்கப்படுவது தேவலோகத்திலோ பாதாளத்திலோ அல்லது பூமியிலோ கிடையாது. ஆசைகள் யாவும் அழிபட்டுப் போனால் விரிவான மனத்தினுடைய நாசமாத்திரமே மோக்ஷம். மோக்ஷம் என்பதில் காலம் இடம் கிடையா; உட்புறம் வெளிப்புற நிலைகள் இல்லை. நான் எனும் அஹங்காரம் ஆகிய மாயமான கொள்கை அழிய மாயையாகிய எண்ணங் களின் முடிவே மோக்ஷம். வாசனைகள் அனைத்தின் சர்வநாசம் மோக்ஷமாக அமைகிறது. சங்கல்பம் என்பது சம்ஸாரம் மாத்திரமே ஆகும்' அதன் நாசமே மோக்ஷம். சங்கல்பம் மீண்டும் உயிர்த்தெழாத வகையில் அழிக்கப் பட்டால் அதுவே மாசற்ற பிரஹ்மபதம் அல்லது மோக்ஷமாக அமைகிறது. மோக்ஷம் என்பது சர்வ துக்க நிவர்த்தி, பரமானந்தப்பிராப்தி, துக்கம் என்பது வேதனை. ஜனன மரணங்கள் அளவிடற்கரிய வேதனை களைத் தருகின்றன. ஜனன மரணங்களிலிருந்து விடுபடுதல் என்பது எல்லாவகைத் துன்பங்களிலிருந்தும் விடுபடுதல் ஆகும். பிரஹ்மக்ஞானம் மட்டுமே மோக்ஷத்தைத்தரும். பொருள்களை நாடும் ஆசைகள் அற்றுப்போவதன் மூலம் மனத்திலே எழும்ஒய்வுதான் மோக்ஷத்தை விளைவிக்கிறது. மோக்ஷம் என்பது எய்துதற்குரியவஸ்து அல்ல. ஏற்கனவே அங்கே இருக்கிறது. உண்மையில் நீ கட்டுண்டவன் அல்ல. என்றும் நீ தூய்மையும் சுதந்திரமும் வாய்ந்தவன். உண்மையில் நீ கட்டுண்டவனாகில், ஒரு போதுமே நீ சுதந்திரமாக இருக்கமுடியாது. நீ அமரத்துவ சர்வ வியாபகமான ஆத்மா என்பதை நீ உணரவேண்டும். உணருதல் என்பது அதுவே ஆகுதல் ஆகும். இதுவே மோக்ஷம்.

இதுதான் வாழ்க்கையின் இலக்ஷியம். இது தான் வாழ்க்கையின் விசேஷ தன்மை. உலகபோகங்களை மனம் துறந்த போதும், 'நான்' அல்லது ஏனைய ஆத்மா மனத்திற்காக இல்லாதபோதும், மனத்தின் கவர்ச்சியற்ற அந்த நிலையானது மோக்ஷத்திற்கு வழி காட்டுகிற மார்க்கம் என்று அறியப்பட வேண்டும்.

யோகவாசிஷ்டத்தின் பிரகாரம், முழுமுதற் பரம்பொருள் சத்-சித்-ஆனந்த பரப்பிரஹ்மன். அவர் அத்வைதி, பங்கு அற்றவர், அந்தமில்லாதவர், ஸ்வயம் ஜோதி, மாற்ற மில்லாதவர், நித்தியர், அவர் நாமெல்லோரும் வசித்து சஞ்சரிக்கிற சமுத்திரமாகிய பரம்பொருள். அவர் மனத்திற்கும் புலன்களுக்கும் எட்டாத தொலைவில் இருக்கிறார். அவர் இறுதியான உறுதி வஸ்து; கர்த்தாவுக்குப் பின்னால் உள்ள ஏகப் பொருள். அநுபவத்திற்குப் போக்தா, அவர் ஒரே இயல்பு கொண்ட ஸத்வஸ்து, அவர் எங்கணும் வியாபித்துள்ளார்; வர்ணனைக்கு அப்பாற்பட்டவர். அவர் நாமமற்றவர், நிறமற்றவர், வாசனையற்றவர், சுவையற்றவர், காலமற்றவர், இடமற்றவர், மரணமற்றவர், ஜனனமற்றவர். எவருடைய மனம் ஸாந்தியாயுள்ளதோ, எவருக்கு மோக்ஷத்திற்குரிய நான்கு சாதனங்கள் அமையப் பெற்றுள்ளனவோ, யார் கேடுகள் அசுத்தங்களிலிருந்து விலகியுள்ளவரோ அவர் தியானத்தின் மூலம் சகஜநிலையில் ஆத்மாவை சாக்ஷாத்கரிக் கக்கூடும். சாஸ்திரங்கள் நமக்கு பிரஹ்மனைகாட்டா; ஆத்மீய குருவும் காட்டமாட்டார். குருவானவர் நம்மை வழிகாட்டி உதாரணங்களாலும் விளக்கங்களாலும் நமக்கு ஓர் குறிப்பு கொடுத்து உதவுவார்.

ஸாந்தி (மனம் அடங்கல்) சந்தோஷம் (திருப்தி) ஸத்சங்கம் (முனிவர்களோடு பேரிணக்கம்) மற்றும் விசாரம் (ஆத்மீயவினா) ஆகிய நான்கு துவார பாலகர்கள் மோக்ஷ வாசலைக் காவல் புரிகின்றார்கள்.

நீ அவர்களோடு நட்பு பூண்டால், இலகுவில் மோக்ஷராஜ்ஜியத்தில் நுழையலாம். அவர்களில் ஒருவரோடு நட்பு பூண்டால் கூட, அவர் நிச்சயமாக உன்னை இதர மூன்று தோழர்களுக்கும் அறிமுகம் செய்துவைப்பார். மாணவன்

பிரஹ்மம் ஒருவரே உண்மை எனவும், ஒவ்வொன்றும் பிரஹ்மமயம் எனவும், எல்லா உயிர்களுக்கும் பிரஹ்மமே ஆத்மா எனவும் உறுதியாகக் கொள்ளவேண்டும். அப்பால் அவன் நேரடியான சகஜஞானம் அல்லது அபரோக்ஷா நுபவம் மூலம் இதை சாக்ஷாத்கரிக்க வேண்டும். இந்த நேரடியான பிரஹ்மக்ஞானம் மாத்திரமே விடுதலைக்குரிய சாதனம். விழிப்புநிலை அனுபவங்களுக்கும் கனவுநிலை அனுபவங்களுக்கும் பேதம் கிடையாது. விழிப்பு நிலை (நீண்ட) தீர்க்க சொப்பனம். கனவுநிலை அனுபவங்கள் மனிதன் தன் விழிப்புநிலைக்குத் திரும்பியதும் பொய்யாகப் போய் விடுகின்றன. அதுபோல, ஆத்ம சாக்ஷாத்காரம் பெற்ற முனிவர் ஒருவருக்கு விழிப்புநிலை பொய்யாகிவிடுகிறது. கனவு காண்கின்றவனுக்கு அந்த உலகம் மிகவும் நிஜமாகிவிடுகிறது - விழிப்பு நிலை பொய்யாகின்றன.

ஜீவன்முக்தர் சந்தோஷமாக நடமாடுகிறார்; கவர்ச்சிகளோ பற்றுக்களோ அவருக்கு கிடையாது; அவர் எய்த வேண்டியவை எவையும் இல்லை; கொடுக்க வேண்டியவை எவையும் இல்லை. உலக க்ஷேமத்திற்காக அவர் பாடுபடுகிறார். ஆசைகள், அகங்காரம் மற்றும் பேராசையினின்று அவர் விடுபட்டவர். நகரத்திலே சந்தடி நிறைந்த பகுதியில் வேலை செய்தாலும்கூட அவர் ஏகாந்த நிலையிலேயே இருக்கிறார். யோகவாசிஷ்டத்தின் தேவாமிர்தத்தை நீங்கள் எல்லோரும் பருகுவீர்களாக! ஆத்மஞானமாகிய தேனைச் சுவைத்து நீங்கள் எல்லோரும் இந்த ஜன்மத்திலேயே ஜீவன் முக்தர்களாய் வாழ்வீர்களாக! ஸ்ரீவசிஷ்டர், ஸ்ரீவால்மீகி மற்றும் ஏனைய பிரஹ்ம வித்யா குருமார்கள் ஆகியோரின் நல்லாசிகள் உங்கள் யாவருக்கும் கிட்டுமாக! பிரஹ்மானந்தத்தின் ஸாரத்திலே நீங்கள் எல்லோரும் பங்கு கொள்வீர்களாக.

## 12
## ஹஸ்தாமலக ஸ்தோத்திரம்

தென்னிந்தியாவில் ஸ்ரீபலி எனும் கிராமத்தில் பிரபாகரன் எனும் பிராம்மணனுக்கு ஹஸ்தாமலகன் பிறந்தான். இளம் பருவந்தொட்டு உலக விஷயங்கள் யாவற்றிலும் அவன் பராமுகமாயிருந்தான். செவிட்டு ஊமையனைப் போன்று அவன் ஒழுகி வந்தான். ஸ்ரீசங்கராச்சாரிய சுவாமிகள் தமது பரிவாரங்களுடன் இந்த ஸ்தலத்திற்கு விஜயஞ் செய்தபோது, பிரபாகரனும் ஹஸ்தாமலகனும் அங்குபோய் சுவாமிகளின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார்கள். ஸ்ரீசுவாமிகள் இருவரையும் தூக்கி பிராம்மணனைக் கேட்டபோது அவன் 'மஹிமைமிக்க மஹரிஷியே! இவன் என் மகன்; செவிட்டு ஊமை; உலக விஷயங்களில் பராமுகமாயிருக்கிறான். பாலப் பருவம் முதல், நம் பேச்சை அறிகிறான் இல்லை; நம் பேச்சை அறிய சிரத்தை எடுத்துக் கொள்ளவும் இல்லை. ஒரு பிராம்மணனால் கற்கப்பட வேண்டிய வேதங்களோ இதர கிரந்தங்களோ படித்ததில்லை. அக்ஷரங்களைக் கூடக் கற்றுக்கொள்ளவில்லை. மிக்க கஷ்டப்பட்டு உபநயனம் மாத்திரம் செய்திருக்கிறேன். தோழர்களுடன் கூடி இவன் விளையாடச் செல்வதில்லை. இவனுடைய அலக்ஷிய சுபாவத்தைக் கண்ட தோழர்கள் சில சமயம் இவனை அடித்ததும் உண்டு; ஆனால் ஒரு போதுமே இவன் கோபித்துக் கொள்ளவில்லை. சில சமயம் உண்கிறான் சில சமயம் உண்ணாமலே இருந்துவிடுகிறான். ஆனால் சதா சந்தோஷமாயும் உற்சாகமாயும் இருந்து வருகிறான். இவனுடைய மந்தபுத்திக்குக் காரணம் தான் என்னவோ? மஹானுபாவரே! என் குழந்தையை ரக்ஷிக்க பிரார்த்திக்கின்றேன்" என்று சாங்கோபாங்கமாய்க் கூறினான்.

பதில் கூறுவதில் ஸ்ரீசங்கராச்சாரிய சுவாமிகள் அடியிற் கண்ட வினாக்களை அப்பையனிடம் கேட்டார். பையன் கொடுத்த பதில், பையன் பெயரைக் குறிக்கிற 'ஹஸ்தாமலக ஸ்தோத்திரம்' எனும் நூலில் இணைக்கப் பெற்றுள்ளது. அவன் செவிடனோ ஊமையோ அல்ல. அவன் பரிபூரணம் பெற்ற முழு ஞானி; ஓர் ஜீவன் முக்தன்.

1. ஓ, அன்புள்ள குழந்தாய்! நீ யார்? யாருடைய மகன்? எங்கே நீ செல்லுகிறாய்? உன் பெயர் என்ன? எங்கிருந்து நீ வந்தாய்? எனக்காக வினாக்களுக்குத் தயவுசெய்து பதில் அளிக்கவும். நீ எனக்கு மிகவும் பிரியமாய் உள்ளவன்.

2. நான் மனிதனோ, தேவனோ, யக்ஷனோ (அமானுஷ்ய ஜீவன்) பிராம்மணனோ, க்ஷத்திரியனோ, வைசியனோ, சூத்திரனோ அல்ல. நான் பிரம்மச்சாரியல்ல, குடும்பஸ்தன் அல்ல, வானப்பிரஸ்தியுமல்ல; பிட்சு (ஆண்டி) அல்ல; நான் தானே நித்திய ஆத்மஞானி.

3. நான் ஆத்மன். மக்களை தத்தம் கடமைகளைப் புரியக் கதிரவன் தூண்டுகிறது போல, மனத்தையும் புலன்களையும் செயலாற்றத் தூண்டுகிற ஆகாசம் முதலிய வரையறைக் குட்பட்ட சேர்மானங்களிலிருந்து விடுபட்ட நித்திய சுய அறிவு சொரூபமானவன்.

4. நான் ஆத்மன், நித்திய மாறுதலற்ற சுய அறிவு சொரூபமானவன். நெருப்பின் ஸ்வபாவம் உஷ்ணம், அது போல பிரம்மத்தின் சுபாவம் தூய உணர்வு. இதைச் சார்ந்தே ஸ்தூல மனமும் புலன்களும் தத்தம் அலுவல்களைக் கிரமமாகப் புரிகின்றன.

5. நான் ஆத்மன். நித்திய சுய அறிவு சொரூபமானவன். கண்ணாடியும் அதில் காணப்பட்ட பிம்பமும் இல்லாதபோது, முகம் மாத்திரம் இருக்கிறது போல, ஆத்மஞானம் விளங்குகிறது - புத்தியில்லாத போது கூட.

7. மனத்திற்கும் புலன்களுக்கும் அப்பால் உள்ள நித்திய சுய அறிவு சொரூபமான ஆத்மன் நான். மனத்திற்கு மனமாயும், கண்ணுக்குக் கண்ணாயும் உள்ளது ஆத்மா. இவைகளால் அந்த ஆத்மா அணுகவொண்ணாதது.

8. நான் ஆத்மன். நித்திய சுய அறிவு சொரூபமானவன். சூரியன் தண்ணீர் நிறைந்த வெவ்வேறு குடங்களிலே வெவ் வேறாகப் பிரதிபிம்பிப்பது போல, ஒரே ஒரு பரம்பொருள் விதவிதமான புத்திகளை ஜ்வலிக்கச் செய்கின்றது. ஏகவஸ்து; அது சுயம்பிரகாசத்தோடு ஜ்வலிக்கிறது.

9. நான் ஆத்மன், நித்திய சுய அறிவு சொரூபமானவன்.

சூரியன் ஒரு கண்ணுக்கு வழங்கிய பிறகு இன்னொரு கண்ணுக்கு வழங்காமல் ஒரே நேரத்தில் எல்லாக் கண்களுக்கும் எங்ஙனம் வெளிச்சத்தை வழங்குகிறதோ அங்ஙனமே ஆத்மா எல்லா புத்திகளையும் ஜ்வலிக்கச் செய்து இயங்கவைக்கிறது.

*10*. நான் ஆத்மன்; நித்திய சுய அறிவு சொரூபமானவன் சூரியோதயத்தின்போது வெளியேயுள்ள பொருள்களைப் பார்க்கிறோம்; மற்ற நேரத்தில் அல்ல. அதுபோல, ஆத்மாவின் ஒளியை நம்பி அவ்வொளியால் இதர பொருள்களைக் காண்கிற சக்தியைக் கண்கள் பெறுகின்றன.

*11*. நான் ஆத்மன். நித்திய சுய அறிவு சொரூபமானவன். ஒரே பரம்பொருள் இரண்டாவது அல்லாதது, ஒரே சூரிய பிம்பம் அசையாத நீரிலும் ஓடும் நீரிலும் வெவ்வேறு விதமாக விழுவதுபோல, நேர்மையான புத்தியிலும் விகல்ப புத்தியிலும் ஆத்மா ஜ்வலிக்கிறது.

*12*. நான் ஆத்மன், நித்திய சுய அறிவு சொரூபமானவன். மேகங்களால் மூடப்பட்ட சூரியனைக் கண்ட மூடன் சூரியன் பிரகாசமில்லாதது என்று கூறுகிறான். அதுபோல, மந்தபுத்தி படைத்தோனுக்கு ஆத்மா கட்டுண்டு கிடப்பது போன்று தெரிகிறது.

*13*. நான் ஆத்மா. நித்திய சுய அறிவு சொரூபமானவன். ஆகாசத்தைப் போல, ஆத்மா சதா தூய்மையாயும் மாசு மறுவற்றதாயும் உள்ளது. ஒரே ஆத்மா எல்லாப் பொருள்களிலும் ஊடுருவியுள்ளது. இப்பொருள்களோ ஆத்மாவைத் தீண்டமுடியா அல்லது பொருள்கள் சேர்க்கையால் ஆத்மா களங்கமடையமாட்டாது.

*14*. விலையுயர்ந்த வெவ்வேறு இரத்தினங்களிடையில் அவற்றின் நிறம், வடிவம் அனுசரித்து வித்தியாசங்கள் ஏற்படுவனபோல், ஆத்மா வெவ்வேறு உபாதிகளால் விதவிதமாகப் பார்க்கப்படுகின்றது. சந்திரன் பல சந்திரன்களாகவும் தண்ணீரில் மாறுதல் அடைந்தும் பார்க்கப்படுவதுபோல, ஓ, விஷ்ணுமூர்த்தியே! தாங்கள் பலவிதமாகப் பார்க்கப்படுகிறீர்கள். (உண்மையில் தாங்கள் ஒருவரே! சதா தூய்மையாயும் மாறுதல் அற்றும் இருக்கிறீர்கள்).

## பரபூஜை

1. பாகங்கள் அற்றதும், சத்து, சித்து, ஆனந்தமயமானதும் விகல்பம் அற்றதும்; த்வந்தம் அற்றதுமான பரம்பொருளுக்கு பூஜை எங்ஙனம் செய்யக்கூடும்?

2. சர்வ நிறைவும் உள்ள ஒருவரை எங்கே ஒருவன் அழைக்கக்கூடும்? யாவற்றுக்கும் ஆசனமாயும் ஆதரவாயும் உள்ள ஒருவருக்கு எத்தகைய ஆசனம் சமர்ப்பிப்பது? சதா புனிதமாயுள்ள ஒருவருக்கு அர்க்கியம், பாத்யம் ஆசமனம் இவற்றை வழங்குவது எப்படிச் சாத்தியப்படும்?

3. சர்வ புனிதமயமாகயிருக்கிறவருக்கு ஸ்நானம் தேவையில்லை, எவரிடத்தில் உலகமே தங்கியிருக்கின்றதோ அத்தகையவருக்கு ஆடை என்ன பயன் தரும்? ஜாதி, மதம், இல்லாதவர்க்கு பூணூல் தேவையா?

4. சதா மகிழ்ச்சியே கொண்டவரும் அநுபவிக்க ஆசைகளே அற்றவருமான ஒருவருக்கு வாசனைத் தூபமும் மலர்களும் என்ன பயன் தரும்? வடிவமே இல்லாத ஒருவருக்கு எப்படி ஆடை உடுத்துவது? குணக்குறிகள் இல்லாதவருக்கு ஆபரண அலங்காரங்கள் என்ன பிரயோஜனம்?

5. மாசு இல்லாத ஒருவருக்கு தூபம் என்ன பயன் தரும்? தாமே ஜோதிகளுக்கு ஜோதியாயிருக்கிறவர்க்குத் தீபம் வழங்குவது எப்படி? சுய திருப்தியோடு சொந்த ஆனந்தத்தில் திளைத்திருக்கிறவருக்கு எந்த நைவேத்தியம் அளிப்பது?

6. எல்லா ஜீவராசிகளுக்கும் பரமானந்தத்தை வழங்குகிறவரும் உணர்வு மயமாயும் சுவயம்ஜோதியாயும் விளங்குகிறவரும் சூரியன் மற்றும் இதர பொருள்களுக்கு வெளிச்சத்தைத் தருகிறவருமான ஒருவருக்குத் தாம்பூலம் எங்ஙனம் வழங்குவது?

7. அந்தமில்லாத பிரம்மாண்டமான ஒருவரை எப்படி ஒருவன் சுற்றி வரமுடியும்? ஏகமாயும் இரட்டைத் தன்மை இல்லாதவருமான ஒருவர் முன் எப்படி சாஷ்டாங்க நமஸ்காரம் புரிவது? எவரை நான்கு வேதங்களும் தகுந்தவாறு வர்ணிப்பதில் தவறிவிட்டனவோ அவருக்கு எத்தகைய புகழுரைகளும் சாத்தியமில்லை.

8. சுவயம்பிரகாசமாயுள்ள ஒருவர்க்குக் கர்ப்பூர நீராஞ்சனம் சமர்ப்பித்தல் எப்படி? சர்வபூர்ணராயும் சர்வவியாபகராயுமுள்ள ஒருவரை அவரது பூர்வயதாஸ் தானத்தில் சேர்த்தல் எப்படி முடியும்?

9. இந்த பரபூஜை பிரம்மனை வழிபடுகிற பக்தர்கள் எல்லோராலும் எப்போதும் எந்த வேளைகளிலும் சிரத்தையோடும் ஒருமுகப்பட்ட உள்ளத்தோடும் செய்யப்பட வேண்டும்.

குறிப்பு : (ஆவாஹனம், ஆஸமனம், பாத்யம், அர்க்யம், ஆகியவை உபாஸனாக்கிரமங்களின்படி சொந்தமான இஷ்ட தெய்வங்களுக்குப் புரியும் பூஜையில் கையாளும் பல்வேறு கிரியைகள் ஆகும். இவை எல்லாம் அத்வைத பரப்பிரம்மனுக்குச் சாத்தியமில்லை என்பதே இந்த ஸ்தோத்திரத்தின் ஸாராம்சம். மேன்மையான ஆத்மா மேற்கண்ட ஸ்தோத்திரத்தின் உட்கருத்தும் பிரஹ்மனை வழிபடுகிற பக்தர்கள் அனைவராலும் கிரகித்துக் கொள்ளப்பட வேண்டும்).

## யோகவாசிஷ்டத்தின் ஸாரம்

மோக்ஷத்தின் வாசல்களில் காவல்புரியும் நான்கு துவாரபாலகர்கள் ஸாந்தி, விசாரம், சந்தோஷம், மற்றும் சத்ஸங்கம் ஆகியோர்களின் நட்பு ஏற்பட்டுவிட்டால், பிறகு இறுதி மோக்ஷத்தைப் பெறுவதில் எவ்விதத் தடையும் கிடையாது. இவர்களில் ஒருவராவது உனக்கு நண்பரானால் அப்பால் அவர் உன்னை இதர நண்பர்களிடம் அறிமுகப்படுத்திவிடுவார். ஆத்மா அல்லது பிரம்மக்ஞானத்தை நீ அடையப்பெற்றால், ஜனன மரணத்தளையினின்று விடுபடுவாய். ஐயங்கள் அனைத்தும் மறையும்; கர்மங்கள் அனைத்தும் ஒழியும். ஒருவன் தனது சொந்த முயற்சிகளின் மூலமே மாத்திரம் அமரத்துவ சர்வ ஆனந்தமயமான பிரம்ம ஆசனம் பெறக்கூடும்.

ஆத்மாவைக் கொல்லுகிறவன் மனமே ஆகும். மனத்தின் வடிவமே சங்கல்பங்கள் மயமே. மனத்தின் உண்மையான தன்மை வாஸனைகளிலே அடங்கிக் கிடக்கின்றன. மனத்தின் செயல்கள் மாத்திரமே நிஜமாக கர்மங்கள் என்று அழைக்கப்படுகின்றன. மனம் பிரம்மத்தின் சக்தியின் மூலம் பிரபஞ்சமாகத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிறது. பிரபஞ்சம் இது தவிர வேறல்ல. மனம் தேகத்தின் மீது தியானித்துத் தேகமாகியே விடுகிறது. அப்பால் தன் வலையிற் பிடித்துக் கொண்ட மனம் தேகத்தைப் பாதிக்கிறது. துன்பங்கள் இன்பங்கள் வடிவிலே மனம் தன்னையே வெளி உலகமாகத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிறது. மனம் கர்த்தாவாகி உணர்வு மயமாகிறது. அது போக்தாவாகி இந்த உலகமாகிறது. மனம் தன் சத்துரு விவேகத்தின் மூலம் அமைதியான பரப்பிரம்ம நிலையை எய்துகிறது. நித்திய ஞானத்தின் மூலம் மனம் ஆசைகள் அனைத்தும் களையப் பெற்று, தன் சூட்சும வடிவத்தை அழித்து விடும்போது எழுகிறதுதான் நிஜமான பேரின்பம். உன்னால் உற்பத்தி செய்யப்பட்ட சங்கல்பங்களும் வாசனைகளும் உன்னை வலையிற் சிக்க வைக்கின்றன. பரப்பிரம்மத்தின் சுவயம் ஜோதி மாத்திரமே மனமாகவும் அல்லது இப்பிரபஞ்சமாகவும் தோன்றுகிறது.

ஆன்மீக விசாரணை செய்யாதவன் சங்கல்ப இயல்பே தவிர வேறொன்றுமில்லாத இந்த உலகத்தை நிஜமெனவே காண்கிறான். இந்த மனத்தின் விஸ்தரிப்பு மாத்திரமே சங்கல்பம்; சங்கல்பம் பேதப்படுத்தும் தன் சக்தியால் இப்பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கிறது. சங்கல்பங்களின் நாசம்மாத்திரமே மோக்ஷம். ஆத்மாவுக்குச் சத்துரு இந்த அசுத்த மனமே தான்; அது மிதமிஞ்சிய பிரமைகளும் உலகாயத எண்ணங்களாகிய கும்பல்.

கவர்ச்சிகரமான தோற்றத்தை உடைய பொருள்கள் யாவும் கண்வழிக் காட்சிகளாகி, முன்னைய உணர்ச்சிகளுக்கு மாறுபட்ட உணர்ச்சிகளை வழங்குமேயானால், அப்போது, மனம் அழிந்துபட்டதாகும். உன் சொத்துக்கள் எல்லாம் பயன் அற்றவை. செல்வமனைத்தும் உன்னை அபாயங்களிலே செலுத்திவிடும். பற்றின்மை நித்திய பேரின்பப் பதத்திற்கு உன்னை இட்டுச் செல்லும். வாசனைகளையும் சங்கல்பங்களையும் அழித்து விடு. அகங்காரத்தைக் கொல்லுவாயாக. இம் மனத்தை நாசம் செய்வாயாக. சாதனை சதுஷ்டயங்களினால் நீ ஆயத்தப் படுத்திக் கொள்வாயாக. நித்திய, தூய, சர்வவியாபகமான ஆத்மாவைத் தியானிப்பாயாக. ஆத்மஞானம் எய்தி அமரத்துவம், சதாநீடிக்கும் ஸாந்தி, நித்தியானந்தம் சுதந்திரம் மற்றும் பரிபூரணம் ஆகிய அனைத்தும் பெறுவாயாக.

# 1. முதலாவது வைராக்கியப் பிரகரணம்

"ஹரி ஓம்"

எவரிடமிருந்து எல்லா ஜீவர்களும் தோன்றினவோ எவரால் அவை காப்பாற்றப்பெற்று வருகின்றனவோ, எவரை அவை சார்ந்திருக்கின்றனவோ, இறுதியில் மகாபிரளயத்தில் எவரிடத்தில் ஐக்கியமாகி விடுகின்றனவோ அத்தகைய சச்சிதானந்த பரப்பிரம்மத்திற்கு வணக்கங்கள் உரித்தாகுக.

யோகவாசிஷ்டம் என அழைக்கப்படும் இந்நூலை வாசிக்க யோக்யதை வாய்ந்த அதிகாரிகள் சம்சாரச் சகதியில் முற்றிலும் ஆழ்ந்து கிடக்கும் அஞ்ஞானிகளாகவோ ஏற்கனவே ஆத்மஞானம் எய்திய ஜீவன் முக்தர்களாகவோ இல்லாமல், பந்தத்தில் சிக்கிய உணர்வுடையவர்களாகிய, ஜனன மரணங்களிலிருந்து விடுதலை பெறும் தீர்க்க ஆர்வம் படைத்தவர்களாகவே இருத்தல் வேண்டும்.

பரத்துவாஜ முனிவர் "ஓ, மரியாதைக்குரிய மஹா குருவே! முதலில் இராமரைப் பற்றித் திருவாய் மலர்ந்தருளுங்கள், அப்பால் அடியேன் இறுதி மோக்ஷத்தை எப்படி எய்துவது என்பதைப்பற்றி எடுத்துக் கூறுங்கள்" என்று கூறினார். வால்மீகி முனிவர், "ஓ, பரத்துவாஜா! இராமர் தமது குருவின் திவ்யமான உபதேசங்களைக் கடைப்பிடித்து ஆத்மசாக்ஷாத்காரம் பெற்றார். குரு வசிஷ்டர் இராமபிரானுக்குச் சுட்டிக்காட்டிய மார்க்கத்தைத் தியானித்துக் கொண்டிருந்து பின் ஜனன மரணங்களிலிருந்து உங்களை விடுவித்துக் கொள்ளுங்கள்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

இராமபிரான் தீர்த்த யாத்திரைக்குரிய புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசிக்க விரும்பினார். தமது குரு, தந்தை இருவரிடமும் அனுமதி பெற்றுக்கொண்டு அவர் புனிதமான யாத்திரை செய்யப் புறப்பட்டார். எல்லா புண்ணிய க்ஷேத்திரங்களையும் தரிசித்து விட்டுத் திரும்பினார். அப்போது இராமருக்குப் பதினைந்து வயதுதான் நிரம்பியிருந்தது. அவருடைய உடல் வரவர மெலிந்து வந்து

மலர்ந்த செந்தாமரை போன்ற முகம் வெளிறிப் போயிற்று. அவர் பத்மாசனத்தில் அசையாமலும் அமைதியோடும் அமர்ந்து சிந்தனையில் மூழ்கினார். அன்றாட அனுஷ்டானங் களைப்புரிய அறவே மறந்தார். அவரது துயரத்துக்கும் சிந்தனைக்கும் காரணம் பற்றிக் கூறுமாறு தசரதர் அடிக்கடி இராமரைக் கேட்டார். ஆனால் இராமரோ எவ்விதப் பதிலும் சொல்லவில்லை.

இத் தருணத்தில், சக்கரவர்த்தியின் இராஜ சபையில் விஸ்வாமித்திர மஹரிஷி பிரவேசித்தார். அம் முனிவரைத் தசரதர் தக்க மரியாதைகள் செய்து வரவேற்று, "கண்ணியமிக்க முனிபுங்கவரே! தங்கள் வருகையின் நோக்கம் அடியேனுக்குத் தெரியப்படுத்துங்கள். என்னிடமிருந்து தாங்கள் பெறவிரும்பும் எந்தப் பொருளையும் விட்டுப்பிரிய நான் ஒப்புக் கொள்கிறேன்" என்று கூறினார். அதன் பிறகு விஸ்வாமித்திரர் பேசத் தொடங்கி, "நான் மகாயக்ஞம் ஒன்று புரிகிறேன். இராக்ஷதர்கள் எனக்கு மிகவும் தொந்தரவு படுத்துகிறார்கள். தயவுசெய்து தங்கள் மூத்த குமாரன் இராமனை என்னோடு அனுப்புங்கள். இக்கொடிய இராக்ஷஸர்களையெல்லாம் அவன் கொல்லுவான்" என்று தமது நோக்கத்தைப் பிரஸ்தாபித்தார். தசரதர் "இராமன் சிறியவன், இராக்ஷதர்களோடு போர் புரிய அவனால் முடியாது. அவன் பிரிவை க்ஷணநேரம் கூட நான் பொறுக்கமாட்டேன். எனக்கு வயதாகிவிட்டது. மிக்க கவலைப்படுகிறேன்" என்று இரங்கிய குரலில் உரைத்தார். இதைக் கேட்டதும் விஸ்வாமித்திரர் கடுங்கோபத்துடன் "தாங்கள் எந்தப் பொருளையும் விட்டுப் பிரிவதாக உறுதியான வாக்குத் தத்தம் செய்தீர்கள். இப்போது உங்கள் வாக்குத் தத்தத்தை நிறைவேற்ற விரும்பவில்லை. தாங்கள் கண்ணியமில்லாத அரசர்" என்று முழங்கினார். அப்போது வசிஷ்டமஹரிஷி குறுக்கிட்டுத் தசரதரைப்பார்த்து "அரசே! தங்கள் வாக்கு தத்தத்தைக் காப்பாற்றவேண்டும். விஸ்வாமித்திரர் இராமனைக் கவனமாய்ப் பாதுகாத்துக் கொள்வார்" என்று பேசினார்.

தசரதர் இராமருடைய ஏவலாளர்களைப் பார்த்து "என் மகன் இராமனை விரைவில் இங்கே அழைத்து வாருங்கள்" என்று ஆக்ஞாபித்தார். ஏவலாளர்கள், "தீர்த்த யாத்திரை முடித்து வந்தது முதல் அவர் தினசரி அனுஷ்டானங்களைக் கூட புரிவதில்லை; ஸ்நானம், உணவு நல்ல ஆடை இவற்றைப் புறக்கணிக்கிறார். தமது வாணாள் வீணாகக் கழிந்து போகிறதென்றும் இவ்வுலகம் நிஜமல்ல என்றும் அவர் கூறுகிறார். ஓர் துறவியின் வாழ்க்கையை நடத்துகிறார். இவ்வுலகப் பொருள்கள் அவருக்குக் கவர்ச்சியாக இல்லை. துன்பமும் கவலையும் இல்லாத ஜீவன் முக்த நிலையை அடைய அவர் விரும்புகிறார்" என்று சாங்கோபாங்கமாய்ச் சாற்றினார்கள். வசிஷ்டர் இராமரை அழைத்து வருமாறு ஏவலாளர்களிடம் கூறினார். அப்பால் சபையைப் பார்த்து பின் வருமாறு பேசலானார் : "இராமன் வைராக்கியத்தை சாதிக்கிறான்; விரைவில் அவன் பிரம்மஞானம் அடைவான். அப்பால் எல்லாக் காரியங்களையும் அதிக சந்தோஷத்துடன் செய்வான்" இராமர் இராஜ சபையில் வந்து தமது குரு வசிஷ்டர், முனிவராகிய விஸ்வாமித்திரர், தந்தை தசரதர் ஆகிய அம்மூவரையும் வணங்கினார்.

சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்த ஸ்ரீஇராமரைப் பார்த்து விஸ்வாமித்திரர் "உன் இதயத்தைத் திறந்து சொல். உன் துயருக்கான காரணம் யாது?" என்று கேட்க, ஸ்ரீஇராமர் பேசத் தொடங்கி, "ஓ, மகத்துவம் மிகுந்த விஸ்வாமித்திர முனிவரே! தங்கள் சொற்படி அடியேன் நடக்கச் சித்தமாயிருக்கிறேன். தயவு செய்து கேளுங்கள்" என்று பின்வருமாறு சொற்பொழிவாற்றினார்.

"இவ்வுலகம் நிஜமல்ல; இவ்வுலகில் இம்மியளவு சந்தோஷம் கூட கிடையாது. சாகவே மனிதர்கள் பிறக்கிறார்கள். மீண்டும் பிறக்கவே அவர்கள் இறக்கிறார்கள். ஆகையால் இவ்வுலகில் எல்லாம் மாயை. வைராக்கியத்தை விருத்தி செய்கிறேன். எனவே புலன் நுகர்வு எண்ணங்கள் அனைத்தும் நான் தள்ளிவிட்டேன். மனத்தின் வஞ்சகத் தன்மை பற்றி ஒருவன் தெரிந்துகொள்ளவேண்டும்.

உலகத்தின் இருப்பு உண்மை என்று இம் மனம் மாத்திரமேதான் படம் பிடித்துக் காட்டுகிறது. ஆத்மா மட்டுமே உண்மை. இந்த மாயமான உலகத்தை நான் முற்றிலும் வெறுக்கிறேன். இப் பிரம்மாண்டமான சம்ஸாரத் துயரங்களினின்று விடுதலை பெறுவதற்கான மார்க்கத்தை நான் கண்டுபிடிக்க முயன்று கொண்டிருக்கிறேன். இவ்வெண்ணம் என்னைக் காட்டுத் தீ போன்று எரிக்கின்றது".

### செல்வம்

"செல்வம் சந்தோஷத்தை அளிக்கமுடியாது. அது கவலைக்கு மூல ஊற்று. அது அநித்தியமானது. அது ஒருபோதும் நிலையானதல்ல. ஒருவனிடமிருந்து இன்னொருவனிடத்தில் அது சென்றுகொண்டே இருக்கிறது. அது தீமையைக் கொடுக்கிறது. மாயமான கானலைப்போல அது மக்களை ஏமாற்றுகிறது. மனிதனுடைய இதயத்தைக் கடினமாக்குகிறது. தீயமார்க்கங்களிலே எல்லா வகைகளிலும் அது சம்பாதிக்கப்படுகிறது. செல்வம் மனிதனிடத்தில் அகம்பாவத்தை உண்டு பண்ணி கடவுளை மறக்கச் செய்கிறது".

### வாழ்வு

இந்த வாழ்வு அநித்தியம். இது நீர்க்குமிழி போன்றுள்ளது. கவலைகள், சோகங்கள், தொல்லைகள் நிறைந்த இந்த உலகாயத வாழ்வை அஞ்ஞான மூட மனிதன் விடாது பற்றிக் கொண்டிருக்கிறான். இவ்வுடல் பெரிய சுமை. உலக வாழ்வு துயரத்துக்கும் வேதனைக்கும் இருப்பிடம். மரணமோ சதாகாலமும் நம் முகத்தைப் பார்க்கின்றது. பல்வேறு நோய் நொடிகள் இவ்வுடலுக்கு மிகுந்த அபாயத்தை உண்டு பண்ணுகின்றன. இளமைப்பருவம் நம்மை விரைவில் விட்டு அகன்று முதுமைப் பருவம் பலவீனத்துடன் உடல் அழிவோடும் நம்மை எட்டிப் பிடித்துக்கொள்கிறது. ஆத்மவிசாரத்தை இடைவிடாமல் பயிற்சி செய்து கொண்டிருக்கிறவன் பெருந்தன்மையான வாழ்வை நடாத்துகிறான். பிரம்மக்ஞானம் எய்தியதன் மூலம்

புனர்ஜனனங்களிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டவன் பெருந்தன்மையான மெய்யான வாழ்வை நடாத்துகிறான். இதர மக்களுடைய வாழ்வு கிழட்டுக் கழுதைகளினுடைய வாழ்வைப் போன்றிருக்கிறது. இங்ஙனம், இந்த வாழ்வு நல்லியல்பு எதுவும் இல்லாததாய், சதா காலமும் கவலைகளுக்கும் வேதனைகளுக்கும் நோய்களுக்கும் மரணத்திற்கும் உட்பட்டிருக்கிறது. எனவே, இந்த வாழ்வைப் போல யோக்கியதை அற்றது எதுவும் கிடையாது.

## அஹங்காரம்

அழிவுக்கேதுவான இந்த அகங்காரத்திற்கு நான் நிரம்பவும் பயப்படுகிறேன். இது ஆடைகளும் வேதனைகளும் நிறைந்த செயல்களை உற்பத்தி செய்த வண்ணம் எல்லாக் கேடுகளுக்கும் மூலமாய் அமைகிறது. இது மாயமானது. இது மக்களை ஏமாற்றுகிறது. அஹங்காரம் ஒன்றுமில்லாதது; எனினும் உலகாயத மக்களுக்கு இது சர்வ அத்தியாவசியமாய் அமைகிறது. இது மமகாரத்தோடு (என்னுடைய என்ற கோட்பாடு) தொடர்புகொண்டது. அவித்தை அல்லது அஞ்ஞானத்திலே இது ஜனித்துள்ளது. இது பொய்யான அகந்தையிலிருந்து வெளிப்படுகிறது. வீண் பெருமை இதனை வளர்க்கிறது. இது வலுவான சத்துரு; அபாயகரமான இந்த அகங்காரத்தை ஒருவன் அகற்றினால் அவனுக்குச் சந்தோஷம் உண்டாகும். துறவின் மர்மம் அகங்காரத்தின் துறவே ஆகும். அஹங்காரம் உள்ளத்தைத் தனது இருப்பிடமாகக் கொண்டுள்ளது. அஹங்கார வெறியினாலேயே மனிதன் கேடுகளையும் தவறான காரியங்களையும் புரிகிறான். அது ஆழமாக வேரூன்றி உள்ளது. அகங்காரத்தினின்று ஆத்திரங்களும் தொல்லைகளும் கிளம்புகின்றன. அஹங்காரம் ஓர் திண்மையான நோய். கர்வம், காமம், கோபம், பிரமை, பேராசை பொறாமை, ஆசை பகைமை ஆகிய அனைத்தும் அஹங்காரத்தினுடைய ஏவலாட்கள். அஹங்காரம் நமது நல்லியல்புகளை அழித்து மனச்சாந்தியைப் போக்குகிறது. நம்மை அதில் வீழ்த்திக்கொள்ளும் பொருட்டு அது அன்பு எனும் வலையை விரிக்கின்றது.

அஹங்காரத்தினின்று விடுபட்டவன் சதா மகிழ்ச்சியோடு ஸாந்தி அடைகிறான். அஹங்காரத்தின் பொருட்டு ஆசைகள் மல்கிப் பெருகி விடுகின்றன. நமது மூர்க்கமான சத்துருவாகிய அஹங்காரம் நம் மீது நமது மனைவி, மக்கள் மற்றும் சினேகிதர்கள் ஆகிய வசியம் பண்ணும் மோஹன இனங்களை விரித்துவைத்துள்ளது. இவர்களுடைய மோஹனம் நிறைந்த கவர்ச்சிகளை உடைத்தெறிவது கடினம். அதிக சக்தி படைத்த சத்துரு அஹங்காரத்தைக் காட்டிலும் வேறே எதுவும் கிடையாது. மகாஞான தவசிரேஷ்டரே! இந்த விஷம் நிறைந்த அகங்காரத்தினின்று நான் விடுதலை பெறுமாறு என்னை ஆசீர்வதியுங்கள்.

## மனம்

ஆபத்தான இந்த மனம் அஹங்காரத்தின் மூலமே கிளம்புகிறது. குறும்புத்தனமுள்ள மனம் ஒரு பொருளிலிருந்து மற்றொன்றுக்கு தெரு நாய் போன்று அலைந்து திரிகிறது; ஒருபோதும் அதற்கு ஒய்வு என்பதே கிடையாது. புலன் நுகர்வு இன்பங்களை நாடி அது ஓடுகிறது. அது சஞ்சலத்தன்மை வாய்ந்தது. அது சதா தனது தீய ஆசைகளிலே சிக்கிக் கொள்கிறது. சமுத்திரத்திலுள்ளதையெல்லாம் குடிக்கச் சாத்தியப்படும்; மேருபர்வதத்தை வேரோடு பிடுங்கிவிடக் கூடும் அல்லது எரிகிற தீபத்தை விழுங்கவும் சாத்தியமாகும். ஆனால் இந்த பயங்கரமான மனத்தை அடக்குதலோ முடியாது. இந்த மனத்தின் காரணத்தாலேயே இவ்வுலகம் தோற்றம் பெறுகிறது. இம்மனத்தின் மூலமாகத் தான் துயரங்கள் யாவும் உற்பவிக்கின்றன. விவேகம், ஆத்மவிசாரம் ஆகியவை மூலம் இந்த மனம் நாசஞ் செய்யப்பட்டுவிட்டால், துயரங்கள் அனைத்தும் இந்த உலகத்தோடு மறைந்துபோகும்.

## ஆசை

ஸாந்திக்குச் சத்துரு ஆசை, நமது உள்ளங்களாகிய பிராந்தியத்திலே நமது ஆசைகளாகிய இருட்டிலும் நமது பேராசை என்கிற இரவிலும், பறந்து திரியும் ஒரு ஆந்தையைப் போன்றது ஆசை. நமது நல்லியல்புகளையெல்லாம் அது நாசம் பண்ணுகிறது. பொறியில் சிக்கிய பறவை போல,

ஆசைகளாகிய பொறியிலே நான் சிக்கிக்கொண்டேன். ஆசைக்கனல் என்னை எரித்துச் சாம்பலாக்கிவிட்டது. அமிர்தத்தில் ஸ்நானம் செய்தால் அதுகூட என்னைக் குளிர்விக்காது. புனர் ஜனனங்களுக்கும் சகலவிதமான துயரங்கள், வேதனைகள், கவலைகள் ஆகியவற்றுக்கும் ஆசையே காரணம். அது கூர்மை பொருந்திய வாளாயுதம் போன்றது. மக்களின் இதயங்களிலே அது ஊடுருவிப் பாய்ந்து அவற்றைத் துவம்சம் செய்து வெறுமையாக்குகின்றது.

## உடல்

இவ்வுடல் கொழுப்பு மாமிசம், எலும்புகள், நரம்புகள், தசைநார்கள், இரத்தம் ஆகியவற்றால் ஆக்கப்பட்டது. இது நோய்களுக்கு இருப்பிடம். அது அசுத்தங்கள் நிறைந்தது. அழுகிவிடக் கூடிய போக்கு படைத்தது. அகங்காரம் எனும் யஜமானன் இவ்வுடலிலே பேராசை எனும் யஜமானியோடு வசிக்கின்றான். அவனுக்கு குறும்புத்தனம் வாய்ந்த இந்திரியங்கள் எனும் பசுக்கள் பத்து உண்டு. மனமோ இவனுடைய ஏவலாள். இவ்வுடல் நீர்க்குமிழி போன்றது; க்ஷண நேரத்தில் அது மாண்டு போகும்; இது காற்று நிறைந்த பை. எந்நேரத்திலும் அது வெடிக்கும். மீன் நிறைந்த பானை போன்றது இது. எந்நேரத்திலும் உடைபடும். தளதளப்பான மேல் தோல் வயோதிகக் காலத்திலே சுருக்கங்களுக்கும் மடிப்புக்களுக்கும் இலக்காகும். தூய அமரத்துவ ஆத்மாவென்று இவ்வுடலைத் தவறாகக் கருதி, சந்தோஷத்திற்கும் ஸாந்திக்கும் இதைச் சார்ந்திருப்போர்கள் சீச்சீ, அவமானமடையட்டும். மின்னலின் ஸ்திர நிலையிலும், மேகங்களிலுள்ள நகரத்திலும் நம்பிக்கைகொண்டவன் இந்த உடலை மெய்யென்று பற்றிக் கொண்டிருப்பான்.

## குழந்தைப் பருவம்

குழந்தை ஆதரவற்ற நிலையில் உள்ளது. அது தன் கருத்துக்களை உணர்த்த முடியாது. அது ஊமை. அது கழிவுப்புழுதிகளைத் தின்கிறது. காரணமின்றி அழுகிறது. அது அறியாமை படைத்தது. இப்பருவம் எப்போதும் நெருப்பு நீர் இவற்றின் அபாயங்களினால் பாதிக்கப்பட்டுள்ளது. அது

எளிதில் கோபமூட்டத்தக்கதாய் இருக்கிறது. அறிவற்ற இப்பாலியப் பருவம் வாழ்வில் சந்தோஷமான காலம் என்று எவ்வாறு கூறப்படும்?

## யௌவனப் பருவம்

வாழ்க்கையின் இப்பருவத்தில் இளைஞன் காமத்திற்கு அடிமையாகிறான். தீய எண்ணங்களினால் அவன் மனம் நிறைந்துள்ளது. துஷ்கிருத்தியங்கள் பலவும் செய்கிறான். அவனுடைய நல்லியல்புகள் மறைகின்றன. மோக உணர்ச்சியால் அவன் முகம் பாதிக்கப்பட்டு உருமாறுகிறது. யௌவனப் பருவம் விரைவில் கழிந்துபோகின்றது. யௌவனப் பருவத்தின் கவர்ச்சி மின்னலைப் போல வேகமாக வாடி வதங்கிப் போகிறது. நிலையற்ற தனது யௌவனப் பருவத்திலேயே அறிவில்லாமல் இன்பம் நுகருகிறவன் மானிட மிருகம் என்று கருதப்படுகிறான். வெகு சொற்ப காலத்திலே, இவன் செய்த குற்றத்திற்குப் பச்சாத்தாபப்படுகிறான். நற்குண நன்னடத்தையும் ஈவிரக்கமும், தயாளசிந்தையும் படைத்தவனும், மஹான்களிடம் பேரிணக்கம் கொண்டு அவர்களுக்கு தொண்டு புரிவதிலே தனது வாழ்நாளைப் பயன்படுத்துகிறவனுமான ஓர் யௌவன வாலிபனைக் காண்பது மிக அரிது. சாஸ்திரப் படிப்பிலே நிபுணத்துவம் பெற்றாலும் காமத்திற்கு அடிமையாயிருப் பார்கள். யௌவனப் பருவத்திய தடைகள் அனைத்தையும் தள்ளியெறிந்து இளமைப்பருவத்திலேயே ஆத்மஞானம் எய்திய வாலிபன் யாவராலும் போற்றுதற்குத் தகுதி வாய்ந்தவனாகிறான்.

## காமம்

மாமிசம், எலும்புகள், நரம்புகள், கொழுப்பு, ஊன், இரத்தம் ஆகியவற்றின் சேர்க்கையால் ஆன உடம்பு படைத்த ஓர் ஸ்திரியிடம் என்ன அழகு இருக்கிறது? சிறிது காலத்திற்கு மாத்திரமே ஒரு ஸ்திரீ கவர்ச்சியாகிறாள். அவள் பிரமைக்குக் காரணம் தோல் சுருக்கங்கள் கொண்ட கிழவிக்கு அழகு எங்கே உள்ளது? பெண்கள் தீய குணங்களின் நெருப்பு ஜ்வாலைகள்; நெருப்பு வைக்கோலை எரித்துவிடுவது போல

அவர்கள் மனிதனை எரித்துவிடுகிறார்கள். அவர்கள் தொலைவிலிருந்தே எரித்துவிடுகிறார்கள். ஆகையால் பெண்கள் நெருப்பைக் காட்டிலும் அதிக சக்தி படைத்தவர்கள்; மிருதுவான சரஸலீலைகள் பௌருஷ சக்திகளை எவ்வாறு பாழ்படுத்துகின்றன? அவளுடைய மோகாவேச ஆலிங்கனம் எவ்வாறு ஆடவர்களுடைய நல்லறிவைக் கெடுக்கின்றன? அழகிய யௌவனப்பெண், மோகவெறியூட்டி வாழ்வைப் பாழாக்கி விவேகமாகிய சக்தியை நாசப்படுத்தும் நச்சுக்கொடி போன்றவள். காமாந்தகார அறிவிலி ஒருவன் மயக்கும் இரையாகிய பெண்ணிடம் சிக்கி அசுத்த ஆசையாகிய கயிற்றால் இழுக்கப்படுகிறான். இந்த மர்மமான பிரபஞ்சம் பெண்ணைக் கொண்டு தொடங்கி வாழ்வு தொடர்ச்சிக்காக பெண்களையே சார்ந்திருக்கிறது. ஓர் மாது துர்மார்க்கப் பாபரத்தினங்கள் எல்லாம் கொண்ட ஓர் பெட்டி. சதாகாலமும் நீடித்துக்கொண்டிருக்கிற நமது துன்பச் சங்கிலிக்கு அவளே காரணம். அவளுடைய மார்பகங்கள், நேத்திரங்கள், இடை, கண் இமைகள் இவற்றின் சத்து மாமிசமே தவிர மற்றொன்றுமில்லை. இவை பயன் அற்றவை. இவற்றால் நான் என்ன செய்வது? மாதர் மீதுள்ள மோகம் மறைந்தால் பிரபஞ்ச பந்தங்கள் அனைத்தும் முடிவு பெற்றுவிடும். இதன் துறவு இல்லாமல் நித்திய பிரம்மானந்தம் பெறுவதற்கு எங்ஙனம் நான் எதிர்பார்க்கக் கூடும்? கருவிழி கொண்ட யௌவன அழகிகள் மோகாந்தகார அறிவிலிகளை அகப்படுத்திக்கொள்ளும் பலவித பொறிகள் ஆவார்கள். காமதேவனால் படைக்கப்பட்ட பொறிகள் இவை. மூடர்களால் நிரம்பவும் ஆசையோடு ஆலிங்கனம் செய்யப்பட்ட இந்த அழகு ரதிகளின் உடல்கள் பிராணன் பிரிந்த பின் மயானத்திற்குக் கொண்டு போகப்படுகின்றன. மிருகங்களும் புழுக்களும் அவர்களின் மாமிசத்தை பிடுங்கித் தின்னுகின்றன. நரிகள் அவர்களின் தோலையும் மாமிசத்தையும் கிழித்துவிடுகின்றன. இந்த நிலையற்ற மாயமான சிற்றின்பத்தை அனுபவிக்க நான் விரும்புவதில்லை.

திரும்பத் திரும்ப ஏற்படுகின்ற புனர் ஜனனங்களுக்கு முற்றுப் புள்ளியிடுகிற மேலான பிரம்மானந்த நிலை எய்துவதற்கு மாத்திரமே நான் அவாவுகிறேன்.

## முதுமைப் பருவம்

முதுமைப்பருவம் உடலை வாடச்செய்து அதன் அழகை ஒட்டிவிடுகிறது. குடும்ப அங்கத்தினர்களால் கிழவன் இகழ்ச்சியுடன் நடத்தப்படுகிறான். கிழவன் ஆதரவற்ற நிலையில் தடுமாறுகிறான். அவனது புலன்கள் குளிர்ந்துவிட்டன. அவன் தன் ஆசைகளைப் பூர்த்தி செய்துகொள்ள முடியாது. நல்ல ஞாபக சக்தியும் இல்லை. சொஸ்தப்படுத்த இயலாத பல நோய்களால் பீடிக்கப்பட்டு அவஸ்தைப்படுகிறான். இன்பங்களைக் குறித்த ஆசையோ திருப்திப்படுத்த முடியாதபடி இருந்தபோதிலும் இன்பங்களை அனுபவிக்கச் சக்தி கிடையாது.

அவன் இதயத்தை ஆசைகள் எரிக்கின்றன. ஆனால் தன் ஆசைகளைப் பூர்த்தி செய்யச் சக்தியற்றிருக்கிறான். மரணம் மனிதனின் நரைத்த தலையை முதுமைப்பருவம் எனும் உப்புபோட்டு பக்குவப்படுத்தப்பட்ட பூசணிக்காய் என எடுத்துக் கொண்டு மிக்க மகிழ்ச்சியோடு உண்ணுகிறது. இவ்வுலகத்தில் முதுமைப் பருவம் தடுக்க முடியாதது. அழிவுக்கும் முதுமைக்கும் இலக்காகிற துயரமான இவ்வுலக வாழ்வினால் என்ன நலம் ஏற்படுகிறது?

## காலம்

காலமானது இப்பிரபஞ்ச வாழ்க்கையெனும் நூலை அறுத்துத் தள்ளும் ஓர் எலி. எதையும் விழுங்கும் காலம் இவ்வுலகிலே எதையும் விட்டுவைப்பதில்லை. மகா மகாப் பிரபுவாயினும் காலம் ஒருக்ஷணப்பொழுதும் விட்டு வைப்பதில்லை. எல்லாப் பொருள்களிலும் காலம் ஊடுருவியுள்ளது. காலத்திற்குச் சொந்தமென்கிற கண்ணுக்குத் தெரிகிற அம்சம் எதுவும் இல்லை. ஆனால் அது நாட்கள், மாதங்கள், வருடங்கள், யுகங்கள் என்று அழைக்கப்படும் ஓர் அளவுப் பிரகாரம் அமைகிறது. மகா பிரளயத்தின் போது காலதேவன் கழுத்து முதல் பாதங்கள் வரை தொங்கிக்

கொண்டிருக்கிற இறந்தோர்களின் எலும்புகளால் சேர்க்கப்பட்ட நீண்டதோர் சங்கிலியோடு அங்குமிங்குமாய் நடனமாடுவான். அவன் பிரம்மாண்டமான அக்கினி வடிவத்தைப் பிரளய காலத்திலே தாங்கியவாறு உலகம் முழுமையும் எரித்துச் சாம்பலாக்குகிறான். அவன் போக்கு எதுவும் தடுக்க இயலாது. பிரளய இறுதியிலே காலதேவன் தன் சொந்த சொரூபத்தையே இழந்து நித்தியத்துவத்திலே தானே கலந்து கொள்கிறான். குறுகிய நேர ஓய்வு எடுத்துக்கொண்ட பிறகு, மீண்டும் அவர் சிருஷ்டிகர்த்தா, இரக்ஷகர், ஸம்ஹார கர்த்தாவாகவும் எல்லோருக்கும் ஞாபகசக்தி ஊட்டுபவர்ாகவும் ஆகிறார். இங்ஙனம் காலம் விரிகிறது. இரக்ஷிக்கிறது. இறுதியில் எல்லாப் பொருள் களையும் நாசப்படுத்துகிறது - இதெல்லாம் லீலை.

இம்மனம் மாதர்களின் கூட்டுறவில் தன்னை வீணாக்கிக் கொள்கிறது. அப்பால் உடல் முதுமைப் பருவத்தினால் கூனிவிடுகிறது. மரணத்தின் போது தான் செய்த மதியீனமான காரியத்திற்காக மனிதன் கவலைப்படுகிறான். இன்று பட்டு வஸ்திரங்களால் உடுத்தப் பெற்றும் நறுமண மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பெற்றும் கம்பீரமாகத் காட்சி தரும் உடல் நாளைக்கு எரியூட்டப்பெற்று ஆழமான பாதாளத்தில் தள்ளப்பட இருக்கிறது. மகா பிராணாபத்தான விஷம் விஷம் அல்ல; ஆனால் புலன் நுகர்வுப் பொருள்கள் அதி உக்கிரமான விஷமாய் இருக்கின்றன. விஷமோ நமது ஒரு உடலை மாத்திரம் வாங்கிக் கொள்ளும். ஆனால் புலன் நுகர்வுப் பொருள்களோ தொடருகிற புனர் ஜனனங்களிலே எடுக்கும் அநேக உடல்களை அழிக்கின்றன. நீர்மேலுள்ள குமிழி போன்று, இவ்வுலக வாழ்வு அநித்யம். இன்பங்களோ மின்னலைப் போல நிலையற்றதாயிருக்கின்றன. வாலிப காலத்துச் சந்தோஷ வாழ்வு நிலையற்றது.

மரியாதைக்குரிய மகரிஷியே! துக்கம், அச்சம், உலகாயதத் தொல்லைகள் இல்லாமல் பேருண்மை ஜோதியைப் பெறும் வழியைக் கற்றுக் கொடுங்கள். ஹிம்சைகள், பலவீனங்கள், ஐயம், பிரேமை இவைகளே

இல்லாத நித்தியபதம் எதுவென்று எனக்குச் சுட்டிக் காட்டுங்கள். முனிபுங்கவரே! ஜனன மரணச் சம்பந்தமாய் எழுகிற தொல்லைகளே கலக்காத வாழ்வு, அதன் நிலை என்ன என்பதைக் கூறுங்கள். நித்தியமாய் நீடிக்கிற ஸாந்தியும் நித்தியானந்தமும் அமரத்துவமும் எய்துதற்குரிய மார்க்கத்தை எனக்குக் காட்டுங்கள்.

இங்ஙனம் ஸ்ரீராமர் தசரத சக்கவர்த்தியின் இராஜசபையில் கூடியிருந்த முனீஸ்வரர்கள் முன்னிலையில் பெருத்த உபந்நியாசம் புரிந்தார்.

31

## சுகதேவர் சரித்திரம்

விஸ்வாமித்திரர், "ஓ ராமா! விவேகம், வைராக்கியம், தூய பகுத்தறிவு, புத்திசாலித்தனம், தெளிவாகத் தெரிந்து கொள்ளும் திறமை இவை யாவும் வாய்க்கப்பெற்றிருக்கிறாய். நீ மேலும் கற்க வேண்டியவை எவையும் இல்லை. வியாச மகரிஷியினுடைய குமாரர் சுகதேவரைப் போல உனக்கு ஆத்மஞானம் இருக்கிறது. சகஜஞானத்தின் மூலம் சுகதேவர் அறிவு பெற்றிருந்தாலும் கூட, தனது ஆத்ம அனுபவங்களை ஊர்ஜிதப்படுத்துவதற்காக சில உபதேசங்களைப் பெறக்காத்துக் கொண்டிருந்தார்" என்று தொடங்கினார்.

ஸ்ரீராமர் "உத்திருஷ்ட முனிவரே! தனது அறிவின் திறமையை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ளாத சுகதேவர் கடைசியில் எங்ஙனம் நம்பிக்கை கொள்ளலானார்?" எனக் கேட்டார். விஸ்வாமித்திரர் கூறலானார், ஸ்ரீராமா! சுகதேவருடைய சரித்திரத்தையே நான் கூறுகிறேன். அவருடை நிலை உனது நிலையையே சரியாக ஒத்திருந்தது. அவருக்கு ஆன்மீக ஞானம் உண்டு. உன்னைப்போலவே அவர் இவ்வுலகத்தின் நிலையற்ற தன்மையை அதிதீவிரமாய் சிந்தித்தார். உலகாயத சம்பந்தங்களில் எல்லாம் அவர் பற்றில்லாமலிருந்தார். ஆத்மஞானத்திற்கு அவர் அதிபதியாயிருந்தாலும் மனத்திலே கலக்கம் இருந்து வந்தது. தமது அறிவின் நிச்சயத்தைப் பற்றிய வலுவான கோட்பாடு ஏற்படவில்லை. எனவே அவருக்கு மனஅமைதியே இல்லாமலிருந்தது. அவர் தமது தகப்பனாரை அண்டி "பெருத்த துயரத்தை விளைவிக்கிற இந்த மாயை எங்கிருந்து உதிக்கிறது? அது எப்படி தணியும்? அதன் காரணம் என்ன? எவ்வளவு தூரம் அது விஸ்தரித்துள்ளது? எங்கே அது முடிவடையும்? இவ்வுலகம் எப்போது உற்பவித்தது? இவற்றிற்கு விடை கூறுங்கள்" என்று கேட்கலானார்.

வியாசர் சுகதேவருக்கு கேட்ட விஷயங்கள் சம்பந்தமாகச் சொல்ல வேண்டியதனைத்தையும் தெளிவாக விளக்கினார். சுகதேவருக்குத் திருப்தியில்லை. அதெல்லாம் தமக்கு ஏற்கனவே தெரியுமென்று அவர் நினைத்தார். எனவே வியாசர்

சுகதேவரை ஜனக மகாராஜாவிடம் போய் வினாக்களுக்கு விடை தெரிந்து கொள்ளலாமென்று கூறினார். அங்ஙனமே விதேகநாட்டுக்கு சுகதேவர் புறப்பட்டார். வியாசருடைய புத்திரர் சுகதேவர் வந்திருப்பதை அரண்மனை வாசல் காப்போன் ஜனக மகாராஜாவிடம் போய்க் கூறினான். ஆனால் ஜனகர் சுகதேவரை எதிர்கொண்டு வரவேற்கப் போகவில்லை. ஏனெனில் அவர் சுகதேவருடைய மனநிறைவான ஸாந்தத்தைச் சோதிக்க விரும்பினார். ஏழு நாட்கள் வரை வாசலில் சுகதேவர் காத்திருக்க நேர்ந்தது - ஆகாரமில்லாமல். எனினும் அவருடைய மனம் இம்மியளவுகூட நிலைகுலையவில்லை. அப்பால் அவர் உள்ளே முற்றத்தில் அனுமதிக்கப்பட்டார். அங்கே ஏழு நாட்கள் மேலும் அன்னமின்றி தங்கினார். அப்பால் அரண்மனையில் அந்தப்புரத்திற்குள் அவர் அழைத்துச் செல்லப்பட்டார். அதிதிவ்யமான போஜனம் சம்பிரமமாக வழங்கப்பட்டது. அழகிய மாதர்கள் அவருக்கு வாசனைத் திரவியங்களும் புஷ்பங்களும் சந்தனமும் கொடுத்து உபசரித்தார்கள். ஆனால் சுகதேவர் முற்றிலும் பற்றற்றிருந்தார். அந்த துன்பங்களோ இந்த இன்பங்களோ சுகதேவருடைய மனப்போக்கைப் பாதிக்கவில்லை. கடும் புயல்களுக்கும் அசையாத பாறைபோன்று அவருடைய மனநிலை உறுதி பெற்றிருந்தது. இத்தகைய சோதனைகள் மூலம் சுகதேவர் மேலான நித்திய ஸாந்தியை எய்திவிட்டாரென்று ஜனகமகாராஜா கண்டுகொண்டார். அவர் எழுந்து வந்து பிரம்மச்சாரியின் முன்பு வணங்கி நின்று "வாழ்க்கையின் குறிக்கோளை எய்திவிட்டீர்கள், உலகாயத சம்பந்தங்களையெல்லாம் நீக்கியதன் மூலம் மகோன்னதமான கனியைப் பெற்றிருக்கிறீர்கள். நீங்கள் என்னை நாடி வந்த காரணம் என்ன? தயவு செய்து கூறுங்கள். ஓ மகாத்மா! எப்போதும் தங்களுக்குத் தொண்டு புரியத் தயார்" என்று பணிவாகப் பேசினார்.

சுகதேவர் "மாயை எப்படி எழுந்தது? அது எப்படி வளர்கிறது? எப்படி அது ஒழிக்கப்படுகிறது? மரியாதைக்குரிய

குருதேவரே! இவற்றை விரிவாக விளக்குங்கள்" என்று கூறினார். தமது தகப்பனார் வியாசரிடமிருந்து தாம் கற்றுக்கொண்ட அதே விஷயங்களை ஜனகர் சுகதேவரிடம் கூறினார். அப்பால் சுகதேவர் "எனது சகஜஞானத்தின் மூலமும், அப்பால் எனது வினாக்களுக்கு என் தகப்பனார் தந்த பதிலிலிருந்தும் இந்த விஷயங்கள் யாவும் எவ்வளவோ முன்னரே தெரிந்துள்ளேன். அதே விஷயங்களையே தாங்கள் எடுத்துப் பேசினீர்கள். இவைகளே சாஸ்திரங்களின் உண்மையான தாத்பரியம் எனவும் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. அழியக்கூடிய இந்த மாயையிடமிருந்து ஒரு துளி நன்மைகூட ஏற்படவில்லை. மாயை பிரம்மத்தினிடமிருந்து மூச்சு அல்லது அதிர்வு வடிவத்திலே உற்பத்தியாகித் தானாகவே மீண்டும் அது பிரம்மத்திலே லயமாகிறது. தயவு செய்து ஆத்மா அல்லது பிரம்மத்தின் தன்மையைப் பற்றி எனக்கு விளக்கிக் காட்டுங்கள்" என்று கூறினார்.

ஜனகமகாராஜா "பிரம்மம் மாத்திரமே உள்ளது. அது அழியக் கூடாதது, பகுக்கவொண்ணாதது. அது சுயம் ஜோதி. அது எங்கணும் சர்வ வியாபகமான சிதாகாசமாய்ப் பரவியுள்ளது. பிரம்மத்தைத் தவிர வேறே எதுவும் இல்லை. சங்கல்பத்தால் அந்த ஞானம் கட்டுண்டு நிற்கும். சங்கல்பங்கள் அழிபட்டால் அது விடுபட்டு நிற்கும். தாங்கள் நிஜமாகவே மேலான பரம்பொருளை சாக்ஷாத்கரித்துவிட்டீர்கள். தாங்கள் ஆத்மஞானம் அடைந்துவிட்டீர்கள். ஆகையால், புலன் நுகர்வுப் பொருள்களிடத்தில் விருப்பமோ பற்றுதலோ தங்களுக்கு கிடையாது. அடையக்கூடிய அனைத்தையும் தாங்கள் பெற்றுவிட்டீர்கள். ஆசைகள் எல்லாவற்றையும் நீக்கி வெற்றி பெற்றுவிட்டதால், தாங்கள் ஒரு வீரர். பரிபூரண ஜீவன் முக்தர்; தாங்கள் பரம்பொருளோடு ஒருவராக ஆகிவிட்டீர்கள்" என்று மொழிந்தார்.

ஆத்மீக மர்மங்களைப் பற்றி ஜனகமகாராஜா சுகதேவருக்கு தீக்ஷை புரிந்தார். பரமாத்மாவின் மீது பதித்த ஸாந்தமான உள்ளத்தோடு சுகதேவர் விளங்கினார். அவருடைய சந்தேகங்களும் குழப்பங்களும் முற்றிலும்

மறைந்தன. அவர் மாயையின் பிரமையிலிருந்து விடுதலை அடைந்துவிட்டார். ஆயிரம் ஆண்டுகள் அவர் நிர்விகல்ப சமாதியில் இருந்தார். சமுத்திரத்தில் ஒரு துளி நீர் தானாகக் கலக்கிறது போல சுகதேவர் தாமாகவே பரமாத்மா அதாவது பேரானந்தப் பெருங்கடலிலே ஆழ்ந்துவிட்டார்.

விஸ்வாமித்திரர், "ஓ இராமா! நீயும் கூட சுகதேவர் பின்பற்றிய மார்க்கத்தை மேற்கொள்ள வேண்டும். ஆத்மஞானம் பெற்றவனுக்கு உலகாயத இன்பங்களிலே அருவருப்பு உண்டாகும். அவன் பொருள்களோடு தன்னை இணைத்துக் கொள்ளமாட்டான். பொருள்களிடத்தில் அருவருப்பு ஏற்படுவது மிக்க கடினம். பொருள்களைப்பற்றி மனம் ஓடுமானால் பந்தம் வலிமையாக்கப்படும். பற்றில்லையென்றால், பந்தம் தளர்த்தப்பட்டு இறுதியில் அழியும்; வாஸனைகளின் நாசமே மோக்ஷம் அதாவது இறுதியான விமோசனம். புலன் நுகர்வுப் பொருள்களை வாஸனைகள் மூலம் நாடி தாகங்கொண்டு ஏங்குகிற மனம் பந்தத்திற்கு இட்டுச் செல்லும். வாஸனைகளைக் களைந்தெறிந்தவர்களும், உலகாயத இன்பங்களிடத்தில் அலக்ஷியமாய் இருப்பவர்களும் விடுபட்ட முனிவர்கள். உனது சகஜ ஞானத்தினால் நீ தெரிந்து கொண்டவை யாவும் வசிஷ்ட மகரிஷியால் நிச்சயிக்கப்பட வேண்டும். கௌரவம் மிகுந்த வசிஷ்ட முனிவர் உயரிய உள்ளப் பாங்குடைய உன்னோடு தர்க்க ரீதியிலே பேசி உனக்கு மனச் சாந்தியை மீட்டித் தருவாராக. உன்னுடைய சந்தேகங்களைத் தீர்க்கவல்ல ஒரே புருஷர் அவரே தான்; உனக்கு ஸாந்தியும் சந்தோஷமும் ஊட்டுபவர் அவரே. ஏனெனில் அவர் சர்வக்ஞர் (எல்லாம் அறிந்தவர்)" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

விஸ்வாமித்திரர் வசிஷ்ட முனிவரைப்பார்த்து, "ஐயா! நம்மிருவரிடையே இருந்த பகைமையைத் தீர்த்துச் சமாதானப்படுத்துவதற்காக பிரம்மதேவர் நம் இருவருக்கும் உபதேசித்தருளிய அறிவுரைகள், ஞானக்கதைகள், போதனைகள் ஆகியவை தங்கள் ஞாபகத்திலிருக்கும். இப்போது அவற்றை இராமனுக்கு கற்றுக் கொடுங்கள். அவை

மனச்சாந்தி உண்டாவதற்கு உரிய துணைபுரியும். குருவினுடைய தீட்சையானது புலன்களை அடக்கி ஆசைகளை நீக்கியவனுக்கு மாத்திரமே பயன்படும். ஆனால் உலகை வெறுக்காத துஷ்டமாணவனுக்குச் செய்யப்பட்ட உபதேசமானது நாய்த் தோலால் ஆக்கப்பட்ட பையில் ஊற்றப்பட்ட பால் எவ்வளவு அசுத்தமாகிறதோ அவ்வளவு பயனில்லாமற் போய்விடுகிறது" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

தசரத சக்ரவர்த்தியின் இராஜ சபையில் கூடியிருந்த முனிவர்கள் அனைவரும் இந்த மகத்தான பேருரைக்காக விஸ்வாமித்திர முனிவரைப் பாராட்டினார்கள். வசிஷ்டர் "ஓ முனிசிரேஷ்டரே! எனக்குத் தாங்கள் கட்டளையிட்டதைத் தவறாமல் புரிகிறேன். நல்ல ஞானிகளுடைய உத்தரவுகளை யார் தான் நிறைவேற்ற மறுப்பார்கள்? ஜனன மரண வட்டத்தினின்று விடுவித்துக் கொள்வதற்காக தூய்மையான ஒருமைப்பட்ட உள்ளங்கொண்ட சன்மார்க்க சீலர்களுக்கு நிஷேத மலைகளிலே தாமரை மலரில் அவதரித்த பிரம்மதேவரால் போதிக்கப்பட்ட தூய ஞானக் கதைகளை இப்போது இராமனுக்கு உபதேசிக்கிறேன்" என்று கூறினார். அப்பால் இராமருடைய சந்தேகங்களை நீக்கி பரம ஸாந்தியும் நித்தியானந்தமுமான நிலையைக் காட்டுவதற்காகக் கீழ்க்கண்ட கதைகளை வசிஷ்டமாமுனிவர் இராமருக்குப் புகட்டலானார்.

## 2. முமுக்ஷுப் பிரகரணம் "ஹரி ஓம்"

வேதாந்தம் அல்லது ஞானமார்க்க நெறியில் செல்லுகிற சாதகன் ஒருவன் நான்கு வகை யோக்யதாம்சங்களைப் பெற்றவனாயிருத்தல் வேண்டும். அவை யாவை :

I. ஸத், அஸத் இவற்றைப் பகுத்தறிதல் ஆகிய விவேகம்; II இகத்திலும் பரத்திலுமுள்ள புலன் நுகர்வு இன்பங்களிலே வெறுப்பு வைராக்கியம். III ஷட்சம்பத்து ஆறுவகை நற்பண்பாடுகள் (1) சமநிலைப்பட்ட மனம் அதாவது சமம் (2) புலன்களை அடக்கிக் கொள்ளும் பண்பு தமம். (3) கர்மாக்களை துறத்தலாகிய பண்பு உபரதி (4) பொறுமை அதாவது சகிப்புத் தன்மை திதிக்ஷை (5) குருவிடத்தில் பக்தியும் அவருடைய உபதேசத்தில் நம்பிக்கையும் உள்ள பண்புக்கு சிரத்தை என்று பெயர். (6) உள்ளத்தின் ஏகாக்ர நிலையைக் காட்டும் பண்பு சமாதானம். IV. மோக்ஷத்திற்கான ஏக்கம்தான் முமுக்ஷுத்வம் என்பது.

வசிஷ்ட முனிவர், "சிறந்த புருஷார்த்தங்கள் மூலமாக ஒருவன் உலகில் எதை வேண்டுமானாலும் சாதிக்க முடியும். தன் துரதிர்ஷ்டத்தைத் தோல்வியுறச் செய்யக்கூடும். ஆத்மஞான சாஸ்திரங்களில் ஆராய்ச்சி மோக்ஷத்திற்கு இட்டுச் செல்கின்றது; உலகாயத அறிவைப் புகட்டுகிற சாதாரண சாஸ்திரங்களில் எடுத்துக்கொள்ளும் ஆராய்ச்சி பந்தத்திற்கே செலுத்தும். நான்கு வகை சாதன சதுஷ்டயங்களை மேற்கொண்டிருப்பவர்களும் மற்றும் இதர நற்பண்பாடுகளை வகித்தவர்களும் முனிசிரேஷ்டர்களோடு நட்பு பூண்டவர்கலும், சிறு பிராயந்தொட்டு ஆத்மஞான சாஸ்திரங்களைப் பயின்றவர்களும் மோக்ஷத்தை அடைகிறார்கள். ஒவ்வொருவரும் ஆத்மஞான நூல்களைக் கற்கச் சிரத்தையும் முனிவர்களின் ஞானோபதேசங்களை பெறுவதில் தீவிரமும் கொண்டு பரிபூரணம் எய்துவதில் தக்க முயற்சி மேற்கொள்ள வேண்டும். விதி என்பது அஞ்ஞானிகளின் உள்ளங்களிலே வேரூன்றிய பொய்யான கோட்பாடு" என்று உபதேசம் புரியலானார். ஸ்ரீஇராமர், "பூர்வ ஜன்ம வாஸனைகள் தக்க சிரத்தை மேற்கொள்வதற்கு என்னைத் தடுக்கின்றன. ஓ,

மரியாதைக்குரிய மகாதேவா! அப்பால் நான் என் செய்வது!" என்று சந்தேகம் கேட்டார்.

அதற்கு வசிஷ்டர் பதில் கூறுகிறார் : மகோன்னதமான மனம் படைத்த ராகவா! ஒருவனுடைய சொந்த முயற்சிகள் மூலம் மாத்திரமே அழியவொண்ணாத பிரம்மனை அடையக் கூடும். சுத்த வாஸனைகள் அசுத்த வாஸனைகள் என இரு வகை உண்டு. அசுத்த வ்ாஸனைகள் புனர் ஜன்மங்களை உண்டாக்குகின்றன. சுத்த வாஸனைகள் புனர் ஜன்மங்களிலிருந்து ஒருவனை விடுவிக்கின்றன. இவை இரண்டிலே, அவனுடைய பல ஜன்மங்களிலே அவனால் உண்டாக்கப் பெற்ற வாஸனைகள் அவனுடைய எதிர்கால ஜன்மங்களிலே அவனைப் பற்றிக் கொள்ளும். சுத்த வாஸனைகள் அவனைப் பற்றினால் அவன் ஆத்ம சாக்ஷாத்காரம் எய்துவான்; அசுத்த வாஸனைகள் பற்றிக் கொண்டு விட்டாலோ துன்பங் களுக்கும் வேதனைகளுக்கும் இலக்காகி புனர்ஜன்மங்களை மீண்டும் மீண்டும் எடுக்கிறான். ஓ, இராமா! அசுத்த வாஸனைகளை ஒழித்துக்கட்டு. தூய வாஸனைகளை மேற்கொண்டு சுத்த சர்வ வியாபக பிரம்மன் மீது ஒழுங்கான தியானம் பயின்று வருக.

சுத்த வாஸனைகளைப் பெருக்கிக் கொண்டால் அசுத்த வாஸனைகள் தாமாக மாண்டுபோகும். உன் குரு உனக்காக நிர்ணயித்த நெறியைச் சலிக்காமல் பின்பற்றி, பூரண ஞான ஒளி எய்தும் வரை மகா வாக்கியங்கள் அல்லது உபநிஷதங்களிலுள்ள சில வாக்கியங்கள் இவற்றின் கருத்தின்மீது தியானம் புரிவாயாக. புலன் நுகர்வுப் பொருள்களின் மீதுள்ள ஆசையிலிருந்து விடுபட்டு நித்தியானந்தம் பெறுவாயாக.

"ஓ, இராமா! எனது சொந்தக் கதையைக் கேள். பிரம்மதேவர் தம்மைப் போலவே சங்கல்ப மாத்திரத்தில் என்னைப் படைத்தார். எனக்கு ஆத்மஞானத்தோடு அருள்புரிந்தார். ஜம்புத்தீவிலுள்ள பாரத்வர்ஷத்திற்குச் சென்று சாதன சதுஷ்டயங்களோடு கூடிய சாதகர்களுக்கு பிரம்மக்ஞான மர்மங்களைத் தீட்சை புரிவாயாக என்று

எனக்கு உத்தரவிட்டார் பிரம்மதேவர். மோக்ஷவாசலில் நான்கு துவாரபாலர்கள் காவல் புரிகிறார்கள். ஸாந்தி, விசாரம், சந்தோஷம், சத்சங்கம் ஆகிய நாலு பாலர்கள். இந்நான்கு துவாரபாலர்களோடு நட்புபூண்டால், மோக்ஷ வாசலைத் திறந்துவிடுவார்கள். இவர்களில் ஒருவரோடு மாத்திரம் அத்யந்த நட்பு பூண்டால், அவர் மூவரையும் உனக்கு அறிமுகப்படுத்துவார். ஆத்மஞானத்தைப் புகட்டுகிற நூல்களைக் கற்பதாலும் முனிவர்களோடு பேரிணக்கம் கொள்வதாலும் பிரம்மன் அல்லது தூய நித்யாத்மாமீது இடையறாமல் தியானம் புரிவதாலும் ஆத்மஞானம் பெறுவாயாக. ஆத்மஞானமானது புனர் ஜன்மங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கிறது.

அக்ஞானப் பாம்பினால் கடிக்கப்பட்டவன் ஞானம் எனும் கருட மந்திரத்தினால் குணப்படுத்தப்படுகிறான். ஆத்மஞானம் எய்தியவன் பரிபூரணமான மனத்தின் சமநிலையைப் பெறுகிறான். அம்புகளை மாரியாகப் பொழிந்தாலும் அவை மிருதுவான மலர்களாக இருக்கும் அவனுக்கு. நெருப்புப் படுக்கையானது அவனுக்கு பன்னீரால் தெளிக்கப்பட்ட மிருதுவான படுக்கையாக இருக்கும். ஒருவன் தனது சொந்த அநுபவம், உபநிஷதங்களிலுள்ள வாக்கியங்களின் உபதேசங்கள், ஒரு குருவினுடைய போதனைகள் இம்மூவகை மூலங்களிலிருந்து பெற்ற அறிவைத் தனக்குள் ஒன்றாக்கிக் கிரகித்தால் மாத்திரம் ஆத்மஞானம் அவனுக்கு உதயமாகும். கூர்மையான தூய சூக்ஷுமபுத்தியும், தைரியமாகக் கிரகிக்கும் தன்மையும், உறுதி படைத்த வைரம் போன்ற உள்ளமும் பெறாதவர்கள் ஆத்மஞான நூல்களைக் கற்பதால் எவ்விதமான பயனும் அடையமாட்டார்கள். கங்காஸ்நானம், விரத அனுஷ்டானங்கள், புண்ணிய ஸ்தல யாத்திரை இவை யாவும் இதயத்தைத் தூய்மைப்படுத்துமே தவிர நேரடியாக நிர்மலமான பிரம்மபதத்தை ஒருவன் அடைய உதவி புரியமாட்டா. ஒருவன் தனது சிறந்த முயற்சிகள் மேலும் இடையறாத தொடர்ந்த தியானத்தோடு பரமாத்மாவின் மீது மனத்தைப் பதிப்பதன்

மூலமும் இறுதியான பேரானந்தப் பெருநிலையைப் பெறமுடியும்.

## ஸாந்தி

மனம் ஸாந்தியும், இதயம் அமைதியும் பெற்றுவிட்டால், எல்லாப் புலன்களும் ஸாந்தமும் அமைதியும் அடைகின்றன. இம்மன அமைதி வாஸனைகளை நீக்குதலால் பெறப்படுகிறது. ஸாந்த நிலையில் ஒருவன் திடமாக இருந்துவிட்டால், எதுவும் அவனுடைய உள்ளத்தைத் தலை கீழாக்கமாட்டாது. அவனுக்கு எப்போதும் கலங்காத உள்ளம் இருக்கும். அவன் தூஷிக்கப்பட்டாலும், துன்புறுத்தப் பட்டாலும், தாக்கப்பட்டாலும் அல்லது தீங்கு செய்யப் பட்டாலும் கூட ஸாந்தமான மனத்தையே கொண்டிருப்பான். ஸாந்தி எனும் படைக்கலத்தைக் கொண்டு தங்களை வலுப்படுத்திக் கொண்ட மகாமுனிவர்களும் இருஷிகளும் உலக உக்கிரமான விவகாரங்களில் கூட ஸாந்தியான மனத்தோடு தங்களை ஈடுபடுத்திக் கொள்கிறார்கள். இறுதியான பேரானந்தம் ஸாந்தமான மனத்திலே ஜனிக்கிறது - ஸாந்தமான மனத்திலிருந்து பெறப்படுகிறது. புலன் நுகர்வு இன்பங்களுக்காக வேட்கை கொண்டிருப்பது நீண்டதோர் வியாதி. இவ்வுலகம் கானல்நீர் நிறைந்தது. அது உலர்ந்து காய்ந்து சருகு போன்றிருக்கிறது. உலர்ந்த தன்மையை அமைதி மாத்திரமே குளிர்விக்கும். நன்மைகள் அனைத்துக்கும் வழிகாட்டுவது ஸாந்தியே. ஸாந்திக்குச் சமமான சந்தோஷத்தை எதுவும் வழங்க முடியாது. ஸாந்தி நிறைந்தவன் இதயம் நிரம்பின மகிழ்ச்சியை அனுபவித்து, மகோன்னதமான மெய்ப்பொருள் தானாக தன்னுடைய மனத்திலே தோற்றுகிற இதமான ஆதிக்கத்தை உணருகிறான். இந்த அபூர்வ பண்பாட்டை அடையப்பெற்றவன் இவ்வுலகில் மகிமை பொருந்திய சூரியனைப் போன்று ஜ்வலித்து எளிதிலே மோக்ஷத்தை எய்துகிறான். ஓ, இராமா! நீயும் கூட ஸாந்தி வகித்தவனாக ஆகுக''.

## ஆத்ம விசாரம்

ஆத்ம விசாரம் அஞ்ஞான மேகத்தை விரட்டியடித்து ஆத்மஞானத்தை வழங்குகிறது. இது ஒன்று தான் புனர்ஜன்மம் எனும் தீராத வியாதியைக் குணப்படுத்துகிற மேலான மருந்து. இது அபாயம், துன்பம் மற்றும் தொல்லைகள் தோன்றும் காலங்களிலே உன்னுடைய நண்பனாகும். மோக்ஷம் என்பது ஆத்மவிசாரம் எனும் சொர்க்கலோகத்துச் செடியிடத்துக் குலுங்கும் கனியாகும். ஆத்மவிசாரம் வாஸனைகளையும் எண்ணங்களையும் மனத்தையும் நாசப்படுத்துகிறது. வாழ்வின் இறுதி இலட்சியத்தை எய்துவதற்காக காரிய காரணங்களின் பேதங்களை உனக்கு உணர்த்துவதற்குத் துணை செய்கிறது. ஓ, உயரிய உள்ளம் படைத்த இராமா! நான் யார்? என விசாரம் பண்ணு, எங்கிருந்து வந்தேன்? எங்கிருந்து இந்த மர்மமான பிரபஞ்சம் உதயமாயிற்று? இத்தகைய வினா அஞ்ஞானத்தைப் போக்கி மோக்ஷத்தை தரக்கூடிய ஆத்மஞானம் அல்லது பிரம்மக்ஞானத்தை வழங்கும்.

## ஸந்தோஷம் (பரிபூரண திருப்தி)

திருப்தி என்பது மேலானதோர் நலம். திருப்தி நிஜமான சுகபோகம் என அழைக்கப்படுகிறது. எதிரிகளை முறியடித்த வீரனே! திருப்தியுள்ளவன் ஹாயாக ஓய்வு பெறுகிறான். திருப்தியுள்ளவனுக்கு உலக அரசாட்சி அழுகிய வைக்கோல் துண்டைக் காட்டிலும் சிறந்ததல்ல. புலன் நுகர்வுப் பொருள்கள் அவனுக்கு விஷமாகும். அவனுடைய மனம் மேலான ஆன்மீக விஷயங்களை நாடிய வண்ணம் ஆத்ம விசாரத்திலே திரும்புகிறது. அவன் தனக்குள்ளேயே ஆனந்தத்தைப் பெறுகிறான். பிரதிகூலமான நிலைகளிலே அவன் ஒரு போதும் கலங்கமாட்டான். தீங்குகள் அனைத்தையும் குணப்படுத்துகிறது திருப்தி. பேராசை எனும் அதிபயங்கரமான வியாதியை சொஸ்தப்படுத்துகிற சர்வரோக நிவாரணி இது. அமைதியான திருப்தியால் குளிர்விக்கப் பெற்ற மனமானது சதா ஸாந்தமாய் விளங்குகிறது. திருப்தி எய்தப் பெற்ற சாதகன் மீது தான் தெய்வீக ஒளி இறங்கும். திருப்தியானவன் ஏழையாயினும் உலகம் முழுவதுக்கும்

அவன் சக்கரவர்த்தி ஆவான். தனக்கு உடைமையில் லாதவைகளை விரும்பி வேட்கை கொள்ளாமல், தன்னிடம் நல்ல முறையில் கிடைக்கப் பெற்றவைகளைக் கொண்டு மகிழ்கிறவன் தான் திருப்தியான மனிதன். சிரமம் இல்லாமல் கிடைத்த எவற்றையேனும் வைத்துக்கொண்டு அவன் முற்றிலும் திருப்திப்படுகிறான். அவன் மிகவும் தயாளமும் கண்ணியமும் படைத்தவனாயிருக்கிறான். சித்திகளும், ஐஸ்வரியமும், அவனுடைய ஏவலாளர்கள் போன்று அவனை எதிர்நோக்கிக் காத்துக்கொண்டிருக்கின்றன. ஆத்திரங்கள், கவலைகளினின்றும் அவன் விடுபட்டவன். திருப்தியுள்ள வனுடைய ஸாந்தி தவழும் முக தரிசனமானது அவனை நாடித் தொடர்பு கொள்ள வருவோர்களுக்கு மகிழ்ச்சியைத் தருகின்றது. அத்தகைய புருஷர் மகா தபசிகளாலும் மற்றும் எல்லா மகான்களாலும் நன்கு மதிக்கப்படுகிறார்.

## ஸத்ஸங்கம்

ஸத்ஸங்கமானது பயங்கரமான இந்த ஸம்ஸார சமுத்திரத்தைக் கடப்பதற்குரிய ஓர் படகு போலப் பணியாற்றுகிறது. ஞானிகளுடைய சம்பந்தம் க்ஷணப்பொழுது ஏற்படினும் கூட உயரிய பயனுடையது. மகாத்மாக்களுடைய தர்ஸனம் பாவங்களைப் போக்கி உள்ளத்தை உயர்த்துகிறது. புண்ணியாத்மாக்களுடைய பேரிணக்கம் பகுத்தறிவு எனும் புதிய மலரைப் புஷ்பிக்கச் செய்கிறது. ஞானிகளின் ஸத்சங்கம் எல்லா விபத்துக்களையும் விலக்கி அஞ்ஞான விருக்ஷத்தை வெட்டி வீழ்த்துகின்றது. சாதகர்களுக்குச் சிறந்த ஒழுக்கச் சட்ட திட்டங்களை ஞானிகள் வகுத்துத்தந்து, வாழ்க்கையைச் செம்மையாக நடத்துவதற்குரிய வழியை அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கிறார்கள். சன்மார்க்க சீலர்களின் சத்சங்கம் நன்னெறிக்கு ஒளிதந்து, உள்ளத்திலுள்ள அஞ்ஞான இருளை அகற்றுகின்றது. ஞானிகளின் சத்சங்கமோ மாயையையும் இந்த மிகப் பயங்கரமான மனத்தையும் ஜெயித்து வெற்றி கொள்வதற்குரிய வழுவாத சாதனமாகும்.

திருப்தி, ஸத்ஸங்கம், விசாரம், ஸாந்தி ஆகிய நான்கு வகைச் சாதனங்களும் ஆத்ம சாக்ஷாத்காரம்

பெறுவதற்குரியவை. இந்த நான்கு வகைச் சாதனங்களையும் தம் உடைமைகளாகக் கொண்டவர்கள். சம்சார சமுத்திரத்தைக் கடந்தவர்கள். திருப்தி மகத்தான இலாபமாகவும், ஸத்ஸங்கம் நல்லதோர் நோக்கமாகவும், விசாரம் நிஜமான அறிவாகவும், ஸாந்தி மனிதனின் மகோன்னதமான ஆனந்தமாகவும் கருதப்படுகின்றன. இச்சாதன சதுஷ்டயங்கள் (நான்கையும்) வாய்க்கப் பெற்றவனுக்கு சுபிட்சம், வெற்றி ஆகிய அனைத்தும் ஏவல்புரியக் காத்துக் கொண்டிருக்கின்றன. இப்பண்புகளில் ஒன்று அபிவிருத்தியடைந்த வேகத்தில் கட்டுப்பாட்டுக்கு அடக்க இயலாத மனத்தின் குறைபாடுகளின் சக்தியை அப்பண்பு பலவீனப்படுத்தத் துணைபுரிகின்றது. புண்ணியங்களை வளர்த்தல் பாபங்களை ஒடுக்கிப் போக்குவதற்கு வழி கோலுகின்றது; ஆனால் பாபங்களை வளர்த்தாலோ எதிர்மறையாக பாபங்களைப் பெருக்கவும் சன்மார்க்க குணங்களை ஒடுக்கித் தளர்த்தவும் ஏதுவாகின்றது. மனமானது தவறுகள் நிறைந்ததோர் காடு. இதில் நமது ஆசைகள் எனும் நீரோடை நல்லவை, பொல்லாதவை ஆகிய இரண்டும் கரைகளினூடே அதிபயங்கரமான வேகத்தோடு பாய்ந்தோடுகின்றது. பொல்லாதவை எனும் கரையின் மேலே நாம் நிற்கிறோம். ஆகையால் இரகுகுலவிளக்கே! நீண்ட ஆயுதங்களைத் தரித்த இராமா! உன் மனத்தைத் தைரியமாக அடக்குவாயாக! வாழ்க்கை நடத்துவதற்கு மேற்கூறப்பட்ட நான்குவிதமான சாதனங்களையும் சிரத்தையோடு அபிவிருத்தி புரிவாயாக.

முறையாக ஆத்ம விசாரம் பயிலுகிறவன் சம்ஸாரத் துன்பங்களாலும் கவலைகளாலும் பாதிக்கப்படமாட்டான். அவனுக்கு எப்போதும் சமமான மனநிலையும் சமமான நோக்கும் இருக்கும். சதா அவன் ஸாந்தமாயும் சந்தோஷமாயும் இருப்பான். மாயை அவனை ஒருபோதும் தீண்டுவதில்லை. சதாகாலமும் அவன் அழிவில்லாத சுயம் ஜ்யோதியாகிய ஆத்மாவின் மீது தியானம் புரிவதில் தன்னை ஈடுபடுத்திக்கொள்வான். ஒருவன் ஆத்மஞான நூல்களைக்

கற்கவேண்டும். ஞானிகளோடு ஸத்சங்கம் வைத்துக்கொள்ள வேண்டும்; சாதன சதுஷ்டயங்களையும் நன்னடத்தையையும் அபிவிருத்தி செய்தல் வேண்டும்; ஆத்மஞானம் அவனிடத்தில் உதயமாகும் வரையில், சதா ஆத்ம விசாரம் பழகுவதில் அவன் சுறுசுறுப்புடன் இருக்க வேண்டும்.

ஜீவன் முக்தன் ஒருவன் பரிபூரணமாகப் பற்றற்றவனாயும் அகங்கார மமகாரங்கள் இல்லாதவனாயும், அச்சமும் சினமும் விட்டவனாயும் இருப்பான். ஆத்மாவை மாத்திரமே எங்கணும் அவன் காண்கிறான். சமதா எனும் சமநோக்கும் சமஹித சித்தம் எனும் மனத்தின் சமநிலையும் அவனுக்கு உண்டு. பந்தங்களும், ஆசாபாசங்களும் வேட்கைகளும் எவையுமே அவனிடம் கிடையா. அவனுடைய நிலை வர்ணனைக்கு அப்பாற்பட்டது. எனினும் அவன் உலகினிலே சாதாரண மனிதனைப் போன்று நடமாடுவான். அவன் சதா ஸாந்தமாயும் அமைதியாயும் இருக்கிறான். அவன் துரிய நிலையில் இளைப்பாறுகிறான். சர்வ வியாபகமான தூய்மையான பிரம்மனே தான் எனத் தன்னை அடையாளங் காண்கிறான். பந்தங்கள், பேதங்கள், கௌரவ பட்டங்கள் ஆகியவற்றினின்று அவன் விடுதலை அடைந்தவன்.

ஒ, வீர இராமா! குழந்தையினுடைய வார்த்தைகள் சுருதிகளின் வீர முழக்கத்திற்கும் குருதேவருடைய உபதேசங்களுக்குள் உனது சொந்த அநுபவத்திற்கும் ஒத்ததாக இருக்குமேயானால், இவை குழந்தையினுடைய வார்த்தைகள் என்று கூட நீ பார்க்காமல் அவற்றில் நம்பிக்கையை வைக்கலாம். இல்லாவிட்டால் பிரம்மதேவராயிருந்தாலும் கூட அவருடைய அறவுரைகளை வைக்கோல் துரும்பு போலப் பாவித்துப் பகிஷ்கரிக்க வேண்டும். அஞ்சா நெஞ்சம் படைத்த வீர இராகவா! உன்னிடத்தில் ஆத்மஞானம் உற்பத்தி செய்வதற்கும் அத்வைத பிரம்மன் அதாவது மேலான பரம்பொருளின் தன்மையை வர்ணிப்பதற்கும் தகுந்தாற்போல ஒப்பு உவமைகள் பாவனைகளிலே கூறப்பட்டிருக்கின்றன என்பதைத் தெரிந்துகொள்வாயாக.

ஞானமும் மேற்கூறப்பட்ட நான்கு சிறந்த குணங்களும் பக்கத்திலே அமைந்துள்ளன. குளமும் அதில் வளர்ந்துள்ள தாமரைகள் போலும் இவை இரண்டும் நன்கு செழிக்கட்டும். இவ்விரண்டும் பக்கம் பக்கமாக அபிவிருத்தியடைந்தால், விரைவிலே நீ ஆத்ம சாக்ஷாத்காரத்தைப் பெறலாம்.

'ஓ, நற்பண்புள்ள இராமா! எனது கதைகளைத் தயவுசெய்து கேட்பாயாக. இக்கதைகள் உனது ஐயப்பாடுகள், குழப்பங்கள், பிரமை அனைத்தையும் போக்கி வாழ்க்கையின் இறுதி இலட்சியமாகிய பேரின்ப நிலையைப் பெறுதற் பொருட்டு உரிய துணைபுரியும். இந்த ஞானக் கதைகளை உற்றுக்கேட்டு அவற்றின் பிரகாரம் செயலாற்றுகிறவன், உண்மையான துறவும், அழியவொண்ணாத வற்றாத ஆன்மீகச் செல்வமும், நித்தியானந்தமும், மேலான ஸாந்தியும் ஆன்மீக ஒளியும், இறுதியாக மோக்ஷமும் நிச்சயமாகப் பெறுவான்" என்று வசிஷ்டர் திருவாய் மலர்ந்தருளினார்.

# மூன்றாவது உற்பத்திப் பிரகரணம்

## - கற்கடி கதை

ஸ்ரீ வசிஷ்ட மகரிஷி ஸ்ரீ இராமபிரானிடம் அடியில் வருமாறு உபதேசம் புரிகிறார் :

பிரம்மன் தூய்மையும், அத்துவைதமும், சர்வ வியாபகமும், சர்வபரிபூரணமும், நிர்த்தோஷமும், சுயாதீனமும் வாய்ந்து எல்லையற்று வர்ணிக்க இயலாதவராய் விளங்குகிறார். கண்ணுக்குத் தோன்றும் அநித்தியமான உலகமானது கண்ணுக்குத் தோன்றாத நித்தியமான பிரம்மனிடமிருந்து வெளிப்பட்டுள்ளது. அது பிரம்மனுடைய மாயமான சக்தியாகிய மாயையின் நானாவிதத் தன்மையேயன்றி வேறல்ல. சத்து-சித்து-ஆனந்தப் பிரம்மன் தானே இப்பிரபஞ்சமாகத் தோற்றுவித்துக் கொள்கிறார். இவ்வுலகம் மனத்தின் மூலமே மட்டும் தோன்றுகிறது. மனத்தின் மூலமே மட்டும் அது உண்மையாகத் தோன்றுகிறது. இவ்வுலகம் ஓர் தீர்க்க சொப்பனம் (நீண்ட கனவு) மனம் சங்கல்ப விகல்பங்களின் மூலமாக விஸ்தரித்துக் கொள்கிறது. கந்தர்வ நகர் அல்லது மேகங்களிலுள்ள நகரம் எவ்வளவு பொய்யோ அவ்வளவு பொய்யாகிய இந்த உலகத்தை மனம் தனது கற்பனைத் திறத்தினால் வெளியே நீட்டிக் கிடத்துகிறது. ஜீவன் தனக்குள்ளே தன் உணர்வின் கருத்தை உணர்ந்து, "நான் எத்தகைய சக்தி படைத்தவன்" என்று சிந்திக்கிறபோது, ஜீவன் தனது அதிகாரத்தைப் பற்றி உணர்ந்து, மனத்தின் சங்கல்பத்தின் மூலம் அகங்காரம் உற்பவித்தது. இரண்டு மரக்கட்டைத் துண்டுகள் தேய்க்கப்படும் போது, சிறு நெருப்பு உண்டாகிறது. இச்சிறு நெருப்பு விரைவில் பெருத்த அக்கினியாக வியாபித்து விடுகிறது. அதுபோல, பல்வேறு பொருள்களோடு ஜீவன் தொடர்பு கொள்ளுகிற விதவிதமான அநுபவங்கள் மூலமாக அதனிடமுள்ள அகங்காரம் விரிவடைகிறது. சிறு "நான்" என்பது அதிகம் அதிகமாய் வலிமை பெறுகிறது. "என்னுடைய" (மமகார) எனும் கோட்பாடு ஆழ்ந்து வேரூன்றி விடுகிறது.

இருள் அடர்ந்த இரவில் சாலையோரத்திலே மரக்கட்டை கிடக்கின்றது என்று அறிவு இல்லாத சமயத்தில் கட்டையைக் கள்வன் என்ற கருதும் எண்ணம் எழுகிறது. இதுபோல, சர்வம் பிரம்ம மயம் என்கிற அறிவு இல்லாத சமயத்தில், பிரபஞ்சம் சத்தியம் எனும் கோட்பாடு உற்பத்தியாகிறது. ஜீவனுக்கும் பிரம்மனுக்கும் சாராம்சத்தில் பேதம் கிடையாது. குடத்திலுள்ள ஆகாயம் குடம் உடைபட்டுப் போனால் பிரபஞ்ச ஆகாயத்தோடு ஒன்றாகிவிடுகிறது. இதைப்போல அவித்தை எனும் உபாதி அகற்றப்பட்டால், ஜீவன் பிரம்மனோடு இரண்டறக் கலந்துவிடுகிறது. மனத்திற்கும் பிரபஞ்சத்திற்கும் இடையே கூட வித்தியாசம் கிடையாது. ஓ, இராமா! இப்போது வல்லமை வாய்ந்த ஓர் இராக்ஷஸியினுடைய விநோதமான கதையை உனக்குச் சொல்லுகிறேன். அவளுடைய புத்திசாலித் தனமான பல வினாக்களைக் கேட்டாள், இது உனது சந்தேகங்கள் அனைத்தையும் போக்கிவிடும்.

ஹிமயமலைச் சாரலின் வடபாகத்தில் கற்கடி (கோணலான நண்டு) என்ற நாமத்தை வகித்த ஓர் இராக்ஷஸி வாழ்ந்து வந்தாள். அவள் மைபோன்று இருளாக இருந்தாள். பெரிய மரங்களையும் பிளக்கவல்ல பலம் பொருந்திய அவயவங்களைக் கொண்டு பாறை போலக் கெட்டியாகப் பருத்திருந்தாள். விசாலமான வாயும் பிறை வடிவமான கோரப்பற்களும் உடையவள். கண்மணிகள் நெருப்புப்போல ஜ்வலித்துக் கொண்டிருந்தன. அவளுடைய தொடைகள் இரண்டும் பெருத்த பேரீச்சம் பழ மரங்களைப் போன்றிருந்தன. அவளது உரத்த சிரிப்பு பலத்த இடி போலிருந்தது. கூர்மையான துரோட்டி போன்ற நகங்கள் வைரம்போல் கெட்டியாய்க் கனத்திருந்தன. பெருவயிறு படைத்த அரக்கி - இவளது அடங்காப் பசிக்கு எதுவும் திருப்தியளிக்கவில்லை. ஜம்புத்தீவிலுள்ள ஜீவர்கள் அத்தனையும் அவளுடைய பெரு வயிற்றிற்கு இரையாய் வீழ்ந்தாலும் கூட, அவற்றை அவள் போதாத சிறு கவளமாகக் கருதுவாள். அவள் ஹிமயமலைக்குச் சென்று கடுந்தவம் புரிந்தாள். அவள் நீராடி ஒற்றைக்காலில் நின்று கதிரவன்

மீது தன் கண் பார்வையைச் செலுத்த ஏகாக்ரம் பண்ணினாள். இங்ஙனம் அவள் ஓராயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தாள். அவள் பிரம்மாண்டமான தனது தேகத்தை வெயில் குளிர் ஆகியவற்றின் குரூரத்திற்கு இலக்காக்கினாள். ஆயிரம் ஆண்டுகள் கழிந்ததும், அவள் முன்னால் பிரம்மதேவர் பிரஸன்னமானார். அவள் பிரம்மதேவருக்கு மானஸீகமாகச் சாஷ்டாங்க நமஸ்காரம் புரிந்தாள். அவள் தனக்குள்ளே, "நான் இரும்புபோன்ற உயிருள்ள ஊசியாக மாறினால், உலகத்திலுள்ளவர்களின் சரீரங்களில் நுழைந்து எனக்குத் தேவையாகும் அளவு உணவை உட்கொள்ளலாம். என் இதயம் திருப்தியாக ஜீவர்களின் இரத்தத்தை உறிஞ்சி, சதா அதிகரிக்கின்ற என் பசித்தீயைத் தணித்துக்கொள்வேன்" என்று எண்ணமிடலானாள். இம் மாதிரி அரக்கி சிந்திக்கும் தருணத்தில் பிரம்மதேவர், "ஓ! கற்கடி! உனது பக்திக்கு மகிழ்ந்தேன். நீ விரும்புகிற வரத்தை உனக்கு அளிப்பேன்" என்று திருவாய் மலர்ந்தருளினார். கொடியவர்கள் கூட அகோரமான தவத்தில் ஈடுபாடு கொள்வார்களேயானால் எதையும் எய்திவிடக் கூடும்.

அதற்குக் கற்கடி "நான் ஒரு ஜீவசூசிகாவாக மாறுவேனாக (ஜீவசூசிகா- உயிருள்ள ஊசி)" என்று கூறினாள். பிரம்மதேவர், "அங்ஙனமே ஆகுக வி : எனும் அக்ஷரத்தை முதற் கண்ணுள்ளதாக விசூசிகா என்னும் பெயரால் நீ விளங்குவாயாக. அநாரோக்கியமான ஆகாரம் உட்கொள்கிறவர்களையும், தீயகுணம் படைத்தவர்களையும் சுகவீனத்தை உண்டு பண்ணத் தக்க இடங்களில் வசிக்கிறவர்களையும் நீ பாதித்து வதைக்கலாம். குடல்களில் நீ வாயு வடிவத்தில் இருந்து கொண்டு பித்தம், வயிற்றுப்பொருமல், சூலை, ஈரல் பெருக்கம், காலரா (விசூசிகா) ஆகிய நோய்களை உண்டுபண்ணக்கடவாய்" என்று வரமளித்துவிட்டு அந்தர்த்தானமானார்.

கற்கடி விசூசிகா எனும் பெயரால் உயிருள்ள ஊசி வடிவுடன் ஜீவர்களுடைய உடல்களில் புகுந்து இரத்தத்தைக் குடித்து ஜீவித்து வந்தாள். அவளுக்கு நிரம்பவும் திருப்தி

ஏற்பட்டது. பசி தீர்ந்தது. அவள் "அநேக மனிதர்களை வீணாக வதைத்துவிட்டேன். எனக்கு மிகவும் கொடிய இதயம் இருக்கிறது. இத்தகைய வாழ்வை நடத்த விரும்பவில்லை. மீண்டும் தவம் புரிந்து ஞானம் பெறுவேன்" என்று தனக்குள் சிந்திக்கலானாள். அவள் ஹிமயமலையில் மீண்டும் ஆயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தாள். பாபமஷ்டுகள் எல்லாம் சுத்தமாக நீங்கப் பெற்றாள். காமம், பகை இவற்றிலிருந்து விடுபட்டவளானாள். ஞானம் அவள் உள்ளத்தில் உதயமாயிற்று. ஞானஒளி அடையப் பெற்றாள். நிஜமாகத் தெரிந்துகொள்ளத் தக்கவற்றை அவள் தெரிந்துகொண்டவளானாள். அவள் தனது ஆத்மாவில் நிஜமான ஆனந்தத்தை உணரலானாள். பிரம்மதேவர் மனமுவந்து பிரத்தியக்ஷமாகி "ஓ, கற்கடி! ஞான ஒளியை நீ அடைந்துவிட்டாய். நீ ஒரு ஜீவன் முக்தனாக ஆகிவிட்டாய். முன்னைய ராக்ஷச ஸ்திரீ வடிவிலேயே இருந்து வருவாயாக. அஞ்ஞானிகளிடம் சென்று நீ அடைந்துள்ள ஞானத்தைப் புகட்டி அவர்களையும் ஞான ஒளி பெறச் செய்வாயாக; ஏனெனில் நல்லவர்கள் - பெரியவர்களின் சுபாவம் என்னவெனில் அஞ்ஞானிகளை தவறிலிருந்து விடுவிப்பதேயாகும். இந்த ஞானம் புகட்டப்படும்போது, அதைப் பெற்றுக்கொள்ளாதவன் எவனாயிருந்த போதிலும் அவனை உனக்குகந்த சரியான உணவு என்று நிச்சயித்துக்கொள். ஆத்மஞானமில்லாதவர்கள் கொடிய பாபிகள்! இவர்களின் உடல்களைப் புசித்து வருவாயாக" என்று பிரம்மதேவர் திருவாய் மலர்ந்தருளிய வண்ணம் அந்தர்த்தானமானார்.

அவள் அத்வைத பிரம்மன் மீது தியானம் புரிந்தவளாய் நீண்ட காலமாக நிர்விகல்ப சமாதியில் இருந்தாள். அவள் சமாதி நிலையிலிருந்து சகஜமான விழிப்பு நிலைக்கு வந்தவுடன், பசியின் கொடுமையால் வாடினாள். ஒரே நிலையில் உள்ளே எழும், உடலானது தனது தர்மங்களை அல்லது பசியை ஒருபோதும் விடுவதில்லை. உணவுக்காக பிராணிகளை வதைப்பது பாபம் என்று அவள் எண்ணினாள். அவள் இமயமலைச்சாரல்களுக்குச் சென்று

வேடர்கள் வாழும் பிரதேசத்தை நெருங்கினாள். பிரம்மோபதேசங்களின்படி அஞ்ஞானிகளின் உடல்களைப் புசிக்கலாமெனக் கருதினாள். அந்த நள்ளிரவிலே, ஒரு அரசனும் மந்திரியும் கூடி காட்டில் திரிந்துகொண்டிருப்பதைக் கண்டாள். அரசன் பெயர் விக்கிரமா என்பது. தனக்குரிய தக்க உணவு கிடைத்தமை நினைத்து கற்கடி ஆனந்த மடைந்தாள். அவர்கள் ஞானிகளா இல்லையா என்பதை சோதிக்க விரும்பினாள். அவள் கர்ஜித்தவாறே "நீங்கள் யார்? முனிவர்களா அஞ்ஞானிகளா? எனக்கு நீங்கள் இலகுவில் கிடைக்கிற உணவாகிவிட்டீர்கள். உங்கள் விதியை என் கைகளில் ஒரு கணத்தில் சந்திக்க வேண்டும்" என்று முழங்கினாள். மன்னர் பதில் கூறத் தொடங்கி "ஓ, இராக்ஷஸியே! அதிகமாக வெருட்டாதே. உனது பராக்கிரமத்தை உடனே எங்களுக்குக் காட்டு. உண்மையாக நீ என்ன விரும்புகிறாய்? தங்கள் செயல்களின் பலன்களை அஞ்ஞானிகள் மாத்திரமே விரும்புகிறார்கள். ஞானிகள் எப்போதும் பலன்களை எதிர்பாராது புண்ணிய கர்மங்களைப் புரிகிறார்கள்; உன்னைப் போன்ற தீயவர்களை கொசுக்களைப் போல ஊதித்தள்ளிவிட முடியும். கனவிலும் கூட நாங்கள் எப்பொருளையும் எவருக்கும் வழங்கக்கூடும். விவேகமும் அநுபவஞானமும் கைவரப் பெற்ற அமைதியான உள்ளத்தோடு ஞானி செயல்களைப் புரிகிறான்" என்று மொழிந்தார்.

அவர்கள் ஞானிகள் என கற்கடி கருதினாள். "இவர்கள் சாதாரண பாமரர்கள் அல்ல. ஒருவனுடைய பேச்சு, வதனம், கண்கள் மூலமாக அவன் தூயஞானி என்று நியாயத் தீர்ப்பு கூறலாம். வெளியே காட்டப்படும் அவனுடைய முகம், கண்கள் ஆகியவற்றின் ஜாடைகளிலிருந்தும் அவன் பேசும் தோரணை குரலிலிருந்தும் அவனது அந்தரங்க ஆத்மா விளக்கமாகிறது. ஞானிகளின் அந்தரங்க எண்ணங்களை அவர்களின் வார்த்தைகளும் முகமும் கண்களும் விளக்குகின்றன. கடலில் நீரும் உப்பும்போல் இவை ஒன்றாய்ச் செல்லுகின்றன. மனம், வாக்கு, செயல் இவை ஞானியிடம் ஐக்கியப்பட்டு நிற்கும், முட்டாள்களிடம்

இம்மூன்றும் பொருந்தா. தம் அறிவாலும் நன்னெறி மேம்பாட்டினாலும் இவர்கள் அழிய வொண்ணாதவர்களாய் விட்டார்கள். என்னால் இவர்கள் சம்ஹரிக்கப்பட மாட்டார்கள். இவர்களுக்கு ஆத்மஞானம் உண்டு; ஆத்மா நாசஞ் செய்ய முடியாதது என்ற அறிவு மரண பயத்தை அகற்றுகிறது" என்றெல்லாம் கற்கடி எண்ண மிடலானாள். "ஓ, பாபமில்லாதவர்களே! வீரமும் தைரியமும் வாய்ந்தவர்களே! நீங்கள் யார் எங்கிருந்து வருகிறீர்கள்! எனக்குச் சொல்லுங்கள்" என்று கேட்டாள். "கிரதாஸ் மன்னர் இவர். இவருடைய மந்திரி நான். புண்ணிய சாதுக்களை இரக்ஷிக்கவும் துஷ்டர்களைத் தண்டிக்கவும் எங்கணும் நாம் ஊர் சுற்றி வருகிறோம் இரவிலே" என்று பதிலளித்தான் மந்திரி. அதற்கு கற்கடி, "நல்ல அரசன்கூட கெட்ட மந்திரியின் புத்திகளைக் கேட்டுக் கெட்டவனாகிறான். கெட்ட அரசன் குணசீல மந்திரியின் புத்திமதிகளைக் கேட்டு நற்குண வானாகிறான். ஞானமும் பண்பும் படைத்த மன்னருக்கு தூய நல்ல மந்திரியும், தீய குணமுள்ள அரசருக்கு கெட்ட மந்திரியும் வாய்க்கிறார்கள். புத்திசாலியான மன்னன் ஞானமும் பண்பும் படைத்த மந்திரியின் ஞானமுள்ள புத்திமதிகளைப் பெறுவானாகில் மூன்று உலகங்களிலும் அவனால் எதையும் அடையக்கூடும். அரசன் எப்படியோ அவன் பிரஜைகளும் அப்படியே. ஆன்மீக ஞானமும், சமதிருஷ்டியும் ஆத்மஞான நூல்களின் நுண்ணறிவும், பெருந்தன்மையும் கண்ணியமும் வாய்ந்தவர்கள் மன்னர்களாகவும் மந்திரிகளாகவும் ஆவதற்குத் தகுதி படைத்தவர்கள். தத்துவ சாஸ்திரத்தில் சில வினாக்களைக் கேட்கிறேன். தக்க சரியான விடைகளை அளித்தால், என் சிரசின் மீது தங்களுக்கு ஆசனம் அளிப்பேன் மலர்களைப்போல. இல்லாவிட்டால், என் வயிற்றுக்குள் நீங்கள் இருவரும் உணவாக வீழ்வீர்கள். எனக்கு நல்லதொரு சாப்பாடு கிட்டும். என் வயிற்றில் எரிகிற ஜடராக்கினிக்கு நீங்கள் இருவரும் விறகாகச் சேவை புரிவீர்கள்" என்று முழங்கினாள். "ஓ, கற்கடி! இப்போது உனது வினாக்களைச் சொல் அவைகளுக்குத் தக்க விடைகளைக் கூறுகிறேன்" என்று மன்னன் உரைத்தான்.

வசிஷ்டர், "ஓ, தாமரைக் கண் படைத்த இராமா! இராக்ஷஸ ஸ்திரீ கேட்கும் வினாக்களைக் கவனத்துடன் செவிசாய்ப்பாயாக. அவை பின்வருமாறு என்று திருவாய் மலர்ந்தருளினார்.

1) கடல் மட்டத்தின் மீது கிளம்புகிற எவ்வளவோ நீர்க் குமிழ்களைப் போல் எழும்புகிற எண்ணிறந்த உலகங்களின் உற்பத்தி, ஸ்திதி, அழிவுக்குக் காரணமாயிருக்கிற அந்த அணு என்ன?

2) ஆகாசமாயிருக்கிறது, இல்லாததுமாயிருக்கிறது- அது என்ன?

3) எல்லை கடந்ததாக இருப்பினும் அதற்கு ஓர் எல்லை உண்டு. அது என்ன?

4) அசைந்துகொண்டே இருக்கிறது. ஆனால் அசையாமலிருக்கிறது. அது என்ன?

5) இருக்கிறது என்றாலும் அது இல்லை. அது என்ன?

6) சித் (உணர்வு அல்லது புத்தி) ஆகத் தோன்றுகிறது. அதே சமயம் ஓர் கல் போன்று ஜடமாயிருக்கிறது. அது என்ன?

7) ஆகாசத்தில் படங்களை வரைகிறது எது?

8) விதைக்குள் மரம் இருப்பதுபோல எல்லாப் பிரம்மாண்டங்களும் அந்தர்க்கந்தமாய் (குப்தமாய்) இருக்கிற அணு என்ன?

9) கடலிலுள்ள நுரைபோன்று பொருள்கள் அனைத்தும் எதிலிருந்து உற்பத்தியாகின்றன?

10) அவை எதில் அமிழ்கின்றன?

"ஓ, கரியநிற மாதே! விடைகளைக் கேட்பாயாக" என்று மந்திரி அடியில் வருமாறு விடை கூறலானான்.

**வினா 1க்கு விடை :** உனது வினாக்கள் அனைத்தும் பரம்பொருளான அத்வைத பிரம்மனைப் பற்றியே ஆகும். பிரம்மன் மனத்திற்கும் பஞ்சேந்திரியங்களுக்கும் எட்டாத தொலைவில் உள்ளது. ஆகாசத்தைக் காட்டிலும் அதிக சூக்ஷ்மம் பொருந்தியது; அது அணுக்களுக்கு எல்லாம்

அணுவானது. அது சுயேச்சையான உணர்வு. அது எல்லை கடந்த அறிவுமயம்.

**வினா 2க்கு விடை :** பிரம்மன் அல்லது மேலான ஆத்ம ஆதாரம் வியாபகமாயிருக்கிறது; சூக்ஷ்மமானது அது (நிராலம்பமானது) தாரம் அற்றதாயிருக்கிறது. அதற்கு உள்ளும் புறமும் கிடையாது. ஆகாசம் கூட சர்வ வியாபகமாயும் சூக்ஷ்மமாயும் இருக்கிறது. அது ஆதாரம் இல்லாமல் உள்ளது. அதற்கு உள்ளும் புறமும் கிடையாது.

ஆகையால் பிரம்மன் ஆகாசம்தான் என்று கூறப்படும். (பொதுவாக பிரம்மன் ஆகாசத்திற்கு உவமையாக்கப் படுகிறது. ஆனால் இது மட்டமான உவமை. பிரம்மன் பிரம்மனுக்கு மாத்திரமே உவமையாக்கப்படும்) ஆனாலும் அது ஆகாசம் அல்ல, அது தூய உணர்வு; அல்லது புத்தி மயம். ஆகாசம் மந்தமாயிருக்கிறது. அது மாயையின் ஓர் விளைவு.

**வினா 3க்கு விடை :** பிரம்மன் தனது சொந்த மகிமையில் பிரகாசிக்கிறான். அதற்கு இளைப்பாறும் இடம் கிடையாது. அது காலம், இடம், காரணம் இவற்றிற்கு அப்பாற்பட்டது. அது சர்வ வியாபகமாயிருக்கிறது. அது பகுக்க வொண்ணாதது; எல்லையற்றது. அதற்கு வாசம் புரியும் ஸ்தலம் இல்லை. ஆகையால், அது எல்லைக்குட்பட்டதல்ல; இருப்பினும் அது எல்லா உயிர்களுள்ளும் எப்போதும் அந்தரங்க ஆத்மா அல்லது சுயேச்சை ஸத்தாக விளங்கிக்கொண்டிருக்கிறது.

**வினா 4க்கு விடை :** பிரம்மன் அசலம் (அசைவற்றது) அசைவதற்குத் தனக்கு வெளியே எந்த இடமும் கிடையாது. அவன் பரிபூரணன். உடலோடும் மற்றும் அநேக பொருள்களோடும் சம்பந்தம் கொண்டிருப்பதன் மூலம் அது அசைகின்றது.

**வினா 5க்கு விடை :** பிரம்மன் சுயேச்சையான ஸத் அல்லது சுயேச்சையான இருப்பு. பிரம்மன் மாத்திரமே இருக்கிறது. ஆகையால் அது இருக்கிறது. அது நம் ஊனக் கண்ணால் பார்க்க முடியாதது. உலகாயத மனப்பாங்கு

படைத்த மக்கள் அதன் இருப்பை மறுக்கிறார்கள். "இது பிரம்மன்" என்று உன்னால் சுட்டிக்காட்ட முடியாது; ஆகையால் அது இல்லை.

**வினா 6க்கு விடை :** பிரம்மன் சுயேச்சை உணர்வுள்ளது. அது சுவயம் ஜ்யோதி. அது ஜோதிகளுக்கெல்லாம் ஜோதி. பிரம்மன் தானே கல், பூமி, இரும்பு, மற்றும் ஜடமான பொருள்களாக தோற்றமளிக்கிறது. அதற்கு இரண்டு அம்சங்கள். ஒன்று உணர்வு; மற்றொன்று ஜடம்; ஆன்மா தூய உணர்வு.

**வினா 7க்கு விடை :** மிகவும் சூட்சுமமாயும் சுய இருப்புள்ளதாயும் மாசு அற்றதாயும் விளங்குகிற சிதாகாசத்திலே பல்வேறு பிரபஞ்சங்களை பிரம்மன் படம் வரைந்து வர்ணப்பூச்சு அடிக்கிறது.

**வினா 8, 9 & 10க்கு விடைகள் :** நானாவிதமான உலகங்கள் பிரம்மனிடமிருந்து வந்துள்ளன. பிரம்மனில் அவை நிலைத்திருந்து இறுதியில் பிரம்மனில் கரைந்து மறைந்துவிடும் சமுத்திர நீர்க்குமிழிகள் போல. நானாவிதமான பிரபஞ்சங்கள் பிரம்மனிடமிருந்து பிரிக்க முடியாதவை. அவை பிரம்மனைத் தவிர வேறல்ல. அவை பிரம்மனின் தோற்றங்கள் மாத்திரமே ஆகும்.

மந்திரியால் அளிக்கப்பட்ட புத்திசாலித்தனமான இவ்விடைகளைக் கேட்டு கற்கடி மிகுந்த திருப்தி அடைந்தாள். அப்பால் அவள் மன்னனை தனது கேள்விகளுக்குப் பதில் கூறுமாறு வினவினாள். அவனுடைய அறிவின் ஆழத்தை அறிய அவாவினாள். "பிரம்மன் மாத்திரமே இருக்கிறது. நானாவிதத் தன்மை பொருந்திய இந்த பிரபஞ்சம் உண்மையில் இல்லை. சங்கல்பங்களினால் மாத்திரமே உலகம் இருக்கிறது. சங்கல்பங்கள் முற்றிலும் நாசஞ் செய்யப்பட்டால் இவ்வுலகம் காணாமல் மறையும். சங்கல்பங்கள் இவ்வுலகை உற்பத்தி செய்கின்றன. நமது உலகாயத பந்தங்களையும் திரும்பத் திரும்ப ஏற்படுகிற புனர் ஜன்மங்களையும் அவைகளைச் சேர்ந்த தீங்குகளையும் அஞ்ஞானம் விஸ்தரிக்கின்றது" என்று மொழிந்தான் மன்னன். "ஓ, கற்கடி!

இப்பிரபஞ்சமாகத் தோன்றும் பிரம்மன் அத்வைதமாயும், பகுக்க வொண்ணாததாயும் எல்லையற்றதாயும் சர்வ வியாபகமாயும் சுவயம் ஜ்யோதியாயும் விளங்கிக் கொண்டிருக்கிறது. உனது கேள்விகளில் நீ பிரம்மனைப் பற்றி மாத்திரமே குறிப்பிட்டிருக்கிறாய். விடுதலையடைந்த ஜீவன் முக்தர்கள் இப்பரமாத்மாவை இறந்த காலம் நிகழ்காலம் வருங்காலம் ஆகிய முக்காலத்திலும் இருப்பதைக் காண்கிறார்கள். பரப்பிரம்மன் சத்வம் பொருந்தியது. அது சத்துக்கும் அசத்துக்கும் இடையிலுள்ள ஆசனத்தில் அமர்ந்திருக்கிறது. பிரபஞ்ச அழிவிற்குப் பின்னும் பிரம்மன் இருக்கும். சங்கல்ப விகல்பங்களை நிர்மூலமாக்கிய பின் தூய உள்ளத்தால் பிரம்மன் நேராக சாக்ஷாத்கரிக்கப்படுகிறது. (அபரோக்ஷ பிரம்மன் ஞானம்). ஆத்மஞானம் பற்றிய நூல்களைக் கற்பது மறைமுகமான பிரம்மக் ஞானத்தையே வழங்கும் (பரோக்ஷ பிரம்மக்ஞானம்). மன்னனுடைய புத்திசாலித்தனமான விடைகளைக் கேட்ட கற்கடி பெரிதும் மகிழ்ந்தாள். "நீரும் மந்திரியும் உண்மையான முனிவர்கள். இவ்வுலகிலே நீங்கள் மரியாதை செய்யத்தக்கவர்கள். நீங்களிருவரும் ஞான சூரியனைப்போல பிரகாசிக்கிறீர்கள். தங்கள் ஞானோபதேசங்கள் என்னிலே தேவாமிருதமாய் இயங்கின. என் உடம்பு இப்போது குளிர்ந்துள்ளது. ஞானிகளோடு பேரிணக்கம் கொண்டவர்கள் ஆசிர்வதிக்கப் படுகின்ற மக்கள். எல்லா மக்களும் உங்களுடைய புனிதமான பாதங்களை தங்கள் தலைமீது வைத்துக்கொள்ள வேண்டும். ஓ, அரசே! தங்களுக்கு இப்போது எப்படிச் சேவை புரிவேன்? கட்டளையிடுங்கள்" என்றாள் கற்கடி.

அதற்கு மன்னன், "இனிமேல் உன் ஆகாரத்திற்காக மனிதர்களைக் கொல்லவேண்டாம். உயிருள்ள எப் பிராணிக்கும் ஒரு போதும் தீங்கு பண்ணாதே" என்று சொல்ல, கற்கடி "நல்லது. என் தேவரே! தங்களிடம் சத்திய மாய்க் கூறுகிறேன். இனிமேல் எவரையும் கொல்ல மாட்டேன்" என்று பதில் கூறினாள். பின், அரசன் "அப்படியானால், மாமிசம் புசிக்கிறவளே, மாமிசம் இல்லாமல்

உனது உடலை எப்படிப் போஷிப்பாய்?" எனக் கேட்டான். கற்கடி, 'மலையுச்சிக்கு மீண்டும் போய் நிர்விகல்ப சமாதியை வெகுகாலம் பயிலுவேன். உள்ளே ஊற்றெடுக்கும் தேவாமிருதம் பருகுவேன். இறுதியில் உடலைவிட்டு விதேக முக்தி பெறுவேன். ஓ மன்னரே! இப்போது சொல்லுகிறேன் - எனது உயிர் பிரிகிற பரியந்தம் உயிருள்ள உடல் எதையும் கொல்லமாட்டேன். என் வார்த்தையை பிரமாணமாக ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று ஆணித்தரமாக உரைத்தாள். அப்பால் வேந்தன், "ஓ கற்கடி! தயவுசெய்து எங்களோடு அரண்மனைக்கு வந்து தங்குவாய். கொடிய குற்றங்களைப் புரிகிற திருடர்கள் துஷ்டர்களை ஏராளமாகத் தருகிறோம். இத்தீயவர்களை உன் வயிற்று நெருப்புக்குச் சம்பிரமமான உணவாக்கித்தந்து அக்கினியைத் தணித்துக் கொண்டு அப்பால் நீ தியானம் பழகலாம்" என்று கேட்டுக் கொண்டான்.

இதற்குக் கற்கடி சம்மதித்தாள். அவள் இலக்ஷுமிதேவியின் அழகான வடிவத்தை ஏற்றுக்கொண்டு அரசனைத் தொடர்ந்து அவர்களுடைய பொன்மயமான அரண்மனைக்குச் சென்றாள். ஆறு நாட்களிலே அரசன் மூவாயிரம் துஷ்டர்களைச் சேர்த்தான். கற்கடியிடம் இவர்கள் உணவுக்காக வழங்கப்பட்டார்கள். கற்கடி தனது முன்னைய வடிவம் தாங்கிய வண்ணம் தனது தோள்களிலே அம் மூவாயிரம் துஷ்டர்களை ஒன்றாய்க் குவித்துக் கொண்டாள். அப்பால் அரசர், மந்திரியிடம் அவள் விடைபெற்றுக் கொண்டு இமயமலைக்குப் போனாள். துஷ்டர்களைத் தனது உணவாக்கிக் கொண்ட பிறகு சிறிது இளைப்பாறலானாள். கற்கடி சமாதி நிலையில் பிரவேசித்தாள். அவள் நான்கு அல்லது ஐந்து அல்லது சில சமயம் ஏழு ஆண்டுகளுக்கு ஒருமுறை சமாதி கலைந்து எழுவாள். அவள் அரண் மனைக்குப் போய் அரசன் மந்திரியோடு சம்பாஷித்துவிட்டு துஷ்டர்களாகிய உணவுடன் இமயகிரிக்குத் திரும்பிவிடுவாள். இன்று பரியந்தம் அரசனும் கற்கடியும் சினேக பாவத்துடன் பழகி வருகிறார்கள்'' இவ்வாறு வசிஷ்டமுனிவர் உயரிய மனப்போக்கு படைத்த இராமபிரானுக்கு உபதேசித்தார்.

# இந்திரனும் அகல்யையும்

"தாமரைக் கண் படைத்த இராமா! மனம் ஆத்மாவைக் கொல்லுகிறது. இவ்வுலகத்தை மனம் மாத்திரமே சிருஷ்டிக்கிறது. மனத்தின் செயல்கள் மாத்திரமே உண்மையான செயல்கள்; உடலின் செயல்கள் செயல்களாகக் கருதப்படமாட்டா. பிரம்மா மாத்திரமே மனத்தினுடைய ஆச்சரியப்படத்தக்க சக்திகளை நிஜமாகத் தெரிந்து கொள்வார். இவ்வுடலானது தன் காரியங்களுக்கென மனத்தினால் தயாரிக்கப்பட்ட அச்சு வடிவம். மனம் உடலையே நினைக்கிறது; உடலாகவே ஆகிறது. அப்பால் அது இவ்வுடலிலே மாட்டிக்கொண்டு இவ்வுடல் மூலமாக எண்ணிறந்த வலிகளுக்கும் வேதனைகளுக்கும் இலக்காகின்றது. சர்வ வியாபகமாயுள்ள ஆத்மாவுடன் தன்னை அபேதமாக்கிக் கொள்கின்றவர்கள் தான் உடலற்றவரென உணருகிறவருமான முனிவர் உடலுக்கு எதிர்பாராமல் நிகழக்கூடிய எல்லா தீங்குகளினின்று விடுதலை பெறுகிறார். இந்திரனும் அகல்யாவும் கூட உடல்பற்றிய நோவை உணரவில்லை" என்று வசிஷ்டர் திருவாய் மலர்ந்தருளினார். இராமர் "மதிப்பிற்குரிய மஹா குருவே! இந்த இந்திரன் யார்? அகல்யை யார்? இவர்களைப் பற்றி அடியேன் செவிமடுக்க விரும்புகிறேன்" என்றார்.

வசிஷ்டர் அடியில் வருமாறு திருவாய் மலர்ந்தருளலானார் :- பண்டைக்காலத்தில் (பீஹார்) மகத தேசத்தை இந்திரத்துய்மன் எனும் மன்னர் ஒருவர் ஆண்டு வந்தார். அஹல்யை எனும் பெயர் வாய்ந்தவள் அவருக்கு மனைவி. இந்திரன் எனும் பெயர் பெற்ற ஒருவன் அந்நகரில் வசித்து வந்தான். அவன் எல்லாத் துஷ்டர்களுக்கும் தலைவன். இந்த ராணிஅஹல்யை பழங்காலத்திலே கௌதம மஹரிஷியின் மனைவி. அஹல்யைக்கும் இந்திரனுக்கும் நிகழ்ந்த முறை கெட்ட புணர்ச்சியின் கதையைப் பற்றி கேள்விப்பட்டிருந்தாள். இந்த இந்திரன் மீது காமமுற்று சில காலம் அவள் அவனோடு வாழ்ந்தாள். இச்செய்தி மன்னருக்கு எட்டியது. மன்னர் கடுங்கோபங் கொண்டார். குளிர்காலத்தில்

குளிர்ந்த நீர் நிரம்பிய குளத்திலே இவர்களை வீசினார்கள். வலியின் குறி எதையும் இவர்கள் காட்டவில்லை. தங்கள் ஆனந்தக் களி வெறியிலேயே அவர்கள் புன்முறுவலித்துக் கொண்டே இருந்தார்கள். நெருப்பிலே வைக்கப்பட்ட பெரியதோர் பொரித்தட்டின் மேலே அவர்கள் எறியப்பட்டார்கள். அவர்கள் தீங்கின்றி இருந்த வண்ணம், "ஓ, அரசே நாம் ஒருவரைப்பற்றி ஒருவர் நினைந்து மகிழ்கின்ற ஆத்மானந்தத்தில் திளைக்கிறோம்" என்று பேசினார்கள். யானைகளால் அவர்கள் மிதிக்கப்பட்டார்கள். ஆனால் எவ்வித ஊறும் ஏற்படவில்லை. "ஒருவரையொருவர் ஞாபகத்திலிருத்திக் கொள்வதன்மூலம் எழுகிற ஆனந்தத்தை இதய பூர்வமாக உணருகிறோம். அரசே!" என்று கூறினார்கள். அவர்கள் தடிகளாலும் சவுக்கினாலும் அடியுண்டார்கள். சம்மட்டிகளாலும் அவர்களை மோதினார்கள். வலியின் எவ்விதமான குறியும் காண்பிக்க வில்லை. அவர்கள் வெறுமனே புன்னகை செய்தார்கள், சிரித்தார்கள்.

அரசர் ஆச்சரியத்தால் திகைத்தார். இந்திரனையும் அஹல்யையும் நோக்கி, "நீங்கள் வேதனைக்கு உள்ளாக்கப் படுகிற போது வலியை நீங்கள் உணராமலிருந்தது எப்படி?" என்று கேட்டபோது அவர்கள் சொல்லலானார்கள். "அரசே நம்மிருவரையும் எவ்விதமான வேதனையும் பிரித்து வைக்காது. இவ்வுலகம் முழுவதும் அஹல்யையின் வடிவத்தாலும் எனது வடிவத்தாலும் நிரப்பப்பட்டுள்ளது. நம்மை நாமே உலகம் முழுமையும் நிறைந்தவர்களாக நோக்குகிறோம். நம் காதலை ஒவ்வொரு வடிவத்திலும் காண்கிறோம். அவள் முகத்தை உற்றுநோக்குகிறேன். அவள் என்னை உற்றுப் பார்க்கிறாள். பேரானந்தத்தைத் துய்க்கிறோம். ஆகையால் நாம் முற்றிலும் நமது உடலை உணருகிறதில்லை. எவ்வித வேதனையும் எமக்கு இல்லை. உடல் துண்டங்களாக வெட்டப்படும் போது கூட கிஞ்சித்தேனும் வலியை நாம் உணரமாட்டோம். ஒரு பொருளை மனமானது முற்றிலும் பற்றிக் கொண்டால்,

உடலின் செய்கைகளைக் காணவும் உணரவும் அங்கே வேறு யார் இருக்கிறார்கள்? வலியை அனுபவிப்பதற்கு மனம் ஒன்று தான் கருவியாயுள்ளது. இம்மனம் மிக்க விருப்பமாய் உள்ள ஒரு பொருளிலே முற்றிலும் உறிஞ்சப்படுகிறது. வலி எங்ஙனம் அதைத் தொடக்கூடும்? அத்யந்த பிரியத்திற்குரிய அதன் பொருளினின்று இம்மனத்தை உலகத்தில் எந்தச் சக்தியும் திருப்ப இயலாது. உடல்கள் அனைத்தும் உள்ளத்திலிருந்து தான் உற்பத்தியாகின்றன. எல்லாம் மனமே செய்கிறது. அது மகோன்னதமான உடல். இவ்வுடல் அழிந்துபட்டாலும் கூட, மனமானது தனது விருப்பத்திற்கிணங்க விரைவிலே புதிய உடல்களை எடுத்துக் கொள்ளும். ஆத்மஞானத்தின் மூலமாக இம்மனம் உயிர்தெழுதலுக்கு இடமில்லாமல் நசிக்கப்பட்டால், அப்பால் தான் உடல்கள் கிளம்பமாட்டா" என்று சாங்கோ பாங்கமாய்ச் சாற்றினார்கள்.

இச் சொற்களைக் கேட்டதும் மன்னர் மகிழ்ச்சி யடைந்தார். சபாமண்டபத்தில் அரசர் அருகில் அமர்ந்திருந்த பாதமுனிவர் அத்தம்பதிகள் ஆவேசமான காமவெறிக்கு உட்பட்டிருந்தாலும், ஞானம் பேசுகிறார்கள் என்று கூறினார். அயல் நாட்டில் அவர்கள் சுதந்திரமாக இன்பம் நுகரட்டும் என்ற நோக்கத்திலே அரசர் அவ்விருவரையும் இராஜ்ஜியத்தினின்று துரத்திவிட்டார். பல்வேறு அவயங்களோடு கூடிய உடலானது மனமே தவிர வேறல்ல. இப்பிரபஞ்சம் கூட மனமே தவிர வேறு எதுவுமல்ல. மனம் நாசமானால், உடலும் பிரபஞ்சமும் கூட பறந்துபோகும்- இங்ஙனம் வசிஷ்ட முனிவர் கதையை முடித்தார்.

59

## பாலன் கதை

"பராக்கிரமம் வாய்ந்த இராமா! பிரம்மனினின்று ஒரு முனிவரின் மனம் பேதப்பட்டதல்ல. ஞானஒளி வாய்க்கப் பெறாதவனின் மனம் தவறுக்கும் அறியாமைக்கும் காரணமாகும். இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி, பூமசக்தி, அகர்த்தசக்தி முதலிய அனந்த சக்திகள், பிரம்மனிலே உள்ளவை. மகோன்னதபிரம்மன், பரிபூரணர், சிறந்தவர், அழியாதவஸ்து. அவரது ஏற்றத்தாழ்வு சக்தி காற்றிலே விளங்குகிறது. அவரது கடினமான சக்தி கல்லிலே உள்ளது. அவரது உஷ்ணசக்தி நெருப்பிலே இருக்கிறது; சூனியம் ஆனசக்தி ஆகாசத்திலும், திரவத்தன்மை வாய்ந்தசக்தி நீரிலும் பொருந்தியுள்ளன. தூய்மையானவர்களின் இதயங்களிலே அவரது பேரானந்தம் உணரப்படுகிறது. அவரது பராக்கிரமம் யோகிகளிடத்தில் காணப்படுகிறது. அவரது சிருஷ்டி சக்தி அவர் சிருஷ்டித்த வேலைகளிலே காணப்படுகிறது. மகா கல்ப காலத்தின் இறுதியில் தோன்றும் மகத்தான பிரளயத்திலே அவரது சம்ஹாரசக்தி விளங்குகிறது. மரம் விதைக்குள் அடங்கியிருப்பது போல, ஒவ்வொன்றும் பிரம்மனிலே அடங்கியுள்ளது. பிரம்மன் ஒருவரே. அவர் தமது மாயா சக்தியினாலே நானாவிதமாகத் தோற்றுவித்துக் கொள்கிறார். பிரம்மன் மாத்திரமே நினைப்பின் மூலமாக மனசாகவும், அவித்தை எனும் உபாதியின் மூலமாக ஜீவாத்மாவாகவும், மாயை எனும் உபாதியின் மூலமாக ஈஸ்வரராகவும் விக்ஷேப சக்தி மூலமாக பிரபஞ்சமாகவும் தோற்றுவித்துக் கொள்கிறது.

பந்தமும் மோக்ஷமும் அஞ்ஞானிகளின் எண்ணங்கள். சதா சுதந்திரமாயுள்ள ஆத்மாவை பந்தப்பட்ட ஆத்மா என்று பேசுவது தவறு. எப்போதும் விடுதலையான ஆத்மாவின் விடுதலை பற்றிப் பேசுவது பொய். ஒரு தாயாரால் தன் மகனுக்கு கூறப்பட்ட பழைய பாட்டிகதை, கட்டுக் கதையைப் போல, அஞ்ஞானச் சக்தியிலே ஆழ்ந்துள்ளவர்களுக்கு உலகமானது உண்மையாக இருக்கும்" என்றார் வசிஷ்டர்.

"ஓ, மரியாதைமிக்க குருதேவரே! தயவுசெய்து அக்கதையைச் சொல்லுங்கள். அதைக் கேட்க ஆவலுள்ளவனாயிருக்கிறேன்" என்று இராமபிரான் கூறவே, வசிஷ்டர் கதையைக் கூறத் தொடங்கினார். ஒரு பையன் தன் தாயாரிடம் நல்ல கதை ஒன்று பொழுதுபோக்கு வேடிக்கைக்காகத் தனக்கு கூறுமாறு கேட்க, அவள் அடியில் வரும் கட்டுக் கதையைக் கூறத் தொடங்கினாள்:-

ஒரு காலத்தில் மூன்று இளவரசர்கள் பாழ் எனும் நகரத்தில் வாசம் புரிந்தார்கள். அவர்கள் மிக்க பெருந்தன்மையாயும் குணசீலராயும் தைரியமாயும் இருந்தார்கள். இம்மூவரில் இருவர் பிறக்கவே இல்லை. மூன்றாவது இளவரசன் கர்ப்பத்திற்கு உள்ளாக்கப்படு வோமென்று கருதி ஒரு போதும் கருப்பையில் நுழைந்ததே கிடையாது. அவர்கள் பிரயாணமானார்கள். ஆகாச நந்தவனத்திலே அவர்கள் களைப்பாறினார்கள். பலவித பழங்களைப் புசித்து மேல்நோக்கிய திசையில் தொடர்ந்து பயணம் செய்யலானார்கள். வெகுதொலைவில் போன பிறகு, நடுப்பகலில் வேகமாகப் பிரளயமாகவும், பெருகிய அலைகளாகவும் ஓடுகிற மூன்று நதிகள் சந்திக்கிற இடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். இம்மூன்றிலே இரண்டில் தண்ணீர் இல்லை. மூன்றாவது நதியில் வெள்ளை மணல் தவிர வேறு எதுவுமில்லை. அவர்கள் மூன்றாவது நதியில் வெகுநேரம் நீரில் விளையாடியும் பால்போல் இனிமையாயிருந்த ஜலத்தைப் பருகியும் உல்லாசமாய் நீராடினார்கள்.

தங்கள் பயணத்தைத் தொடர்ந்தார்கள். சூரியாஸ்தமன வேளையில் அவர்கள் ஒரு நகரத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள். அந்நகரம் இருந்ததில்லை. அங்கே மூன்று வீடுகளைக் கட்டினார்கள். ஒன்று அஸ்திவாரம் இல்லாதது, இரண்டாவது வீட்டிற்கு சுவர்களே கிடையா. மூன்றாவது வீட்டிற்கோ சுவர்களும் கூரைகளும் கிடையா. ஆகாசத்திலே கண்ணுக்குத் தெரியாத நகரிலே கட்டப்பட்ட அம்மூன்று அழகிய வீடுகளிலே மூன்று இளவரசர்களும் சௌக்கியமாக வசித்தார்கள். மூன்று மூன்று குடங்களைக் கண்டார்கள்.

அவர்கள் தூக்கியவுடன் இரண்டு குடங்கள் துண்டு துண்டாக உடைந்து போயின. மூன்றாவது குடம் அவர்கள் தொட்டவுடன் மண்ணாகிப்போனது. இக்குடங்களிலே எட்டு படிகளிலிருந்து பன்னிரண்டு படிகளைக்கழித்து வருகின்றபடி அரிசியைப் போட்டு நீரும், நெருப்பும் இல்லாமல் ஓர் அழகிய முறையில் சமைத்தார்கள். அவர்கள் அவ்வுணவை வாயற்ற நாவற்ற பல்லற்ற கணக்கற்ற பிராம்மணர்களுக்கு விநியோகித்தார்கள். அம்மூவரும் எஞ்சிய உணவை இதயபூர்வமாக நிறை உள்ளத்துடன் உட்கொண்டார்கள். மாலைப்பொழுதிலே அவர்கள் வேட்டையாடச் சென்று உல்லாசமாகக் காலங் கழிக்கலானார்கள். (கதை முடிவு பெற்றது).

தாயார் கதையை முடித்ததும், பையன் தான் கேட்ட கதையை நினைத்து மிக்க மகிழ்ச்சியடைந்தான். அக்கதை முற்றிலும் உண்மையானதென்று பையன் நம்பினான். இதுபோலவெ, அஞ்ஞான மக்கள் பகுத்தறிவும் ஆன்மீக விசாரமும் அற்றவர்களாய் இவ்வுலகம் முற்றிலும் உண்மை என நம்புகிறார்கள். உண்மையானதெனக் கொள்ளப் படுகின்ற காற்றில் கட்டப்பட்ட உலகமாகிய கோட்டை தாயாரின் கற்பனைத் திறத்தால் உண்டுபண்ணப்பட்ட பொய்க் கதையாம். காற்றுச் சூனியமான ஒன்றிற்கு நாமமும் ரூபமும் அளித்தாள் தாயார். இம்மாதிரி இந்த பொய்யான உலகிலுள்ள பிராந்திமயமான பொருள்களுக்கு நாமரூபத்தை மனம் அளித்துள்ளது. இப்பிரபஞ்சம் சங்கல்ப இயல்பு மாத்திரமல்லாது வேறல்ல. மனம் இவ்வுலகை உண்டு பண்ணுகிறது. உனது கற்பனைச் சிருஷ்டிகளைத் தவிர்த்து வேறே எதுவும் உண்மையில் இல்லை. கற்பனா சக்தி எல்லாப் பொருள்களையும் விசித்திரமான வகைகளிலே நிர்மாணிக்கிறது. வானம், பூமி, ஆகாயம், காற்று, நதிகள், மலைகள், மரங்கள் ஆகியவை உனது சொப்பனத் தோற்றங்கள் போன்று உனது சங்கல்ப சிருஷ்டிகளாகும். காற்றுச் சூனியத்திற்குக் கற்பனை உருவம் வழங்குகிறது. இம்மனம் விரிதலே சங்கல்பமாம். சங்கல்பம் இவ்வுலகை

நானாவிதத்தன்மையெனும் தனது சக்தி மூலமாக சிருஷ்டிக்கிறது. பிரபஞ்சம் முழுவதும் கற்பனை அல்லது சங்கல்பத்தின் பின்னல் வேலை ஆகும். சங்கல்பம் அல்லது கற்பனை உள்ளத்தின் மிக்க சுறுசுறுப்பு படைத்த சக்தியாகும். ஓ இராமா! ஆகையால் எல்லா சங்கல்பங்களையும் ஒழித்துக்கட்டுவாயாக. உள்ளத்தின் வேறுபாடுகள் அல்லது சங்கல்பங்கள் இல்லாத நிர்விகல்ப நிலையைப் பெறுவாயாக - என்று வசிஷ்ட மகிரிஷி திருவாய் மலர்ந்தருளினார்.

## ஓர் சித்தரின் கதை

வசிஷ்டர் கூறலானார் : “ஓ’ இராமா! பொய் கற்பனையின் காரணமாக தவறுகளுக்கு அஞ்ஞானிகள் ஆளாகின்றார்கள். அவர்கள் பிராந்திமயமான இவ்வுலகை உண்மை எனக் கருதுகிறார்கள். அழியவொண்ணாத ஆத்மாவுக்கு அவர்கள் அழியுந்தன்மையை பொருத்து கின்றார்கள். அவர்கள் உள்ளங்களும் காலமும் தங்கள் சங்கல்பங்கள் அல்லது எண்ணங்கள் மூலமாக மாறிக் கொண்டே இருக்கின்றன. அவர்கள் தங்கள் உடல்களோடு அபேதமாக்கிக் கொள்கிறார்கள். ஆனால் முனிவர்கள் தீய கோட்பாடுகளிலிருந்தும் தவறுகளிலிருந்தும் முற்றிலும் விடுதலை பெற்றவர்கள். இவ்வுலகம் அவர்களுக்கு ஓர் கானல் நீர் போன்று உள்ளது. அவர்கள் எப்போதும் நித்திய ஆத்மாவோடு தங்களை அபேதமாக்கிக் கொள்கிறார்கள். ஓ, இராமா! உலகம் உண்மை எனும் தவறான கோட்பாட்டை விலக்கிவிடு. பொய்யானவையும் நிஜமல்லாதவையும் ஒருமிக்க ஒழித்துக்கட்டுக. அனைத்துக்கும் அஸ்திவாரமாயும் ஆதரவாயுமுள்ள நித்திய பிரம்மன் அல்லது சர்வ வியாபகமான ஆத்மா ஒன்று மாத்திரமே உண்மையானது. உண்மையின் தன்மை பற்றி விசாரம் செய். ஒருபோதும் நீ கட்டுண்டிருக்கவில்லை. எப்போதும் நீ சுதந்திரவான். பிரம்மன் மாத்திரமே ஒரே உண்மைப் பொருளாகும்போது ஜீவன் எங்கே? மனம் எங்கே? சுதந்திரம் எங்கே? பந்தம் எங்கே? யார் கட்டுண்டிருக்கிறார்? யார் மோக்ஷம் எய்துகிறார்? பந்தமும் மோக்ஷமும் உள்ளத்தின் பொய்யான கற்பனைகள். அழியக்கூடிய உடலுக்கும் நித்திய ஆத்மாவுக்கும் உள்ள சம்பந்தம் ஒரு பானையும் அதிலுள்ள ஆகாசமும் போன்றுள்ளது. நிஜமல்லாத உலகம் நமக்கு நிஜமாகத் தோன்றுகிறது. பிரபஞ்சகாலக் கற்பனையோ நமது உறக்கத்தில் தோன்றுகிற நீண்டதோர் சொப்பனம் போன்றுள்ளது. இவ்வுலகம் நீண்டதோர் சொப்பனம். இவ்வுலகம் ஓர் பெரிய வனம். இது நோய் போன்ற நாகங்களாலும் மரணத்தாலும் நிரப்பப்பட்டிருக்கிறது.

இவ்வனத்திற்கு அதிபன் மனம். அது நம்மை ஒரு வகைப்பட்ட அபாயங்களுக்குத் தூண்டிவிடுகிறது. இது உலகச்சிந்தனை அல்லது கருத்து ஆகும். அதன் இருப்புக்கு இதுவே காரணமாகிறது. 'ஓ, இராமா! விசாரம், தர்க்கம், மற்றும் பகுத்தறிவு ஆகியவற்றின் மூலம் இவ்வுலகத்தை உன் மனத்தினின்று வெளியே துரத்துவாயாக. மனம் தனது ஓய்வற்ற ஆசைகளினால், வலியிலும் மரணத்திலும் உன்னை ஈடுபடுத்துகிறது. மனத்தின் கடிவாளத்தைத் தளர்த்திவிடாதே. தாக்ஷண்யமின்றி அதை அடக்குக. அதைக் கட்டுப்படுத்துக; விலக்குக. விரைவிலே நீ உண்மையை உணர்ந்து இறுதி மோக்ஷத்தை உறுதியாகப் பற்றுவாய். வலிகள், துயரங்கள், பிரமைகள் அனைத்தும் முடிவுபெறும்.

மனத்திற்கு சுயேச்சையான இருப்பு இல்லை. கடல் நீரை அலைகள் சார்ந்திருப்பன போன்று மனம் பரமாத்மாவைச் சார்ந்துள்ளது. மனம் சதா மாறிக் கொண்டே இருக்கிறது. அது பகைவனை நண்பனாகவும், நண்பனைப் பகைவனாகவும் தவறாகக் கருதுகிறது. மேல்நிலையிலுள்ளதைக் கீழ்நிலைக்கு கொணரவும் கீழுள்ளதை மேல்நிலைக்கு உயர்த்தவும் செய்கிறது. ஒரு சமயத்தில் அதற்கு ஓர் உணர்ச்சி அல்லது நிலைமை உள்ளது. மற்றோர் சமயத்திலோ வேறு உணர்ச்சி அல்லது நிலைமை வந்துவிடுகிறது. உண்மையைப் பொய்யாகவும் பொய்யை உண்மையாகவும் அது எடுத்துக்கொள்கிறது. இன்பமும், துன்பமும், சுகமும், துக்கமும், மகிழ்ச்சியும் வேதனையும் மனத்தினுடைய சிருஷ்டிகளேதான். தீயவினைகளின் பலன்களை மனம் மாத்திரமே அறுவடை பண்ணுகிறது. மனத்திற்கு சுதந்திரமாக ஒரு பொருளும் தென்படவில்லை; தனது எல்லா உணர்ச்சிகளுக்கும் மனமே காரணமாகிறது. மனத்தின் மூலமாகத்தான் நீ தேடுகிறாய், ஸ்பரிசிக்கிறாய், பார்க்கிறாய், சுவைக்கிறாய், முகர்ந்து பார்க்கிறாய். இவ்வுடலை மனந்தான் இயக்குகிறது. காலப் போக்கு, இடத்தின் தொலைவு, நீளம், அகலம், உயரம் அசைவின் விரைவுத் தன்மை, மந்தநிலை, காலத்தின் வேகநிலை, மெதுவான நிலை, பெரிய சிறிய தோற்றம் மிகப்

பெரியது, மிகச் சிறியது, கறுப்பு அல்லது சிகப்பு, வட்டமான அல்லது முட்டை வடிவமான தன்மை - அனைத்தும் மனத்தில் மாத்திரமே எழுகின்றன. அவை எல்லாம் மனச் சொரூபத்திற்கே உரியவை.

பொருள்களின் எண்ணங்கள் பந்தத்திற்கு அழைத்துச் செல்லுகின்றன. எண்ணங்களின் துறவு மோக்ஷத்திற்கு இட்டுச் செல்லுகின்றது. இப்பிரபஞ்சம் எண்ணங்களின் விரிவு தவிர வேறு எதுவும் அல்ல. இவ்வுலகம் ஓர் பெரிய பொருட்காட்சி. இப்பொருட்காட்சி மனத்தால் மாத்திரமே நிருமாணிக்கப்படுகிறது. பருவகாலங்கள் மரங்களிலே மாறுதல்களை விளைவிக்கின்றன. அதுபோல, மனம் மக்களின் தன்மையிலே மாற்றங்களை விளைவிக்கிறது. இவ்வுலகிலுள்ள மக்கள் எவ்வளவோ அவ்வளவு மனங்கள் உள்ளன. ஒரே மனப்பான்மை படைத்த இருவரைக் காண்பதோ கடினம். பொருள்களிலே மனம் குதித்துக் கும்மாளமடிக்கிறது. அது மாயையைச் சிருஷ்டிக்கிறது. மனத்தின் திருவிளையாடலில் அண்மை சேய்மையாகவும் சேய்மை அண்மையாகவும் தோன்றுகிறது. கல்பகாலம் ஒரு க்ஷணப்பொழுதாகவும் க்ஷணப்பொழுது கல்ப காலமாகவும் தோன்றுகிறது. இக்கொள்கையை நன்கு விளக்குவதற்காக இப்போது விநோதமான கதை ஒன்றைக் கூறுகிறேன். ஓ, இராமா! இதை நீ முற்றிலும் பரவசத்தோடு கவனமாய்க்கேள் - என்று திருவாய் மலர்ந்தருளினார் வசிஷ்டர்.

உத்தர பாண்டவ எனும் தேசத்தை ஹரிச்சந்திரன் குலத்தில் உதித்த லவணன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அவன் புனிதமான வெற்றியுடன் கூடிய மன்னன். சபா மண்டபத்தில் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்க, அவனுடைய மந்திரி பிரதானிகள் அனைவரும் அங்கே கூடியிருந்தார்கள். அப்போது, ஓர் சித்தன் (மந்திரவாதி) பிரவேசித்து மன்னனை வணங்கி "மன்னர் பெருமானே! எனது அற்புதமான செயல்களைக் காண்பீர்களாக" என்று கூறினான். சித்தன் மயிலிறகுக் கொத்தை கையால் சுழற்றினான். அடியிற் காணும் அநுபவங்களுக்கு அரசன் உள்ளானான். சிந்து மன்னனின்

தூதன் இந்திரனுடயதைப் போன்ற ஓர் குதிரையுடன் அங்கு வந்து "மன்னரே! இக்குதிரையை எனது யஜமானர் தங்களுக்குப் பரிசாக வழங்கியுள்ளார்" என்றான். சித்தன் அக்குதிரை மீதேறிச் சந்தோஷமாகச் சவாரி செய்யுமாறு கேட்டுக் கொண்டான். மன்னன் அக்குதிரையை உற்றுப் பார்க்கையில், மெய் மறந்து மூர்ச்சித்தான். இரண்டு மணி நேர அவகாசம் கழிந்தது. அவனுடைய உடல் தளர்ந்து சிறிதுநேரத்தில் கீழே வீழ்ந்தது. மன்னனின் மெய்க் காவலர்கள் உடனே உடலைத் தூக்கினார்கள். அப்பால் படிப்படியாக மன்னனுக்கு உணர்வு திரும்பியது. மந்திரி பிரதானிகள் மன்னரை நோக்கி "மன்னர் பெருமானே! தங்களுடைய உடல்நிலை எப்படியிருக்கிறது?" என்று வினவினார்கள். மன்னன் அடியில் வருமாறு பேசலானான்.

சித்தன் மயிலிறகுக் கொத்தைச் சுழற்றினான். எனக்கு முன்னால் குதிரை ஒன்றைக்கண்டேன். நான் குதிரைமீதேறி ஓர் பாலைவனத்திலே கடும் வெயிலில் சவாரி செய்தேன். என் நா உலர்ந்தது. நான் முற்றிலும் களைத்திருந்தேன். அப்பால் அழகான ஓர் வனத்திலே பிரவேசித்தேன். குதிரைமீதே சவாரி செய்து கொண்டிருக்கும் போது ஓர் கொடி என் கழுத்தைச் சுற்றிக்கொண்டது. குதிரை ஓடியேவிட்டது. கொடி என் கழுத்தைச் சுற்றிக் கொண்டபடியால் இரவு முழுவதும் நான் காற்றில் அங்குமிங்குமாய் அசைந்தாடினேன். பகலிலே குளிக்கவோ சாப்பிடவோ இல்லை. இரவு முழுவதும் மிகுந்த குளிரினால் தாக்குண்டு உடம்பு நடுங்கிக் கொண்டிருந்தது. பொழுது புலர்ந்தது. கதிரவன் உதித்தான். கழுத்தைச் சுற்றிக் கொண்டிருந்த கொடியை வெட்டித்தள்ளினேன். அப்பால், உணவைத் தலையில் சுமந்து போகும் ஓர் சண்டாள மங்கையைப் பார்த்தேன். கடும்பசி எனக்கு. கொஞ்சம் ஆகாரம் கொடுக்குமாறு அவளைக் கேட்டேன். எனக்கு ஒன்றும் தரவில்லை. நெடுநேரம் அவளை நான் நெருங்கிப் பின் தொடர்ந்தேன். அப்பால் என் பக்கம் திரும்பிய வண்ணம் அம் மடந்தை "நான் சண்டாள மாது. எங்கள் ஊரிலே எனது பெற்றோர்கள் முன்னிலையில்

என்னை மணந்துகொண்டு அங்கேயே என்னுடன் வசிக்கிறேன் என்று தாங்கள் வாக்குறுதி செய்வீர்களாகில், இப்போதே என்னிடமுள்ளதைத் தங்களுக்கு வழங்குகிறேன்" என்று பகர்ந்தாள். அவளை மணக்க இசைந்தேன். உணவில் பாதியை எனக்குத் தந்தாள். அதைப் புசித்து நாவல் பழங்களினால் செய்யப்பட்ட ஓர் பானத்தைப் பருகினேன். அவள் என்னைத் தன் பிதாவிடம் அழைத்துச் சென்றாள். தன்னை எனக்கு மணஞ் செய்து கொடுக்க அனுமதி கோரினாள். பிதா ஒப்புக்கொண்டான். அப்பால் அவள் தனது கிராமத்திற்கு என்னை அழைத்துப் போனாள். பெண்ணின் பிதா குரங்குகளையும், காக்கைகளையும் பன்றிகளையும் கொன்று அவற்றின் மாமிசங்களைக் கயிற்றில் உலரப் போட்டான். சிறு குடிசை அமைக்கப்பட்டது. அதிலே பெரியதோர் வாழை இலை மேலே என்னை உட்காரவைத்தார்கள். ஒரக்கண் படைத்த எனது மாமியார் இரத்தச் செகப்பு வாய்ந்த கண்விழிகளை உருட்டி உருட்டி என்னை பார்த்தவாறு "இவர் தானா நமக்கு வாய்க்கும் மாப்பிள்ளை?" என்று வினவினாள். திருமண விழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. எனது மாமனார் ஆடை உடைகளையும் இதர பொருள்களையும் சீராகக் கொடுத்தார். மாமிசமும், கள்ளும் தாராளமாக விநியோகிக்கப்பட்டன. மாமிசத்தைப் புசித்த வண்ணம் சண்டாளர்கள் தங்கள் முரசுகளை ஒலித்தார்கள். சண்டாளப் பெண் எனக்கு விவாகஞ் செய்து கொடுக்கப்பட்டாள். புஷ்பா எனும் நாமம் எனக்கு வழங்கப்பட்டது. விவாகம் ஏழு நாட்கள் நிகழ்ந்தது. அச்சண்டாள மனைவியோடு எட்டு மாதங்கள் வசித்தேன். ஒரு பெண் குழந்தை பிறந்தது. மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு கருப்புப் பையன் ஒருவன் பிறந்தான். அப்பால் பிறந்தது இன்னொரு பெண். கிழட்டுச் சண்டாளனாக ஆகிவிட்டேன். குடும்பம் பெருத்தது. நீண்டகாலம் வசித்தேன். துயரத்திற்கு மூலகாரணம் குழந்தைகளே. காமத்திலிருந்து உதித்த மானிடர்களின் துயரங்கள் ஓர் குழந்தையின் வடிவெடுத்துக் கொள்கின்றன. எனது உடல் கூனிக் குறுகிவிட்டது - குடும்பத்

தொல்லைகளினாலும் கவலைகளினாலும் தாக்கப்பட்டு அதிபயங்கரமான அக்காட்டில் வெயிலினாலும் மழையினாலும் அவஸ்தைப்பட்டேன். பழைய கந்தல் துணி என் உடலைச் சுற்றியிருந்தது. தலையில் விறகுக் கட்டைகளைச் சுமந்தேன். ஊதல் காற்றிற்கு இலக்கானேன். கிழங்குகளைப் புசித்து வாழவேண்டியிருந்தது. நெடுங்காலம் நிறைந்த கல்ப யுகங்கள் போன்று அறுபது ஆண்டுகளைக் கழித்தேன். கொடுமையான பஞ்சம் வந்தது. பசியினால் பலர் மாண்டார்கள். எனது உறவினர்களில் சிலர் ஊரை விட்டே வெளியேறினார்கள்.

என் மனைவியுடன் நானும் ஊரை விட்டுப் புறப்பட்டேன். அகோரமான வெயில். தோளில் இரண்டு குழந்தைகளையும் மூன்றாவதைத் தலைமேலும் உட்கார வைத்துக் கொண்டேன். நெடுந்தூரம் பயணம் செய்தோம். ஓர் காட்டு எல்லைக்கு வந்தோம். பெரியதோர் பனை மரத்தடியில் நாங்கள் இளைப்பாறிக் கொண்டிருந்தோம். வெயில் கொடுமையாலும் நெடுந்தூரம் நடந்தமையாலும் என் மனைவி இறந்துவிட்டாள். பிராசேகா எனும் பெயர் வைக்கப்பட்ட எனது மகன் கண்களினின்று நீர் தாரை தாரையாக வழிந்தோட எழுந்து நின்று என்னைப் பார்த்து "அப்பா, பசி தாளமுடியவில்லை. ஏதாவது மாமிசமும் ஜலமும் உடனே கொடு. இல்லாவிட்டால் நான் செத்துவிடுவேன்" என்று அகோரமாக அழுத வண்ணம் கேட்டான். பசியால் சாகிறேன், சாகிறேன், என்று இடைவிடாமல் கூக் குரலிட்டான். பிதுர்வாஞ்சை மேலீட்டால் நான் இளகினேன். என் இதயம் பெரிதும் பாதிக்கப்பட்டது. துன்பத்தைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. அப்பால் நெருப்பில் விழுந்து எனது உயிரை மாய்த்துக் கொள்வதெனத் தீர்மானித்தேன். விறகுக் கட்டைகளைப் பொறுக்கி நெருப்பு மூட்டினேன். நெருப்பில் பிரவேசிக்கக் காலைத் தூக்கினேன். சிம்மாசனத்திலிருந்து கீழே விழுந்து கண்விழித்துக் கவனிக்கவே இசைக் கருவிகள் இனிய கீதத்தையும் "ஜயம் ஜயம்" என்று நீங்கள் என்னை தூக்கிக் கொண்டே

கோஷமிடுவதையும் கேட்கிறேன். லவண மன்னனாகக் காண்கிறேன்- சண்டாளனாக அல்ல. கற்பனைத் தொல்லைகள் இவ்வளவுக்கும் என்னை அந்த மாந்திரீகன் நெடுங்காலம் ஆளாக்கினான் என்பதை இப்போது அறிகிறேன்" -என்று கூறி முடித்தான் அரசன்.

மந்திரிகள் அந்த சித்தன் யார் எனக் கேட்ட போது சம்பாரிகா எனும் பெயருள்ள அச்சித்தன் உடனே காணாமற் போய்விட்டான்.

வசிஷ்டர் அடியில் வருமாறு திருவாய் மலர்ந்தருள லானார். ஓ, இராமா! இந்த சித்தன் தெய்வீக மாயை தவிர வேறு எவருமல்லர். இப்பிரபஞ்சம் மனத்தைத் தவிர வேறு எதுவுமில்லை என்பதை இக்கதை தெளிவாக விளக்குகிறது. பரப்பிரம்மன் மாத்திரமே மனமாகவும் உலகமாகவும் தோற்றமாகிறான். எதை எதைப் பார்க்கிறாயோ அதது சித்தத்தின் சொரூபமேதான். காலம் என்பது மனத்தினுடைய ஓர் நிலை. கனவிலே நூற்றாண்டு கால நிகழ்ச்சிகளை ஐந்தே நிமிஷத்திற்குள் அனுபவித்துவிடுகிறாய். மனம் ஏகாக்ரப்படும் போது ஒரு மணி, ஐந்து நிமிஷங்களாகத் தென்படுகிறது. ஏகாக்ரம் இல்லாத போது பத்து நிமிஷங்கள் மூன்று மணி நேரமாகத் தோன்றும். ஒவ்வொருவரும் இவ்வுலகில் இதை அநுபவித்திருக்கிறார்கள். இரண்டு மணி நேரத்திற்குள் லவணமன்னன் அறுபது வருஷ அநுபவங்களைப் பெற்றுவிட்டான். இப்பிரபஞ்சம் மனத்தினுடைய சிருஷ்டி. மனம் அல்லது மாயை மகத்தான மாயாவி அல்லது மாந்திரீகன். மனம் அல்லது மாயை இக்கதையிலுள்ள சித்தனை அல்லது மாந்திரீகனைக் குறிக்கிறது. மனமே மாயை, மனம் மாயையின் கருவி. ஆசாபாசங்களுக்கு அடிமையான மானிடர்களின் துயரமான நிலைமையையும் உலக நிலைமையையும் லவண மன்னனின் அநுபவங்கள் தெளிவாகக் கூறுகின்றன. இம் மாயா உலகம் சர்வ சக்திமானாகிய சர்வேஸ்வரனின் ஆடம்பரக் காட்சியாகும். இறைவனின் சக்தியாகிய மாயையின் மாந்திரீக ஆதிக்கத்தின் கீழ் இவ்வுலகிலே ஜீவர்கள் முற்றிலும் மருண்ட நிலையில்

நடமாடுகின்றனர். உண்மையல்லாதவைகளை உண்மை யென அவர்கள் நம்புகிறார்கள். உண்மை அவர்களுக்குப் பொய்யாகிப் போகிறது. மரமானது தனது விழுதுகளினாலும் கிளைகளினாலும் விஸ்தரித்து வளர்ச்சி அடைவது போல, மனமானது தனது பல்வேறு கற்பனைகளினாலே விஸ்தரிக்கப்படுகின்றது. மனத்தின் கற்பனைகளை அல்லது சங்கல்பங்களை நீ அழித்தால், பூரண நிலையில் மனத்தைக் கட்டுப்படுத்தினால், பகுத்தறிவு, விசாரம், பற்றற்ற நிலை, ஆத்மாவின் மீது செய்யப்படும் ஒழுங்கான தியானம்! ஆகியவற்றின் மூலம் மனத்தைப் படிப்படியாக உனது ஆதிக்கத்திற்குள் கொண்டு வந்தால், மாயையினால் நீ மேற்கொள்ளப்படமாட்டாய். நீ அமரத்துவம் பெற்று நித்திய வஸ்துவின் நிலையான பேரின்பத்தை அநுபவிப்பாய்.

# நான்காவது ஸ்திதிப் பிரகரணம்

## சுக்கிரன் விருத்தாந்தம்

"வீரமுள்ள இராமா! மனம் எல்லாமாய் இருக்கிறது. எச்செயல்களுக்கும் முதன்மையாயிருப்பது அதுவே. வெளி உலகத்தை மறுப்பதும் சிந்தனைகளை ஒடுக்குவதுமே மனமாகிய பேயை அடக்குவதற்கு உற்ற உபாயம். கதிரவனிலே சூரிய கிரணங்கள் பொருந்தியுள்ளன. அதுபோல, உலகம் உள்ளத்திலே பொருந்தியுள்ளது. உலகங்களுக்குக் களஞ்சியமாயுள்ளது உள்ளம். உலகம் உள்ளத்தோடு அன்னியமாயுள்ளது. உலகமும் உள்ளமும் ஒன்றோடொன்று பிரிக்க முடியாத வண்ணம் நெருங்கிப் பிணைந்துள்ளன. உள்ளத்தின் திருவிளையாடல் இவ்வுலகத்தை நிலை நாட்டுகிறது. உலகம் உணர்வு மாத்திரமாய்ப் பிரகாசிக்கிறது. பிரபஞ்சத்தின் படம் சித்திரக்காரன் அல்லது கித்தான் அல்லது தூரிகை அல்லது இதர கருவிகளின் உதவியில்லாமலே நிர்த்தோஷமான சிதாகாசத்திலே வரையப் பெற்றிருக்கிறது. அது தானாகத் தோன்றுகிறது. சதா அதுவே பார்த்துக் கொண்டிருக்கிறது. இவ்வுலகம் விழிப்பு நிலையில் ஓர் தீர்க்க சொப்பனம் போலிருக்கிறது. சர்வ வியாபகமான, பகுக்கவொண்ணாத ஒரே இயல்புள்ள சர்வ பரிபூரணமான, ஸ்வயம் ஜ்யோதியான பிரம்மன் அமைதியான சாட்சியாக இருக்கிறார். முகம் பார்க்கும் கண்ணாடியில் தெரிகிற உருவம் போன்று பிரபஞ்சத்தின் பிரதி பிம்பம் இப்பிரம்மனிலே பொருந்தியுள்ளது. இவ்வுலகம் பிரம்மன் மூலமாகப் பிரகாசிக்கிறது. இந்த பிரபஞ்சத்திற்கு அஸ்திவாரம் பிரம்மனே. அங்கு காரணகாரியம் என்கிற சம்பந்தமே கிடையாது. தூய்மையான சர்வ வியாபகமான, நித்திய பரிபூர்ண, பகுக்கவொண்ணாத, மாறுதலற்ற பிரம்மன் மீது தியானம் புரிவாயாக. மனத்திலுள்ள சஞ்சலங்கள் யாவும் படிப்படியாக நின்றுவிடும். நீ பரமாத்மாவோடு அபேதமாகி விடுவாய். கல்லிலே பல சித்திரங்கள் செதுக்கப்பட்டிருப்பன போன்று பிரம்மனிலே நானாவிதமான உலகங்கள் தோன்றுகின்றன. பிரம்மன் அத்வைதம். இவ்வுலகம்

மாயமானது. அது தன் இருப்புக்குப் பிரம்மனையே சார்ந்திருக்கிறது. மாயமாயும் பராதீனமாயுமுள்ள ஒன்றை மெய்ப்பொருள் என அழைக்க இயலாது. பிரபஞ்சம் என அழைக்கப்படுதலுக்கு உண்மையில் எதுவும் இல்லை. ஏனெனில், இரண்டாவது நிர்மாணிக்கப்படுதலுக்கு பிரம்மனோடு காரண காரிய சம்பந்தம் இல்லை. பிரம்மன் மாத்திரமே இருக்கிறார். பிரபஞ்சம் பிரம்மனில் தோன்றும் பிரதி பிம்பமே தவிர வேறல்ல. நீண்ட கரங்களையுடைய இராமா! சுக்கிராச்சாரியாரின் கதையைக் கவனமாய்க் கேட்பாயாக. எனது உபதேசத்தின் உண்மையை நீ அறிந்து கொள்வாய்" என்று கதையைக் கூறலானார்.

மந்தாரமலை மீது பீடபூமி ஒன்றுள்ளது. அங்கு நிரம்பவும் மரங்களும் அழகிய மலர்களும் காட்சி கொடுத்தன. இங்கு பிருகு முனிவர் பூர்வ காலத்தில் கொடிய தவம் புரிந்து கொண்டிருந்தார். அவர் மகன் சுக்கிரன் தேஜோமயமாய் புத்திசாலித்தனமாய் விளங்கினான். அவன் தன் தகப்பனாரை விட்டுப் பிரிந்திருக்கும் வழக்கமே இல்லை. அவன் திரிசங்குவைப் போல ஓர் இக்கட்டான நிலையில் தவித்தான். மந்தாரமலை மேலிருந்து பர்ணகசாலைகளிலே வாலிப விளையாட்டுத்தனத்தில் தாராளமாகத் திரிந்து வந்தான். சில சமயம் சிறுவனைப் போல விளையாடினான். வேறு சில நேரங்களில் தகப்பனாரைப் போன்று தியானத்தில் அமருவான். அவன் தகப்பனார் நிர்விகல்ப சமாதியிலிருந்தார். சுக்கிரன் வானத்தை நோக்கினான். அங்கே அப்ஸர ஸ்திரீ ஒருத்தி பயணமாகிக் கொண்டிருந்தாள். அவளைக் கண்டதே மோக வெறி பீடித்துவிட்டது.

`உள்ளத்தின் உத்வேகத்தைத் தடுத்தான்; ஆனால் அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அப்பெண்ணின் நினைவிலேயே ஆழ்ந்திருக்கலானான். மூடிய கண்களுடன் அவன் அப்பெண்ணைத் தொடர்ந்து சிந்தித்து ஓர் கற்பனா ராஜ்யத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டான். அப்ஸரப் பெண் இந்திரனுடைய சொர்க்கலோகத்திற்கு வானத்தின் வழி செல்லுகிறாள் என்று கருதினான். தனது ஸ்தூல சரீரத்தை

விட்டு விட்டு தேவர்களின் மகிழ்ச்சிகரமான பிராந்தியங்களை நோக்கி அவளை நெருங்கிப் பின் தொடரலானான். அவன் இந்திரலோகத்திலே இந்திரனைத் தரிசித்தான். தனக்கு முன்னால் வணங்கிய சுக்கிரனை இந்திரன் மரியாதையோடு வரவேற்றுத் தன்னருகில் அமரச் செய்தான். விண்வழி பிரயாணஞ்செய்த அதேமாதைக் கண்டான். அவளும் சுக்கிரனைக் காதலித்தாள். அப்பால் அவர்கள் சுகமாய் ஜீவிக்கலானார்கள். இந்திரலோகத்திலிருந்து சுக்கிரன் கீழே வந்தான். இறங்கும் போது, சந்திரனுடைய குளிர்ந்த கிரணங்களோடு சுக்கிரனுடைய ஜீவன் கலந்துகொண்டது. குளிர்ந்த பனிக்கட்டியாக நெல் வயல்களிலே வீழ்ந்தது. அது நெல்லாக மாற்றப் பெற்றது. தேசர்னா தேசத்துப் பிராமணன் ஒருவன் நெல் வாங்கி அரிசியாக்கிச் சாப்பிட்டான். அது சுக்கிலமாயிற்று. பிராம்மணனுடைய சுக்கில வடிவமாயிருந்த சுக்கிரன் அவன் மகனாகப் பிறந்தான். அப்பால் அவன் தபஸ்விகளின் நட்பைப் பெறலானான். சுக்கிரன் மஹாமேரு பருவதக் காட்டிலே நெடுங்காலம் தவம் புரிந்தான். சுக்கிரனுக்கு மகன் ஒருவன் பிறந்தான். சுக்கிரன் தன் புத்திரனிடத்திலே மிக்க பற்றுக் கொண்டிருந்தான். உலகாயதப் பொருள்களிடத்தில், பற்றுக் கொண்டிருந்ததால் அவன் வீழ்ச்சி அடைந்தான். அவனுடைய வாஸனைகளின் காரணமாக அவன் பல அவதாரங்களை அடைந்தான். இறுதியில் கங்காதீரத்திலே சுக்கிரன் ஓர் முனிவருக்குப் புத்திரனாகப் பிறந்தான்.

சுக்கிரன் தன் தகப்பனார் பிருகுவின் பக்கத்திலே கிடத்திய சரீரம் வெயிலாலும் மழையாலும் தாக்குண்டு வெறும் எலும்புக்கூடாக மாறிவிட்டது. பிருகு முனிவர் அதன் அருகில் அமர்ந்திருந்தமையால் கொடிய விலங்குகளும் பறவைகளும் சுக்கிரனுடைய சரீரத்தைப் புசிக்கவில்லை. ஆயிரம் ஆண்டு காலத்திற்குப் பின் மகா பிருகுமுனிவர் தமது நிர்விகல்ப சமாதியினின்று எழுந்தார். தன் புத்திரனின் சரீரம் எலும்புக் கூடாகக் கிடத்தப் பெற்றிருப்பதைக் கண்டு சினந்து யமனைச் சபித்தார். யமன் பிருகுவின் முன்னால் தோன்றி ‘ஓ,

முனிபுங்கவரே! சர்வேஸ்வரருடைய சட்டங்களை மட்டும் அமுல்படுத்துகிறேன். தெய்வீக இஷ்டப்படி நடந்து கொள்கிறேன். சினத்தினாலே தங்கள் தவத்தை தயவுசெய்து கெடுத்துக் கொள்ளாதீர்கள். சர்வேஸ்வரருடைய சட்டங்களோ தயவு தாட்சண்யமற்றவை; கடுமையானவை. பிரம்மனிலே கர்த்ருத்வமோ, போக் த்ருத்வமோ கிடையாது. அது எப்போதும் தூய்மையாகவும் செயலற்றும் மாறுதலற்றும் உள்ளது. முழு முதற் கொள்கைப் பிரகாரம், கர்த்தாவோ போக்தாவோ கிடையாது. இந்த அக்ஞான உலகிலே கர்த்தா உண்டு, கர்மாவும் உண்டு. சங்கல்பங்களின் மூலமாக ஜீவர்கள் பிறக்கிறார்கள், அவர்கள் தங்கள் கர்ம பலன்களை அனுபவிக்கிறார்கள். என்னைச் சபிப்பது தங்களுக்கு நியாயம் அல்ல. உங்களுடைய புத்திரன் அவனுடைய சங்கல்பத்தினால் இந்த நிலையை வருவித்துக் கொண்டான். உள்ளத்தின் செயல்கள் மாத்திரம் உண்மையான செயல்கள்.

சிறு குழந்தைகள் விளையாட்டிலே தங்கள் களிமண் பொம்மைகளை உடைப்பது போன்று தீங்கிலே பொதிந்த அஞ்ஞான உள்ளம் உடலை அழிக்கிறது. உள்ளம் ஆசைகளினால் உலகிற்குக் கட்டுண்டு கிடக்கிறது. உலகாயத ஆசைகளிலிருந்தும் எதிர்பார்ப்பவைகளிலிருந்தும் விடுதலை பெறுதலால் உலகிலிருந்து விடுதலை அடைகிறது உள்ளம். "இது என் சரீரம்; இவர்கள் யாவரும் எனது சரீரத்தோடு சம்பந்தப்பட்ட அங்கத்தினர்கள்" என்று உள்ளம் நினைக்கிறது. இவ்வுலக வாழ்வின் மூலம் அது ஜீவன் ஆகிறது. தீர்மானிப்பதன் மூலம் அதற்கு புத்தி என்று பெயர். நான், எனது எனும் கோட்பாடுகள் கோபக்குறிகளோடு உறுதிப்படுத்தப்படும் போது உள்ளம் அகங்காரம் எனப்படும். ஒரே உள்ளம் வெவ்வேறு அலுவல்களினால் வெவ்வேறு பெயர் பெருகிறது. வெவ்வேறு வித்தியாசங்களின் மூலம் இதே மனம் மாத்திரமே பிரபஞ்சமாக ஆகிறது. மனம் உண்மையாயின் ஒளியைப் பெறும்போது அதற்கு ஒளிபடைத்த புத்தி என்று பெயர். தாங்களும் தங்கள் புத்திரனும் தியானிக்கும் போது தீவிர ஆசையினால் இந்த

உடலைவிட்டு உங்கள் புத்திரன், தன் கூட்டைவிட்டுப் பறவை வானத்தில் பறந்து செல்வதைப் போல சொர்க்கலோகத்துக்கு விரைந்தான். விஸ்வாவசு எனும்பெயர் படைத்த ஓர் அப்ஸரஸ் ஸ்திரீயோடு ஜீவித்தான். தேவலோகத்தை விட்டு, காற்றுப் பிராந்தியத்தைக் கடந்து தேசர்னா தேசத்திலே ஒரு பிராம்மணனுக்கு மகனாய்ப் பிறந்தான். பல ஜன்மங்களை எடுத்தான். கோசல தேசத்து மன்னனாகவும், பெருங்கான கத்தில் ஒரு வேடனாகவும், கங்காதீரத்தில் ஓர் அன்னப் பறவையாகவும், சூரிய வம்சத்து அரசனாகவும், பண்ட்ராஸ் தேசத்து மன்னனாகவும் சால்வா தேசத்து சூரிய குலத்திலே ஓர் குருவாகவும் பிறந்தான். இந்த ஜனன மரண வட்டத்தைக் கடந்து மீண்டும் ஓர் கல்பகாலம் வித்தியாதரர்களுக்கு இராஜாவாகப் பிறந்து வாழ்ந்தான். அடுத்த ஜன்மம் ஒரு முனிவருடைய புத்திசாலித்தனமான மகன். சௌவிர தேசத்து இராஜா; மற்றொரு தேசத்தில் சைவர்களுக்குக் குருவானான். பின்னொரு தேசத்தில் மூங்கில் கொத்தாகத் தோன்றினான். ஒரு காட்டில் கலைமானானான். அடுத்த பிறவி ஓர் வனத்தில் மலைவிரியன் எனும் பாம்பு; விந்தியா மலைகளிலே ஒரு வேடன்; கல்கதாவ் எனும் இடத்தில் வேடன்; திரிகாத்தா எனும் இடத்தில் கழுதையாகப் பிறப்பெடுத்தான். இங்ஙனம், தன் வாசனைகளின் சக்திக்கேற்ற வகையில் அவன் மேலான கீழான ஜன்மங்களை பல்வேறு கர்ப்பங்களின் மூலம் எடுத்து எடுத்து இறுதியில் கங்காதீரத்திலே ஓர் பிராம்மண மஹரிஷிக்கு வாசுதேவன் எனும் பெயர் பூண்ட புத்திரனாகப் பிறந்துள்ளான். இப்பிறவியில் கடந்த எண்ணூறு ஆண்டுகளாகக் காவி உடை, தண்டு, கமண்டல சடாதாரியாக தீவிர தவத்தில் பிரவேசித்துள்ளான். மனோவடக்கமும் புலனடக்கமும் ஏற்பட்டுள்ளன. உங்கள் புத்திரனுடைய மாயாப் பிறவிகளின் வரிசையைத் தெரிந்துகொள்ள விரும்பினால் உங்கள் திவ்ய திருஷ்டியின் மூலம் அவ்வாறு செய்யுங்கள்" என்று விளக்கமாக யமன் திருவாய் மலர்ந்தருளினான்.

பிருகு முனிவர் தமது புத்திரனுடைய ஜன்மங்களின் சம்பவங்கள் அனைத்தும் தமது அந்தர்முக திருஷ்டியின் மூலம் ஸ்வயம்ஜோதி மயமான ஆத்மாவிடமிருந்து பெறுகிற ஒளி பிரகாசிக்கின்ற தூயமனமாகிய ஒளி ஊடுருவத்தக்க நிர்மலமான கண்ணாடியிலே பிரதிபிம்பிக்கின்றதை ஒரு க்ஷண நேரத்தில் நோக்கியருளினார். அவர் யமனிடம் "தயவு செய்து முன் செய்ததற்கு மன்னிப்பாயாக. நீ சர்வக்ஞன்; சட்டத்தை நீ நன்கு பரிபாலிக்கிறவன். நீ ஒருவன் தான் முக்காலங்களின் அறிவை முற்றிலும் எய்தியவன். இறந்த நிகழ் எதிர்கால அதிபதி நீ என்றார். அப்பால் யமன், வாசுதேவன் தவம் புரிந்து கொண்டிருக்கும் கங்காதீரத்திற்கு பிருகு முனிவரை அழைத்துச் சென்றான். சமாதியில் இருந்த வாசுதேவன் சமாதியிலிருந்து இறங்க வேண்டுமென யமன் சிந்தித்தான். வாசுதேவன் கண் திறந்து பார்க்க தன் தகப்பனாரோடு யமன் நிற்பதைக் கண்டான். வாசுதேவன் எழுந்து அவர்களுக்கு சாஷ்டாங்க தண்டம் சமர்ப்பித்தான். ஓர் கல்பாறையின் மேல் அவர்கள் அமர்ந்தார்கள். "இன்று தங்கள் தரிசனத்தால் நான் ஆசீர்வதிக்கப்பெற்றேன். நான் புனிதன் ஆனேன். மஹத்தான பேரின்பம் அனுபவிக்கிறேன்" என்று வாசுதேவன் உரைத்தான். பிருகு முனிவர் தமது புத்திரனை ஆசீர்வதித்து, "ஆத்மஞானம் உனக்குச் சித்திக்குமாக; அஞ்ஞானத்திலிருந்து விடுதலை பெறுவாயாக; சதா காலமும் பிரம்மானந்தத்தை அனுபவிப்பாயாக" என்று திருவாய் மலர்ந்தருளினார். சுக்கிரன் தன் கண்களை மூடிய வண்ணம் திவ்ய திருஷ்டியின் மூலம் தனது முன்னைய ஜனனங்களின் சம்பவங்களை நோக்கினான். மேற்கொண்டு ஜன்மங்களிலிருந்து அவன் விடுதலை பெற்றான்.

தனது பூர்வீக ஜன்மங்களைப் பற்றிய ஞாபகத்தால் சுக்கிரன் வியப்புற்றான். எவருடைய சக்தியால் இவ்வுலகம் சுழன்று கொண்டிருக்கிறதோ, ஆதியந்தமில்லாத அந்த மேலான பரம்பொருளின் சட்டம் ஆசீர்வதிக்கப்படட்டும். பெரும் இடர்களுக்கு நான் இலக்காகியுள்ளேன்; சம்ஸாரத்திலே நெடுங்காலம் சுழன்று கொண்டிருந்தேன்.

பார்க்கப்பட வேண்டியவற்றையெல்லாம் நான் பார்த்தாகி விட்டது. இப்போது ஆத்மஞானம் எய்திவிட்டேன். மறுபிறப்புக்களின் சங்கிலிகளினின்று நான் விடுபட்டேன். பிதாவே! எழுந்திருங்கள் மந்தாரமலையிலே வாடிய செடிபோலக் கிடந்துள்ள சரீரத்தைப் போய்ப் பார்ப்போம்'' என்று கூறினான்.

உடலைப் பார்க்க மூவரும் மந்தாரமலைக்குச் சென்றார்கள். வாசுதேவன் தனது முன்னை உடலை பிருகுவின் புத்திரனாகக் கண்டான். "பிதாவே! சொத்தையான அந்த உடலை முன்பு இன்சுவை உணவினால் போஷித்தீர்கள்; பிரியத்தோடு அந்த உடலில் சந்தனம் பூசப்பட்டது. மனம் நாசமானால் மனிதன் நித்தியானந்தத்தை அனுபவிக்க முடியும். ஆத்ம விசாரணை மாத்திரமே ஒருவனை ஆத்மஞானப் பேறுக்கு அழைத்துச் செல்லும். ஒருவன் பிரம்மக்ஞானம் எய்திவிட்டால் அவன் பேரானந்தச் சமுத்திரத்தில் மூழ்கிவிடுகிறான். இக்கொடிய சம்ஸாரத்தின் அதிபயங்கரமான வேதனைகளினின்று விடுவிக்கப் படுகிறான்'' என்றான் சுக்கிரன்.

"ஓ சுக்கிரனே! வாசுதேவன் எனும் உனது உடலை உதறித் தள்ளிவிட்டு உனது முன்னைய இந்த இறந்த உடலில் அரசன் தன் அரண்மனையில் பிரவேசிக்கிறது போலப் புகுவாயாக. அசுரர்களுக்குக் குருவாக ஆகுக. அவர்களுக்கு தகுந்த போதனைகளை வழங்குக'' என்று உபதேசித்து யமன் அவர்களிடம் விடைபெற்று அந்தார்த்தமானான். யமனுடைய உபதேசங்களின்படி சுக்கிரன் தனது முன்னைய உடலில் புகுந்தான் - வாசுதேவன் என்ற உடலை உகுத்துவிட்டு இறந்த உடலின் நாடிகள் நரம்புகள், ஜீவாணுக்கள், துவாரங்கள் மீண்டும் உயிர்ப்புச் சக்தி பெற்று, காய்ந்த ஆறுகள் மழைக் காலத்தில் தண்ணீர் வெள்ளத்தால் நிரப்பப்படுவன போன்று, இரத்தத்தால் நிரப்பப்பெற்றன. இரத்தம் பெருகியதால் உள் உறுப்புக்கள் குளத்தில் தாமரைகள் மலர்வன போன்று இரத்தத்தால் நிரப்பப் பெற்றன. பிராணனை நாடிகள் உடலெங்கும் சுற்றும்படி செய்தன. கிழவராகிய பிருகுமுனிவர்

தன் மகனின் இறந்த உடல் உயிர்ப்புப் பெற்று வருவதை உணர்ந்து பிராயச்சித்த மந்திரங்களை ஓதி, கமண்டல தீர்த்தத்தைப் புரோக்ஷித்தார். சுக்கிரன் எழுந்து நின்று தன் பிதாவை வணங்கினான். பிதா சுக்கிரனை வாரி அணைத்து ஆனந்த பாஷ்யம் சொரிந்தார். மீண்டும் சந்தித்த அவர்கள் மிக்க சந்தோஷமடைந்தார்கள். பிதாவும் மகனும் தங்கள் உள்ளத்தை சமநிலையில் நிறுத்திய வண்ணம் காலதேச வர்த்தமான மாறுதல்கள் அனைத்தின் நடுவே தங்கள் ஒழுக்கங்களை நிலையாகக் கடைப்பிடித்து ஜீவன் முக்த ஸ்திதியில் காலங்கழிக்கலானார்கள். காலக்கிரமத்தில் சுக்கிராச்சாரியார் அசுரர்களுக்குக் குருவாகப் பதவி பெற்றார் - பிருகு முனிவர் மனித குலத்திற்கே சிரேஷ்டமான குருவின் ஸ்தானத்திலும் ஆதிக்கத்திலும் நிலைத்து விளங்கினார்.

## பீமா, பாஸா, திரிதா கதை

வசிஷ்டர் கூறியதாவது :- வேதாந்த நூல்களைப் படிக்கிறவன் உடனே பலன்களை விரும்பலாகாது. அவன் பிரம்மன் அல்லது நித்தியாத்மாவின் மீது ஒழுங்கான தியானத்தைப் பயிலவேண்டும். படிப்படியாக மனம் புனிதமாகி கனிவு பெற்று நிலையாக நிற்கும். இறுதியில் மனம் ஆத்மசாக்ஷாத்காரம் அல்லது இறுதி விடுதலை எய்தும். தன் மனைவி, மக்கள், செல்வம், நிலம் மற்றும் இதர உலகாயத உடைமைகளைப் பெற்றவன் பரிதாபகரமானவன். நூற்றுக்கணக்கான பேராசைத் தொல்லைகளால் அவன் பந்தத்தில் கட்டுண்டிருக்கிறான். அவனுக்கு அமைதியான உள்ளம் கிடையாது. சிற்றின்ப வாழ்வை நடாத்துவதால் அவன் எவ்விதமான பயனும் பெறவில்லை. பொய்யை மெய்யெனக் கொள்வதால் நன்னெறியையும் நல்வாழ்வையும் இழக்கிறான். செல்வம் எல்லா வேதனைகளுக்கும் மூலம். பணம் சம்பாதிப்பது சிரமம். அதைப் பாதுகாப்பது அதைவிடக் கஷ்டம். அதை இழந்தாலோ இன்னும் அதிகத் துன்பம். ஆனால் இவ்வுலகை அற்பமான ஓர் வைக்கோல் துண்டாகக் கருதுகிறவர்களும் பாம்பு தன் சட்டையை களைந்தெறிவதுபோல உலகச் சார்புகள் அனைத்தையும் ஒதுக்கித் தள்ளுகிறவர்களுமான விவேக வைராக்கியம் படைத்தவர்களை துன்பம் பாதிக்காது.

தூய விவேகமும் நல்லறிவும் படைத்தவர்களும் சாஸ்திரங்களை சுபாவமாகக் கற்க விருப்பமுள்ளவர்களும் தீங்கும் பொய்யுமான எல்லாவற்றையும் விலக்கி விட்டு மோக்ஷம் அல்லது இறுதி விடுதலைத் தாகம் கொண்டவர்களும் மாத்திரமே இந்தப் பயங்கரமான ஸம்ஸாரசாகரத்தைக் கடக்கக் கூடியவர்கள். சத்திய சீலர்களாயும் தூய்மையானவர்களாயும் வேதங்களால் காட்டப்பட்ட நெறியைப் பின்பற்றுகிறவர்களாயும் முனிவர்களுடன் இணக்கம் கொண்டவர்களாயுமுள்ளவர்கள் அழிவினின்று காப்பாற்றப் படுகிறார்கள். அவர்கள் பரிபூரணமும் நித்தியத்துவமும் எய்துகிறார்கள். ஆத்மஞானம் பெற்று திவ்யதேஜஸ்

வாய்ந்தவர்கள் எண் திசைகளிலுமுள்ள தேவதூதர்களால் காக்கப்படுகிறார்கள். அறிவை நாடி சத்தியத்தை தேடுகிறவர்கள், தூய சர்வவியாபகமான அன்பு வகித்தவர்கள், இடையறாத ஆத்ம விசாரணையில் தங்களை ஈடுபடுத்திக் கொள்கிறவர்கள் ஆகிய இவர்களை மானுஷ ஜீவர்கள் என நிஜமாக அழைக்கப்படக் கூடும். இதர மக்கள் வெறும் காட்டு மிராண்டிகளே. தவறான நெறியில் எவரும் நடக்கக்கூடாது. செய்யக் கூடாத செயல்களை எவரும் செய்யக்கூடாது. அமிர்தம் கூட பருகிய இராகு மிக்க வேதனைக்கு உள்ளாக வேண்டியிருந்தது; ஏனெனில் இராகு தவறான நெறியில் போய் தவறான செயலைப் புரிந்தான். நல்லியல்புகளும் சாஸ்திர ஞானமும் படைத்தவர்கள், நன்னெறியில் நடக்கிறவர்கள், ஸ்தாபிக்கப்பட்ட ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்கிறவர்கள், இந்திரிய இன்பங்களை நாடாதவர்கள் ஆகிய ஞானிகள் அதிசயங்களை நிகழ்த்துவார்கள். எவ்வித கடினமான காரியத்தையும் அவர்கள் முடிக்கக்கூடும். அவர்கள் சுலபமாய் நீண்ட ஆயுளும் கீர்த்தியும் ஆத்ம சாக்ஷாத்காரமும் பெறக்கூடியவர்கள். இதர மக்களால் அடைய இயலாத பொருள்கள் இவர்களால் எளிதில் அடையக் கூடும். அபாயங்களும் கஷ்டங்களும் இவர்களுக்கு முன்னால் ஓடிவிடும். இவர்கள் சிரேஷ்டமான புருஷர்கள். இவர்கள் தங்கள் விதியைத் தமது கட்டளையின் கீழ் கொணரவும், தீங்குகள் அனைத்தையும் நன்மையாக மாற்றவும், தங்கள் வளமான வாழ்வை நிலையாகச் செய்து கொள்ளவும் சக்தி படைத்தவர்கள். இவர்கள் தங்கள் முயற்சிகள் எல்லாவற்றிலும் நிச்சயமாக வெற்றி பெறுகிறார்கள். ஓ இராமா! உன்னுடைய துயரங்கள், அச்சங்கள் ஆத்திரங்கள் அனைத்தையும் அகற்றுக; சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட நெறியில் நடப்பாயாக. ஆத்மஞானம் இல்லாத செல்வத்தால் என்ன பயன்? வெறும் துரும்பாகச் செல்வத்தை மதிப்பாயாக; செல்வம் துன்பங்களை மட்டுமே கொணரும். பற்றின்மை மேலான அமைதியையும் நித்தியானந்தத்தையும் அடையும் பேற்றுக்கு இட்டுச்செல்லும். இந்த ஸம்ஸார ஸாகரத்திலே உனது விமோசனத்திற்கு முனிவர்களுடன் கொள்ளும் இணக்கம் தவிர வேறு மார்க்கம்

கிடையாது. உனது புண்ணியஸ்தல யாத்திரை நியம நிஷ்டை சாஸ்திரபடனம் இவையெல்லாம் உன் மோக்ஷத்திற்கு ஒரு பயனும் இல்லை.

ஒரு முனிவரின் திவ்யபாதங்களில் சாஷ்டாங்க தண்டம் சமர்ப்பித்து அவருடைய உதவியின் மூலம் ஒருவன் ஜனன மரண வட்டத்தினின்று தன்னை விடுவித்துக் கொள்ள வேண்டும். அகங்காரத்தையும் கோபத்தையும் அகற்றியவர், ஆத்மஞானம் படைத்தவர், நன்னெறியில் நடக்கிறவர், சாஸ்திரங்களிலுள்ள விதிகளின்படி தனது வாழ்க்கையை நடத்துகிறவர் - இப்பேர்ப்பட்டவர் தான் முனிவர். பிரம்ம சாக்ஷாத்காரம் நேரடியாய் பெறாதவர்களுக்கு அறிவாகிய சிதாகாசம் இல்லை. ஆனால் பிரம்மனை சாக்ஷாத்காரம் பெற்றவர்கள் சிதாகாசம் என்றே கூறப்படுவார்கள். சிறிய நான் எனும் அகங்காரமேகம், ஞான ஆகாசமாகிய சூரியனை மறைத்தால், பெரிய அல்லது எல்லையற்ற நான் எனும் பிரம்மனாகிய தாமரை மலராது. அகங்காரம் எனும் முளை மறுபிறப்புக்கள் எனும் தண்டுகொண்டு எங்கணும் எனது, உனது ஆகிய கிளைகளை விரித்து வளர்ந்து துன்பங்கள், துயரங்கள், வலிகள் ஆகிய பழங்களை வழங்குகின்றன! அகங்காரம் நீடிக்குமளவு ஆசைகளுக்கு முடிவு கிடையாது. அகங்காரமாகிய கிருமிகளைத் தனது இதயத்தினின்று வேரோடு பிடுங்கி எறிகிறவன் மாயா அல்லது ஸம்ஸார விருக்ஷத்தை நூற்றுக்கண க்கான கிளைகளைப் பரப்பி வளருவதை நிச்சயமாகத் தடுக்கக்கூடும். இராமர் தமது குருதேவர் வசிஷ்டமாமுனிவரை நோக்கி, 'மரியாதை மிக்க குருதேவா! அகங்காரத்தின் ஸ்வபாவம் என்ன? இந்த பலமான அகங்காரத்தை எப்படி அகற்றுவது? அகங்காரத்தை அழிப்பதனால் உண்டாகும் நன்மைகள் என்ன? மனிதன் தன் சரீரத்தின் வாஸனைகளோடு தொடர்பு கொண்டிருக்கிறானா? இல்லையா? அகங்காரம் சரீரத்திலா மனத்திலா அல்லது இரண்டிலுமா பொருந்தியிருக்கிறது? சரீரத்தைக் தொலைத்தலோடு அகங்காரம் ஒழிந்து போகுமா?" என்ற வினாக்களைக் கேட்டார்.

வசிஷ்ட மகிரிஷி பதில் கூறலானார் : எதன் மீதும் விருப்பு வெறுப்பு அற்றவன் எப்போதும் அகங்கார உணர்ச்சியற்று மனச்சாந்தியைக் கொண்டவன் பாதிக்கப்பட மாட்டான். மூவுலகங்களிலும் மூன்றுவகை அகங்காரம் உண்டு. இவற்றில் இரண்டு நன்மை பயக்கக் கூடியவை. உயரிய தன்மை உடையவை. மூன்றாவது இழிவானது. எல்லோராலும் தள்ளப்படுவது. முதலாவது மஹத்தான பகுக்கவொண்ணாத அகங்காரம்; இது நித்தியமானது, உலக முழுவதும் ஊடுருவியுள்ளது. இது பரமாத்மா. இயற்கையில் இது தவிர வேறே எதுவுமில்லை. "அஹம்பிரஹ்மாஸ்மி" "நான் பிரம்மன்" ஆகிய மகாவாக்கியங்களைத் தியானிப்பாயாக. பிரம்மனோடு உன்னை அபேதமாக்கிக் கொள். இது ஸத்துவ அகங்காரம். நெல்லின் நுனி அல்லது ஓர் மயிரின் நூறில் ஒரு பாகத்திலும் அதிசூக்ஷ்மமாய் எப்போதும் உள்ள நமது சொந்த ஆத்மாவைத் தரிசிக்கச் செய்கிற அறிவே இரண்டாவது வகை அஹங்காரம். விடுதலை பெற்ற மஹான்களாகிய ஜீவன் முக்தர்களிடம் இந்த இருவகை அஹங்காரமே காணப்படுகின்றன. இவை மனிதனை மோக்ஷத்திற்கு இட்டுச்செல்கின்றன. இவை பந்தத்தை உண்டாக்காது. ஆகையால் இவை பயனுள்ளவை; உயர்தர இயல்பு கொண்டவை. மூன்றாவது அஹங்காரமோ கைகள் கால்கள் முதலியவை கொண்ட சரீரத்தோடு "நான்" என்பதை அபேதமாக்கிக் கொள்கிற அறிவு. இவ்வறிவு உடலை ஆத்மாவாகக் கொள்கிறது. இது மிகவும் கெட்ட இழிவான அகங்கார வடிவம். உலகாயத மக்கள் எல்லோரிடமும் இது காணப்படுகிறது. மறுபிறப்புக்கள் எனும் விஷ விருக்ஷ வளர்ச்சிக்கு இதுவே காரணம். இத்தகைய அஹங்காரத்தை வகித்தவர்கள் என்றும் நல்லறிவுக்குத் திரும்பமாட்டார்கள்.

இந்த வகையான அஹங்காரத்தினால் கணக்கற்ற மக்கள் ஏமாற்றமடைந்துள்ளார்கள். அவர்கள் தம் அறிவையும் விசாரணை விவேகம் கூடிய சக்தியையும் இழந்துள்ளார்கள். இவ்வகையான அகங்காரம் கேடுகளை விளைவிக்கக் கூடியது. வாழ்வின் எல்லாத் தீங்குகளின் ஆதிக்கத்தின் கீழ் மக்கள் அல்லல்படுகிறார்கள். இவ்வகை அஹங்காரத்திற்கு

அடிமைகளாயுள்ளவர்கள் தவறான செயல்களில் செல்லத் தூண்டுகிற பல்வேறு ஆசைகளால் அலைக்கழிக்கப் படுகிறார்கள். இது மிருகநிலையின் இழிவுக்குத் தாழ்த்துகிறது. இவ்வகை அஹங்காரம் எவ்வகையிலும் தாக்ஷண்யமின்றி நிர்மூலமாக்கப்பட வேண்டும். இந்த இழிவான அஹங்காரம் இதர இரண்டுவகை அஹங்காரங்களினால் அழிக்கப்பட வேண்டும். இந்த அஹங்காரத்தை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக நலியச் செய்கிறாயோ, அவ்வளவுக்கவ்வளவு அதிகமான பிரம்மக்ஞானம் அல்லது ஆத்மஜோதி நீ அடையலாம். பிரம்மத்தை முதல் இரண்டு வகை உயர்தர அஹங்காரத்தினால் அடைய முயற்சிசெய். இந்த இரண்டு வகை உயர்தரமான அகங்ஹாரம் கூட ஒன்றின் பின் ஒன்றாக நீக்கப்பட்டு மாசற்ற உத்கிருஷ்டமான ஸ்திதியில் நீ உறுதியாக நிலை பெற்றுவிட்டால், அப்பால் அந்தநிலை பிரம்மனுடைய அழியக்கூடாத வாசஸ்தலம் ஆகும். நான் என்பதோடு ஸ்தூல சரீரத்தை அபேதமாக்கிக் கொள்ளாதே. உன்னை நீ பரப்பிரம்மனோடு அபேதமாக்கிக்கொள்.

சம்பராசுரன் தனக்குள் பேசிக்கொண்டதாவது : நான் சிருஷ்டித்த தாமன், வியாழன், கடன் ஆகிய மூவரை அனுப்பினேன். கர்வமிகுந்த தேவர்கள் இவர்களை முறியடித்துவிட்டார்கள். இம்மூவரும் மூடத்தனமும் அஹங்காரமும் செறுக்கும் படைத்தவர்கள். ஆத்மஞானம் அற்றவர்கள். நான் எனது எனும் கோட்பாடுகளை வலிமையோடு வாய்க்கப் பெற்றவர்கள். இப்போது மீண்டும் எனது மாயாவிச் சக்தியால் ஆத்மஞானமும் ஆத்மஞான சாஸ்திரத் தேர்ச்சியும் மாயையாகிய அஹங்காரத்தினின்று விடுபட்ட தன்மையும் எய்திய அசுரர்களைச் சிருஷ்டிக்கிறேன். அவர்கள் தேவர்களை யுத்தத்தில் ஜயிக்கக் கூடும். சம்பரா தன் மாயாவிச் சக்தியால் பீமா, பாஸா, திரிதா என்னும் பெயர் வாய்ந்த மூன்று அசுரர்களைச் சிருஷ்டித்தான். கடலின் நீர்ப்பரப்பிலே மிதக்கும் நீர்க்குமிழிகளைப் போல வானத்தை நிரப்பி நின்றார்கள் இம்மூன்று அசுரர்களும். அவர்கள் சர்வஞானமும் பெற்றவர்கள். காமமில்லாதவர்கள்.

பாபமில்லாதவர்கள், ஸாந்த மனம் உண்டு. நற்குணம் வாய்க்கப்பெற்றவர்கள். அவர்கள் காமம், பகைமை, சந்தேகங்கள், அச்சம், மாயை பற்று, அஹங்காரம், மமகாரம் ஆகியவற்றிலிருந்து விடுதலை பெற்றவர்கள். பிரபஞ்சம் முழுவதையும் திரணமெனக்கூட மதிக்கவில்லை. அவர்களை தேவர்களோடு யுத்தம் புரியுமாறு ஆக்ஞாபித்தான். அவர்கள் கணக்கற்ற ஆண்டுகளாகப் போரிட்டார்கள். அகம்பாவத்தால் செருக்குற்றவர்கள் அல்ல. அவர்கள் தேவர்களோடு போரிடுவதில் அச்சமே கொள்ளவில்லை. பலமற்ற சரீரம் வெறுமையானது. மக்கள் நான் என அழைக்கிறதில் பயன் இல்லை. இந்த உறுதியான கொள்கையோடு யுத்தத்திற்குப் பாய்ந்தார்கள். சென்ற கால எதிர்காலச் சிந்தனைகளே அவர்களுக்கு இல்லை. மரண பயம் கிடையாது. அவர்களுடைய மனம் எதிலும் பற்றுதல் கொள்ளவில்லை. அவர்கள் எதிரிகளைத் தாமே கொல்கிறவர்கள் என்று சிந்திக்காமல் கொன்றார்கள். எல்லா ஆசைகளினின்று பூரணமாக விடுதலை பெற்றவர்கள். அவர்கள் தங்கள் கடமைகளைப் புரிந்தார்கள். கடமைகளைப் புரியாதவர் களாகத் தங்களை நினைத்துக் கொண்டார்கள். தங்கள் யஜமானர் சம்பராசுரனுக்காகத் தங்கள் கடமையைச் செய்கிறோமென்ற உணர்விலே அவர்கள் சண்டை புரிந்தார்கள். காமம் மற்றும் பாசத்தினின்று விடுதலை யானவர்கள். அஹங்காரத்தினின்று, விடுதலை பெற்றவர்கள். ஆத்மீய விசாரணை புரிகிறவர்கள், ஜனனமரண பயத்தினின்று விடுதலை அடைவார்கள். அவர்களால் எளிதில் அடையக்கூடிய பொருள்கள் எவையானாலும் அவற்றோடு அவர்கள் திருப்திப்படுவார்கள். எப்போதும் எல்லோரையும் சமமாகப் பார்ப்பார்கள்.

தேவர்கள் யாவரும் போர்க்களத்தினின்று ஓடிப்போய் மகாவிஷ்ணுவிடம் தஞ்சம் புகுந்து அவர் முன்னால் சாஷ்டாங்க நமஸ்காரம் புரிந்தார்கள். ஹரிபகவான் போர்க்களத்திற்குச் சென்று மூன்று அசுரர்களோடு யுத்தம் பண்ணினார். பகவானால் அவ்வசுரர்கள் கொல்லப்பட்டு

வைகுண்ட லோகத்திற்கு அனுப்பப்பட்டார்கள். ஹரிபகவானால் காப்பாற்றப்பட்டவர்களும் கொல்லப் பட்டவர்களும் அவரது பரமபதத்திற்கு தகுதியானார்கள். வாசனைகள் (சூக்ஷ்மமான ஆசைகள்) பந்தத்தை உற்பத்தி பண்ணுகின்றன. வாஸனைகள் அழிக்கப்பட்டால் பந்தம் மறைகிறது. சகல வாஸனைகளும் ஆத்ம ஞானமாகிய அக்கினியால் பொசுக்கப்படும். வாஸனைகள் நசுக்கப்பட்டால் மனம் நெய்யில்லாத விளக்குபோல ஸாந்தி எய்தும். மனம் தனது இருப்பைப் பெற்றுவிட்டது. ஏனெனில் மக்கள் பொருள்களின் நினைவுகளை போற்றி வைத்துக்கொள்ள அப்பொருள்களின் பதிவுகள் மனதிலே அச்சடிக்கப் படுகின்றன. இந்த எண்ணங்கள் நிர்மூலமாக்கப்பட்டால், மனம் உடனே மறைந்துவிடும். இவ்வுலகிலே மனம் அடைபட்டுக் கிடக்கிறது, வாஸனைகளின் பொருட்டேயாகும். வாஸனைகளிலிருந்து மனம் விடுதலை பெற்றுவிட்டால் அது தனது விமோசனத்தை எய்தியதாகக் கூறப்படுகிறது. தாமன், வியாழன், கடன் என்ற மூன்று அசுரர்கள் தங்கள் அஹங்காரத்தினால் தோற்கடிக்கப்பட்டார்கள். பீமா, பாஸா, திரிதா ஆகிய அசுரர்கள் தங்கள் அஹங்காரமின்மையின் காரணத்தால் வெற்றி பெற்றார்கள்.

மேற் குறிக்கப்பட்ட கதையிலிருந்து ஓ, இராமா! அஹங்காரத்தினின்று விடுதலை பெற்றவர்கள் எப்போதும் வெற்றியை அடைவார்கள் என்பதைத் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியும். தாமன், வியாழன், கடன் ஆகியோரின் உதாரணத்தை ஒருபோதும் பின்பற்றாதே. பீமா, பாஸா, திரிதா ஆகியோரின் ஒழுக்கத்தைப் பின்பற்றுவாயாக. ஓ, களங்கமற்ற இராமா! உனது ஆத்ம ஞானத்தினால் சகல விஷயங்களையும் நன்கு அறிந்துகொண்டு சர்வ பரமானந்த மயமான ஆத்மாவிலே அமைதியோடு இளைப்பாறுவாயாக'' என்று வசிஷ்டர் திருவாய் மலர்ந்தருளினார்.

# 5. உபசாந்திப் பிரகரணம்

## ஜனக மகாராஜாவின் விருத்தாந்தம்

மேலும் வசிஷ்ட மகரிஷி போதனை செய்யலானார்: உயரிய உள்ளமுள்ள இராமா! இவ்வுலகம் மாயமானது என்பதை அறிவாயாக. இப்பிரபஞ்சம் ஆத்மஞான இயல்பை மாத்திரம் கொண்டது. செயலும் பந்தமும் வாய்ந்த ராஜஸ குணமுள்ளவர்கள், சோம்பலும் அஞ்ஞானமும் கொண்ட தமோ குணமுள்ளவர்கள், ஜனன மரணக் கொள்கைகளால் ஏமாற்றப்படுகிறார்கள். நன்மையாகிய சத்துவ குணத்தோடு பிறந்தவர்கள் ஆழமாக வேரூன்றியுள்ள இந்த மாயையை எளிதிலே தள்ளிவிடுவார்கள். ஒரு பாம்பு தன் சட்டையை எறிவதுபோல அவர்கள் ஜனனமரண பயத்தினின்று எப்போதும் விமோசனம் அடைகிறார்கள். ஞானிகளுடன் தொடர்பு கொள்வதாலும், சாஸ்திரங்களை கற்றலினாலும் சரியான நடத்தையைப் பயிலுவதாலும் இவர்கள் நுண்ணிய விசாரணை, விவேகம் மற்றும் நல்லறிவு படைத்தவர்களாய் இருக்கிறார்கள். சத்தியத்தையும் அசத்தியத்தையும் பகுத்தறியக் கற்றுக்கொண்டு சத்தியத்தையே பற்றிக்கொள். முன்பு இல்லாததும் இறுதியில் இல்லாததும் எதுவோ அது சத்தியமே அல்ல. முதலிலும் முடிவிலும் தொடர்ந்து நிலையாக உள்ளது எதுவோ அதுவே உண்மை அல்லது சத்தியம். உலகைச் சிருஷ்டிக்கிறது மனம்.

"மரியாதைக்குரிய போதகரே! மனம் உலகைச் சிருஷ்டிக்கிறது என்பதை நன்கு புரிந்துகொண்டேன். உள்ளத்தால் சிருஷ்டிக்கப்பட்ட மாயையை நாசம் பண்ணுவதற்கு உற்ற நிச்சயமான சாதனங்கள் எவை?" என்று ஸ்ரீ இராமர் வினாவினார்.

வசிஷ்ட மகரிஷி திருவாய் மலர்ந்தருளலானார் : சாஸ்திர ஞானம், விரக்தி, முனிவர்களோடு சத்சங்கம் கொள்ளுதல் ஆகியவை உள்ளத்தால் சிருஷ்டிக்கப்பட்ட மாயையை அழிக்க ஒருவனுக்கு உதவுகிறது. புனிதமான முனிவர்களின் போதனைகள் அவன் ஆத்ம விசாரணை பயில உதவுகின்றன.

அசத்தியத்திலிருந்து சத்தியத்தைப் பகுத்துணர அவனால் முடிகிறது. "ஓ, இராமா! இப் பிரபஞ்சம் சர்வ வியாபகமான ஆத்மாவின் விஸ்தரிப்பே ஆகும் என்று அறிவாயாக. ஒன்றை மற்றொன்றிலிருந்து பிரித்துப் பார்க்கும் தவறை விடுவாயாக. எல்லாம் பிரம்மம் மாத்திரமே. "நான்" என்பது அந்த பிரம்மம் மாத்திரமே. நான் என்பதும் பிரபஞ்சம் என்பதும் வெவ்வேறானவை என்ற கருத்தை ஒழிக்கவும். பரந்து விரிந்த சமுத்திரத்தின் நீர்ப்பரப்பிலே முற்றிலும் வித்தியாசம் எதுவுமே இல்லை. அது போல, நித்திய சர்வ வியாபகமான பிரம்மனிலே எவ்விதமான வேற்றுமையும் இல்லை. எல்லாவற்றையும் ஏகம் என நீ நம்புவதில் தவறு கிடையாது. துவைதம் இல்லை என்று தெரிந்துகொள். உன்னை ஒரு ஆன்மீய ஜீவன் என்று அறிக. சிருஷ்டிக்கப்பட்ட எல்லாப் பொருள்களும் நிஜமாக இருக்கிறதில்லை. பிரம்மனிலிருந்து நீ வேறாக இருக்கிறதில்லை என்று தெரிந்து கொள். துயரங்கள் அனைத்தையும் தூரத்தள்ளு. ஆதரவற்ற நிலையிலே நீ இருக்கிறதாக நினைக்காதே. பொறுமையுள்ளவனாயும் ஸாந்தமுள்ளவனாயும் சமமான மனநிலையுள்ளவனாயும் இரு. இன்பங்களும் துன்பங்களும், ஜனன மரணமும், சீதோஷ்ணமும், இலாப நஷ்டமும், புகழ்ச்சியும் இகழ்ச்சியும், மரியாதையும் அவமரியாதையும் ஆகியவை வெறும் மனோ கற்பனைகள். ஒரே ஒரு மூல தத்துவம்தான் உண்டு. இது மாத்திரமே என்றும் உள்ளது.

இறந்த அல்லது எதிர்காலங்களைப் பற்றிச் சிந்திக்காதே. ஸாந்தமாயும் இச்சையடக்கத்துடனும் இரு. நியாய யுக்தமாய் இரு. நம்பிக்கையையும் எதிர்பார்ப்பவைகளையும் விட்டு விடு. பிரம்மனில் இளைப்பாறுக. கடல்போல பூரணமாய் இரு. காய்ச்சலை உண்டு பண்ணுகிற உலகக் கவலைகளிலிருந்து விடுதலை பெறுவாயாக. அன்பு, பகை ஆகியவற்றிலிருந்து மேலே எழு. உலகாயதப் பொருள்களிடத்துள்ள நாட்டத்தை விடுவாயாக. எல்லாவற்றின்மீதும் சமநோக்கை வைக்கவும். அமைதியுடன் இரு. உள்ஒளியுடன் ஒரு நகைபோலப் பிரகாசிப்பாயாக. ஆத்மஞானத்தில் உறுதியான கொள்கையை

மேற்கொள்வாயாக. காய்ச்சலை உண்டுபண்ணுகிற உலகத் தொல்லைகளிலிருந்து விடுதலை பெற்று உனது சொந்த ஆத்மாவிலே திருப்தியுடனிருப்பாயாக. ஒருவன் தனது இறுதிப் பிறப்பிலே வெகு எளிதாக பிரம்மஞானத்தை எய்துவான். அவன் தனது இறுதிப் பிறப்பிலே விசுவபிரேமை, பெருந்தன்மை, பொறுமை, சமநோக்கு, மனநிறை, தயாளம், மன்னிக்கும் சுபாவம் இவை போன்ற ஒரு முனிவரின் நல்லியல்புகளை வாய்த்தவனாயிருப்பான். "ஆத்மாக்களின் கதிமோக்ஷத்திற்காக நன்கு கணிக்கப்பட்ட நெறிகள் நம்மிடம் இரண்டு உண்டு. மாணவன் தனது குருவினுடைய உபதேசங்களை மிகவும் தீர்க்கமாய்ப் பின்பற்றுகிற நெறி முதலாவது. குருவிடம் மந்திரதீக்ஷை பெற்றுக்கொண்ட அதே ஜன்மத்திலோ அல்லது அடுத்த சில ஜன்மங்களிலோ முக்தி உண்டாகும். ஆத்மானுசீலனம் அதாவது குருவின் உதவியின்றி பெறுகிற கல்வியினால் ஞானம் எய்துதல் இரண்டாவது நெறி. மனிதனிடம் ஞானம் சுபேக்ஷ பூர்வகமாக எழுகிறது. வானுலகத்திலிருந்து எதிர்பாராமல் ஒரு பழம் விழுவது போன்று பிரம்மஞானம் அவனிடம் உதயமாகிறது. ஓ, இராமா! மேலே குறிப்பிட்ட இரண்டாவது நெறியைப் போல ஆகாசத்திலிருந்து விழும் பழம் போன்று ஆத்மஞானம் எழுந்துள்ள பழைய கதை இப்போது நான் உனக்குச் சொல்லுகிறேன்" என்று வசிஷ்டர் திருவாய் மலர்ந்தருளினார்.

முன்னொரு காலத்திலே விதேஹ எனும் தேசத்திலே தருமநெறி பிறழாத மாபெரும் மன்னன் ஒருவன் அரசாட்சி புரிந்தான். அவர் பெயர் ஜனகர். தனவந்தராயும் கம்பீரமாயும் பெருந்தன்மையாயும் இருந்தார். விஷ்ணுவைப் போல அவர் மக்களை ரக்ஷித்தார். அவரிடம் சன்மார்க்க ஒழுக்கங்கள் பலவும் பொதிந்திருந்தன. அழகான வசந்த ருதுவிலே வனப்புமிக்க தமது நந்தவனத்திலே பிரவேசித்தார். அங்கே நறுமணம் மிகுந்த மலர்கள் விதவிதமாகப் புஷ்பித்திருந்தன. தமது மந்திரிகளையும் ஏவலாளர்களையும் வெளியே நிறுத்துவிட்டு அவர் மாத்திரம் நந்தவனத்தைச் சுற்றி

உலாவலானார். அவர் சித்தர்களின் இனிய கீதங்களைக் கேட்டார். தாமரைபோல் கண்படைத்த இராமா! சித்தர்களின் கீதங்களை ஒப்பிக்கின்றேன். இவை அவர்களின் அனுபவங்களை வர்ணிக்கின்றன. “அறிகிறவனும் அறியப் படுபவனும் ஒன்று சேருகின்றார்கள். ஜீவாத்மா பரமாத்மாவிலே கலக்கிறது. மேலான ஞானமும் ஆனந்தமும் எழுகின்றன. இது ஆத்மஞானம். இதை நாடவேண்டும்” என்று சித்தர் மொழிந்தார். மற்றொரு சித்தர், “எல்லா வாஸனை களையும் ஒழிக்க வேண்டும். காண்கின்ற பொருள்கள் சகலத்தையும் நீக்கவேண்டும். அப்பால் ஆத்மா அல்லது ஜோதிகளுக்கு ஜோதியாக விளங்குகிற பிரம்மன்மீது இடைவிடாமல் தியானம் புரிய வேண்டும்” என்றார். இன்னொ சித்தர் “எல்லாப் பொருள்களையும் பிரகாசிக்கச் செய்கிறதும் உள்ளவைகளிலும் இல்லாதவைகளிலும் மத்தியில் உள்ளதும், சத் (இருப்பு)துக்கும் அசத் (இருப்பல்லாதது) துக்கும் இடையில் நடுநிலைமையான கேந்திரத்தில் எழுந்தருளியி ருக்கிறது மான சர்வவியாபகமான நித்திய ஜோதியை இடையறாமல் நாம் தியானிக்க வேண்டும்” என்று செப்பினார். பின்னும் ஒரு சித்தர் “ஜீவர்கள் எல்லோரும் நான் என்று எப்போதும் சொல்லிக் கொள்கிற ஸ்வயம் ஜோதியான ஆத்மாவின்மீது நாம் தியானிப்போம்” என்று உரைத்தார். “எல்லாப் பொருள்களும் யாருக்குச் சொந்தமோ, எவரால் எல்லாம் உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றனவோ, எவரிடமிருந்து எல்லாம் உதித்துள்ளனவோ, யாருக்காக அவை தங்குகின்றனவோ, எவருக்குள்ளே அவை பிழைக்கின்றனவோ, எவருக்குள்ளே அவை எல்லாம் திரும்புகின்றனவோ, எவருக்குள்ளே அவை யாவும் கிரகிக்கப்படுகின்றனவோ, அப்பேர்ப்பட்ட சத்தியப் பொருளை எல்லாமாயிருப்பவரை நாம் நமஸ்கரிக் கின்றோம்,” என்று சில சித்தர்கள் பாடினார்கள். “தங்கள் இருதயக் குகைக்குள் வீற்றிருக்கும் இறைவனைப் புறக்கணித்து வெளியே கடவுளைத் தேடுகிறவர்கள் உண்மையிலே கடற்கரைச் சங்குகளைத் தேடப்போகின்றார்கள் தங்கள் கைகளில் கிடைத்துள்ள கஸ்தூபமணியை விட்டுவிட்டு” என்று

சிலர் குறிப்பிட்டார்கள். வேறு சிலர் "ஆசைகள் அனைத்தையும் பரிபூரணமாக ஒழித்தவர்கள் மாத்திரமே இந்த ஆத்மாவை பெறக்கூடும்" என்று வியாக்கியானம் புரிந்தார்கள். மற்றும் சிலர், "சகல உலகாயதப் பொருள்களி டத்திலும் சந்தோஷம் இல்லாமையை அறிந்தும்கூட அவற்றிடம் தங்கள் உள்ளங்களைப் பற்று வைக்கிறவர்கள் கழுதைகள் தான், மானுடர்கள் அல்ல" என்று கண்டித்தார்கள்.

இதர சித்தர்கள், "இந்திரியங்கள் எனும் பாம்புகள் உடம்பாகிய குழிகளிலிருந்து மீண்டும் மீண்டும் தலைதூக்கி எழுகின்றன; இந்திரன் வஜ்ராயுதத்தால் மலைகளை உடைத்தது போன்று இவைகள் திரும்பத் திரும்ப உறுதியான விவேகம் என்கிற தடியினால் அடித்துக் கொல்லப்பட வேண்டும்" என்று முழங்கினார்கள். வேறு சிலர், "அமைதியான உள்ளம் கொண்டவனும் சமநோக்கு எய்தியவனும் எவனோ அவன் ஆனந்தமும் அறிவும் சொரூபமாகிய சச்சிதானந்த நித்தியாத்மாவைப் பெறுகிறான். இதுதான் மோக்ஷம் அல்லது இறுதி விடுதலை" எனப் பேசினார்கள். சித்தர்களின் மேற்குறிக்கப்பட்ட கீதங்கள் சித்தகீதம் என அமைகின்றன.

சித்தகீதம் ஜனகமகாராஜாவின் உள்ளத்திலே ஆழப் பதிந்தது. உடனே நந்தவனத்தை விட்டுவெளியே வந்து மந்திரிகளையும் ஏவலாளிகளையும் அவரவர் யதாஸ் தானத்திற்கு அனுப்பிவிட்டு தமது அரண்மனையிலே உச்சி மாடியிலே ஓர் அறையில் போய் தனியே அமர்ந்துகொண்டு கதவு தாளிட்டுக் கொண்டார். ஜனகர் அடியில் வருமாறு தமக்குள்ளே பேசிக் கொள்ளலானார் : உலகத்தில் எந்தவிதமான சாராம்சமும் இல்லை. இதில் இன்பமோ சத்தியமோ இல்லை. இந்த உலகத்தால் என் மனம் ஏன் மயக்கமடைகிறதென எனக்குத் தெரியவில்லை. நிறைந்த செல்வம் என்னிடம் இருந்தும்கூட சதா நான் துயரங்களால் கவலைகளால் பாதிக்கப்படுகிறேன். எனது வாழ்வின் நூறாண்டு காலம் நித்தியத்துவத்திலே ஓர் க்ஷணப் பொழுது தவிர வேறல்ல; எனினும் என் வாழ்வை அதிகமாக

மதிப்பிடுகிறேன். கணக்கற்ற பிரபஞ்சங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் எனது இராஜ்யம் வெறும் அணுவாகும். எனது ஆசைகளுக்கும் புலன்களுக்கும் நான் ஓர் அடிமையாக ஆகிவிட்டேன். என் இராஜ்யாதிகாரமோ குறுகியது. இராஜ்யாதிகாரம் தொடர்ந்து பத்திரமாக இருக்கும் என்று யோசனையில்லாத ஓர் மனிதனைப்போல எப்படி நான் நம்புவது! தற்கால வாழ்வு அழிவுறக்கூடியதொன்று.

எனினும் அதை நம்பியிருப்பதில் நான் ஒரு முட்டாள். என்னிடமிருந்து தொலைவில் உள்ளது எது? புலன் நுகர்வுப் பொருள்கள் அருகில் இருப்பதாகத் தோன்றுகின்றன. எனது அஞ்ஞானத்தின் காரணமாக எனக்கு மிக்க சமீபத்தில் இருக்கின்ற, வெகு உள்ளேயுள்ள ஆத்மா என்னிடமிருந்து அதிக தொலைவில் இருப்பதாகத் தோன்றுகிறது. ஆழமாய் உள்ளேயுள்ள எனது நித்திய ஆத்மாவை அறியும் பொருட்டு புலன்நுகர்வுப் பொருள்களை விலக்க வேண்டும். ஒவ்வொன்றும் அழியக்கூடியது. இங்கேயுள்ள எதுவும் சாஸ்வதம் அல்ல, நன்மை பயப்பவையும் அல்ல. மக்களில் மகோன்னத நிலையிலுள்ளவர்கள் காலக் கிரமத்திலே வெகு கீழ் நிலையிலுள்ளவர்களுக்கும் கீழாக மாறிவிடுகிறார்கள். ஆத்மாவினால் அடக்கப்படும் இந்த அஞ்ஞானம் எங்கிருந்தது? துயரத்திலும் தொல்லைகளிலும் நான் அவதிப்படும்போது இந்த உண்மைகளாலும் கணக்கற்ற உறவினர்களாலும் என்ன பயன்? எனது செல்வம் ஓர் நீர்க்குமிழி. என் முன் அது பொய்த் தோற்றமாகிறது. சக்கரவர்த்திகளும் அரசர்களும் செல்வத்தோடு அழிந்தார்கள். அநேக இந்திரர்கள் விழுங்கப் பட்டார்கள், நித்தியத்துவ சமுத்திரத்திலே நீர்க்குமிழிகளைப் போல். ஆகையால் எதிலும் எந்த நம்பிக்கையும் இல்லை.

கோடிக்கணக்கான பிரம்மாக்கள் காலங்கழிந்து போனார்கள். மண்ணுலக மன்னர்கள் மண்ணாக மாறினார்கள். என் வாழ்விலே என்ன உறுதிப்பாடும் நம்பிக்கையும் உள்ளன? உலகம் ஓர் தீர்க்க சொப்பனம். சிற்றின்ப உடல் மனத்தின் தவறான கொள்கை. உடல் மற்றும் பொருள்கள் மீது சார்ந்தால், நான் நிஜமாகக் குற்றம்

சாட்டப்படுவேன். எண்ணற்ற பிரபஞ்சங்களும், பிரம்மாக்களும், ஜீவர்களும் வந்துபோனார்கள். ஓ, மனமே! அப்படியெனில் உன் வாழ்வின் சாஸ்வதம் எங்கே? என்னைப் பற்றிய மனோபாவனையும் இதர பொருள்களைப் பற்றிய நோக்கும் என் மனத்தின் பொய்க்கற்பனைகள். என் அஹங்காரம் என்னைப் பற்றிக் கொண்டிருக்கிறது. ஆசைகள், அஹங்காரம், உடல் மீது பற்று ஆகியவற்றால் என்னை இந்த அஞ்ஞானநிலைக்கு இழிவுபடுத்திக் கொண்டேன். நான் ஓர் முட்டாள். என் வாழ்வின் காலம் ஒவ்வொரு கணமும் அழிக்கப்படுகிறது. பகலும் இரவும் பறந்தோடுகின்றன. இன்னமும் அழியக் கூடாத ஆத்மாவை நான் அறியவில்லை. காலம் எனும் குறளிவித்தைக்காரன் உலகம் எனும் விளையாடுமிடத்தில் எல்லா மனிதர்களையும் விளையாட்டுப் பொருட்களாகச் செய்து கொண்டு பந்துக்களைப் போல அவற்றை வீசுகிறான். போதும் போதும். எல்லா மரணங்களும் முன்பு நான் அடைந்தவை.

ஒரு கஷ்டத்தின் மேல் மற்றொன்றை நாம் சந்திக்கிறோம். அப்படியிருந்தும் தௌர்ப்பாக்கியமான லௌகிக வாழ்விலே அருவருப்பு உணராத அவ்வளவு அவமானம் அற்றவர்களா யிருக்கிறோம். எல்லாப் பொருள்களும் அழியக்கூடியவை என்பதை நாம் காண்கிறோம்; ஆயினும் அழியாதவனை நாடுகிறதில்லை அஞ்ஞானிகள் தினந்தோறும் மிகப் பயங்கரமான பாபச் செயல்களையும் எண்ணற்ற அதர்மங்களையும் புரிகிறார்கள். வாலிபத்தில் அவர்கள் அஞ்ஞானத்தில் மூழ்கிக் கிடக்கிறார்கள். யௌவன தசையில் அவர்கள் தங்கள் காமச்சேஷ்டைகளால் கொதிப்படைந்து மாதர்களாகிய வலைகளில் சிக்குண்டிருக்கிறார்கள்; வயோதிக காலத்தில், குடும்பங்களின் கவலையால் நிர்ப்பந்தப்படுத்தப் படுகிறார்கள்., அவர்கள் சம்சாரச் சுமையின் கீழ் புலம்புகிறார்கள். துயரம் மற்றும் பச்சாதாபத்தால் அவர்கள் மேற்கொள்ளப்பட்டு மரணமாகிறார்கள். அவர்கள் நல்ல செயல்களைப் புரியவும் பகவானை வணங்கவும் எப்போது நேரம் கிடைக்கப் பெறுவார்கள்? நாம் நீடித்த அதிக

இன்பத்தை இதரவற்றைக் காட்டிலும் இடைவிடாமல் நாடுகிறோம். உலகாயதத் துன்பங்களுக்கு அப்பால் உள்ள நித்தியாத்மாவை ஒரு போதுமே நாடுவதில்லை. தாமரை மலர் போன்ற கண்களையும் கவர்ச்சிகரமான புன்னகைகளையும் வாய்ந்த மாதர்கள் விரைவில் வாடி மாண்டு போகிறார்கள். பல பிரம்மாக்களும் விஷ்ணுக்களும் கண் சிமிட்டும் கணத்திலே சிருஷ்டிக்கப்பட்டு அழிக்கப்பட்டால், பலஹீனமான ஜந்துவாகிய "நான்" அவர்கள் முன் எம்மாத்திரம்? இவ்வுலகம் எல்லையற்ற துக்கங்களைக் கொண்ட சமுத்திரமென்று ஞானிகளால் கூறப்படுகிறது. அப்பால், இங்கே எவரால் எந்த சந்தோஷத்தை எதிர்பார்க்கக் கூடும்?

"மனமானது சம்ஸார விருக்ஷத்தின் வேரை உண்டாக்குகிறது. அது எல்லாத் திசைகளிலும் மலர்கள் தளிர்கள் கனிகள் நிறைந்த கிளைகளை விட்டு விஸ்தரிக்கின்றது. இந்த மாயை எப்படி வந்தது? மனமானது இந்த உலகமாகிய நாடகமேடையில் இந்திரியங்களின் இன்னிசைக்கேற்ப கூத்தாடுகிறது. சங்கல்பம் என அழைக்கப்படுகிறதும் இந்த மனமே தான். மனமானது சங்கல்பங்களின் ஓர் மூட்டை. சங்கல்பங்கள் அழிபடுமானால் மனம்கூட எளிதில் நாசமடையும். மனத்தின் வேர் நிர்மூலமாக்கப்பட்டால், ஜனன மரணமாகிய விருக்ஷம் கூட ஒழிக்கப்படும். ஆத்மாவாகிய முத்தைத் திருடின கள்வனை இப்போது கண்டு பிடித்துவிட்டேன். இப்போது விழிப்புடன் இருக்கிறேன். ஆத்ம கள்வனைக் கண்டுபிடித்துவிட்டேன். அவன் பெயர் தான் மனம். இந்த நயவஞ்சகத் துரோகி மூலம் நீண்ட காலமாக அவஸ்தைப்பட்டுக்கொண்டிருக்கிறேன். இனி எப்போதும் இந்த மனத்தினால் நான் ஏமாற்றப்பட மாட்டேன். இம்மனத்தைக் கொல்லத் தீர்மானித்துவிட்டேன். விவேகமாகிய ஊசியால் மனத்தைக் குத்தி, தன்னடக்கம் வைராக்கியம் ஆகிய நற்பண்பாடுகளோடு போர் தொடுக்கிறேன். ஆத்மஞானத்தில் விழிப்பேற்பட்டு ஆத்ம விசாரணை தொடருவேன். நீண்டகாலமாகக்

காணாமற்போயிருந்த ஆத்மாவை இப்போது நான் கண்டுபிடித்துவிட்டேன். தூய்மை பொருந்திய நித்தியாத்மா மீது சதாகாலம் தியானம் புரிந்து பரம ஸாந்தியை எய்துவேன். எனது பிரம்மாண்டமான சத்துருவாகிய மனத்தை பணியச் செய்து நான் இந்த உடல், பொருள்களும் சொத்துக்களும் என்னுடையவை என்ற கோட்பாடுகளை விட்டுவிடுவேன். சித்தபுருஷர்களால் பாடப்பெற்ற ஆத்மீகமூட்டுகின்ற இக்கீதங்கள் சித்தகீதம் எனப்படுவன. சித்தகீதம் கேட்டு நான் ஆன்மீய அனுபவங்கள் அனைத்தும் பெற்றுவிட்டேன். இச்சித்தர்களை எனது குருமார்களாகக் கருதுகிறேன். என் மனத்தை முற்றிலும் நசித்துவிட்டேன். நித்தியத்துவப் பேரானந்தத்தை இப்போது நான் இரஸித்து வருகிறேன். இப்போது வலிகளிலிருந்தும் பாதிப்புகளிலிருந்தும் முற்றிலும் விடுதலை பெற்றுவிட்டேன். துவந்துவங்கள், வேறுபாடுகள், மேம்பாடுகள் மறைந்துவிட்டன. எங்கணும் ஏக ஆத்மாவையே காண்கிறேன். நான் சதாகாலமும் ஸாந்தமாயிருக்கிறேன். "நான்" "அவன்" "நீ", "இங்கு", "இப்போது", "பிறகு" எல்லாம் என்னிடமிருந்து மறைந்துவிட்டன. ஓ, ஆத்மஞானமே! நீ என் அஞ்ஞானத்தை அழித்து மேலான இந்த நிலைக்கு என்னை உயர்த்திவிட்டாய்! உன்னைநான் நமஸ்கரிக்கின்றேன்"!

மகோன்னத உணர்வுநிலையாகிய சமாதியில் ஜனக மகாராஜா ஆழ்ந்திருந்தார் வெகுகாலம். அப்பால் சமாதி கலைந்து "எங்கணும் நான் ஏகமாகிய பகுக்கவொண்ணாத பிரம்மனை மாத்திரமே பார்க்கிறேன். நான் சதாகாலமும் எனது ஆத்மாவிலேயே ஸ்திரமாயிருக்கிறேன். எதுவும் என்னைத் தொந்தரவுபடுத்தாது. காமமும் பகைமையும் என்னை விட்டோடின. உலகாயதப் பொருட்களை நான் விரும்பவில்லை. பற்றற்றவன்; சமதிருஷ்டி சாதிக்கிறேன். மனநிறையாகிய ஸாந்தியை அடைந்துள்ளேன்" என்று கூறிக்கொண்டார். அரசியல் விஷயங்களை தான் கர்த்தா என்ற நினைவு இல்லாமல் கவனித்தார். தன் பால் செலுத்தப்பட்ட கடமைகளை எவ்விதமான பயனையோ வெகுமானத்தையோ நாடாமல் நிறைவேற்றினார். வாழ்க்கை

நிலையிலே விடுதலை பெற்றவராய் விளங்கினார். இறந்த காலத்தை மறந்தவராயும் எதிர்காலத்தைப் பற்றி கவனமில்லாதவராயும் இருந்து வந்தார்.

வசிஷ்டர் இராமபிரானைப் பார்த்து "ஓ, இராமா! ஆத்மஞானம் இடையறாத ஆத்ம விசாரணையால் மட்டுமே அடையக் கூடும்- செயல்களால் அல்ல. உலகாயத மனப்போக்குள்ளவர்கள் புலன்வழி இன்பப் பொருள் களையே பற்றிக் கொள்கிறார்கள். ஆத்ம சாக்ஷாத்காரம் அவரவர் முன் ஜன்மத்தில் ஆற்றப்பட்ட முயற்சிகளால் வருகிறது. துயரங்களையும் மறு பிறப்புக்களையும் உண்டாக்குகிற மிகப் பயங்கரமான அஞ்ஞானத்தை ஒருவன் அழிக்கவே வேண்டும். யாராவது ஒருவன் பரமாத்மாவைப் பெற விரும்பினால் முன் கூட்டியே அவன் ஆசைகள், பாசங்கள், அஹங்காரம் முதலிய அனைத்தையும் ஒழித்துக்கட்ட வேண்டும். வயலை உழுத பிறகல்லவா விதைத்துப் பயிரிட்டு நெல்லைப் பெறமுடிகிறது! அஹங்கார மேகம் கலைக்கப் பட்டுவிட்டால், தெய்வீக ஒளி சூரியனைப் போல பிரகாசமாய் வீசுகிறது. ஆத்மாவை அறிந்தவன் வெளி உலகத்திய எண்ணங்களிலிருந்து விடுதலை அடைகிறான். அவன் இன்ப துன்பங்களுக்கு ஆளாகமாட்டான். அவன் காமத்தினின்றும் பகைமையினின்றும் விடுதலை பெற்றவன். பிரம்மனாகிய சூரியனை மறைத்துக் கொண்டிருந்த அஹங்காரமாகிய அடர்ந்த மேகம் ஆத்மஞானத்தினால் கலைக்கப்படுகிறது. விலைமதிக்கவொண்ணாத ஞானமாகிய ஆபரணம் ஞானிகளின் இதயங்களாகிய பெட்டியில் வைத்துப் பூட்டப்பட்டுள்ளது. அவர்கள் என்ன என்ன நினைக்கின் றார்களோ கல்ப விருக்ஷத்தைபோல் க்ஷணநேரத்தில் கொணர்ந்து கொடுக்கும்.

சித்து விளையாடல் மாத்திரமே இவ்வுலகமாகப் பிரகாசிக்கிறது. பிரம்மனுக்கு அப்பால் இவ்வுலகம் இருக்கிறதல்ல. அது வேறாக உள்ளதல்ல. அதற்குச் சொந்த இருப்பு கிடையாது. உலகமாகத் தோன்றும் உலகம் உலகம் அல்ல. இவ்வுலகம் பிரம்மனைத் தவிர வேறல்ல. பிரம்மன்

மனக்கண்ணாடியின் மூலமாக இந்த பிரபஞ்சமாகத் தோன்றுகிறது. ஏகத்தில் ஒன்றிய அறிவோடு கூடிய பற்றற்றதன்மை (விரக்தி) மனத்தின் உட்கிடக்கையை உருக்கித்தள்ளி வாழ்க்கையின் பிரதான நோக்கமாகிய பரமாத்மாவிலே மிகவும் நலமான மகோன்னதமான ஆனந்த நிலையையும் இளைப்பாறுதலையும் வழங்குகின்றது. தாமரை மலர் போன்ற கண் படைத்த இராமா! இப்போது ஜனகமகாராஜாவைப்போல் ஆத்மாவின் மீது தியானம் புரிந்து ஆத்மஞானத்தைப் பெறுவாயாக'' என்று உபதேசித்தருளினார்.

## காதியின் கதை

வசிஷ்ட மகரிஷி மேலும் உபதேசிக்கலானார்கள். "ஓ இராமா! இறைவனின் ஏமாற்றுகிற சக்தியே மாயை. மாயை சர்வ வல்லமை படைத்தவள். இறைவனின் இன்னருளைப் பெற்றவர்களால் மாத்திரமே மாயை ஜயிக்கப்படும். எனது தெய்வீக மாயையைத் தாண்டுவது வெகு கடினம். என்னை அண்டுவோர் இம்மாயையைக் கடப்பார்கள் - (பகவத் கீதை ஏழாவது அத்தியாயம் பதினான்காவது சுலோகம்) மாயையின் எல்லையற்ற சக்தியையும் மகிமையையும் வர்ணிப்பது அசாத்தியம். மாயையை ஜயித்துவிட்டு ஒருவன் ஆத்மஞானம் பெறக்கூடும். மனம் மாயையின் வலிமைமிக்க ஆயுதம். மனத்தின் மூலம் மாயை இயங்குகிறது. மனம் மாயையின் மாறுதல் அல்லது விளைவு. மனோ ஜெயம் மாத்திரமே மாயையை ஒழிப்பதற்கு வழி. ஜனன மரணத்திற்கு மறுபெயர் தான் மாயை. காதியின் கதையை கவனமாகக் கேட்பாயாக. மாயையின் தன்மையையும் அவளுடைய இயக்கங்களையும் பற்றி தெளிவாக உணருவாய்.

இப்பூமியிலே கோசலம் என்ற தேசம் காடுகளாலும், கனிகள் நிறைந்த தருக்களாலும் சூழப்பட்டிருந்தது. அங்கே காதி என்று அழைக்கப்படும் கற்றுணர்ந்த பிராமணன் ஒருவன் வசித்து வந்தான். புத்தி சாதுர்யம் படைத்தவன், வேதங்களில் தேர்ச்சி பெற்றவன். நற்பண்புக்கு உறைவிடம். அவன் நண்பர்களையும் உறவினர்களையும் விட்டு காட்டுக்கேகி தவமியற்றலானான். ஓர் குளத்தின் நீர் நடுவிலே கழுத்தளவு ஆழத்தில் சென்று மகாவிஷ்ணுவின் தரிசனம் கோரி எட்டு மாதங்களாகத் தவம் புரிந்தான். மகாவிஷ்ணு பிரசன்னமாகி அவனது தவத்தின் கருத்தைக் கேட்டார். காதி குளக்கரைக்கு வந்து விஷ்ணுபகவானை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து "ஓ பகவானே! திரிலோகங்களையும் தாங்கள் இரக்ஷிக்கிறீர்கள். நான் சச்சிதானந்த பரப்பிரம்மத்தில் இரண்டறக் கலக்க விரும்புகிறேன். மாயையின் நிஜமான தன்மையையும் செயல்களையும் நேரடியாகத் தெரிவிக்கும்படி அனுக்கிரகம் புரியுங்கள்" என்று பிரார்த்தித்தான். மாயையை

நேரடியாகக் காண்பாய்; பிறகு உனது பக்தி மூலம் மாயையிலிருந்து உன்னை விடுவித்துக் கொள்வாய்" என்று திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தானமானார் - மேகங் களிடையே உள்ள நகரம்போல.

பகவான் தரிசனம் காதியை ஆனந்தமூட்டியது. இதயம் மகிழ்ச்சியால் நிறைந்தது. கானகத்தில் சில நாட்களைக் கழித்தான். குளத்திலே நீராடும்போது மகாவிஷ்ணுவின் சொற்களைப் பற்றிச் சிந்தித்தான். அவன் தனது சொந்த வீட்டிலே வியாதி காரணமாகத்தான் இறந்து போய் விட்டதாகக் கண்டான். அவன் தனது நண்பர்களும் உறவினர்களும் ஒருங்கே தனது தேகத்தின் பக்கத்தில் கூடி அழுவதையும் பார்த்தான். தனது பிராணநாயகி தன் கால்களின் மீது கண்ணீரைத் தாரை தாரையாகச் சிந்தி அகோரமாக அழுவதையும் நோக்கினான். தன் தாய் தன்னை அணைத்துக் கொண்டிருப்பதையும் கண்டான். அழுது கொண்டிருந்த உறவினர்கள் தனது உடலை நீராட்டி ஈமக்கிரியைகளைச் செய்து தகனம் புரிந்தார்கள். இங்ஙனம், குளத்து நீர் நடுவிலே நின்றவாறு காதி தனது மனத்தின் மூலமாக மனத்தால் ஆற்றப்படும் மாயைச் செயல்களைக் காணலானான். அப்பால் பூட்டான் நகருக்கு அருகே உள்ள ஓர் கிராமத்தில் கருநிறமுள்ள ஓர் சண்டாளமாதிற்கு தான் ஓர் ஆண் குழந்தையாகப் பிறந்ததை அறிந்தான். பதினாறு வயது நிறைந்தது. அவன் தானும் மழைக்காலத்திலே வானில் தோன்றும் கருநிறமுள்ள மேகம் போன்ற மேனியைப் பெற்றிருந்ததையும் அறிந்தான். அதே ஜாதியிலுள்ள பெண்ணை மணந்து அவளுடன் சந்தோஷமாக வாழ்ந்தான். பல குழந்தைகள் பிறந்தது. வயது முதிர்ந்த கிழவனானான். இலைகளாலும் வைக்கோலாலும் ஓர் வீடு கட்டிக் கொண்டான். முனிவர் போன்று அங்கே வசித்தான். அவனுடைய குடும்ப அங்கத்தினர்கள் அனைவரும் மரணத்தின் கொடிய கரத்தால் வாரித் தள்ளப்பட்டார்கள். அவன் மாத்திரமே உயிரோடு வாழ்ந்து வந்தான். ஏகாந்தத்தினால் அலுப்புற்று பல தேசங்களிலே அலைந்து திரிந்து இறுதியில் பெரும் தனவந்தர்கள் வாழுகின்ற

கீரதேசத்திற்குப் போய்ச் சாலைவழி நடந்து கொண்டிருந்தான். அத்தேசத்து மன்னன் சமீப காலத்தில் இறந்தான். அவனுக்கு வாரிசு யாரும் கிடையாது. இராஜாங்க யானையை முத்துக்களாலும் சித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய ஜரிகை கலந்த பட்டுத்துணிகளாலும் நன்றாக அலங்கரித்து ராஜவீதி வழியே அதன் இஷ்டப்படி புது மன்னனைத் தேர்ந்தெடுக்க விட்டுவிடுவது அத்தேசத்து மக்களுடைய பரம்பரையான வழக்கமாயிருந்தது. அதன்படி அலங்கரிக்கப்பட்ட இராஜாங்க யானை கம்பீரமாக வந்து கொண்டிருந்ததை சண்டாளன் விநோதமாக அதையே உறுதியாய்ப் பார்த்துக் கொண்டிருந்தான். யானை அவனருகிலே வந்ததும் தும்பிக்கையால் அச்சண்டாளனைத் தூக்கித் தன் முதுகிலே ஏற்றிக்கொண்டு சென்றது. மக்கள் பறையடித்து வாத்தியங்களை முழக்கினார்கள். எண் திசைகளிலிருந்து ஆரவாரத்தோடு "வெற்றி தங்களுக்கு விளங்குக! வெற்றி தங்களுக்கு உரித்தாகுக" என்று கோஷமிட்டார்கள் மக்கள். அரண்மனையிலிருந்த அழகிய மாதர்கள் அவனைப் பல ஆபரணங்களோடும் புஷ்பமாலைகளோடும் அலங்கரித் தார்கள். பின் சிம்மாசனத்தில் ஏற்றி முடிசூட்டினார்கள். அவனுடைய கட்டளைகளை மந்திரி பிரதானிகள் நிறைவேற்றலானார்கள். அவன் காவல் எனும் பெயரால் அழைக்கப்படலானான். கீர இராஜ்யத்தை எட்டு ஆண்டுகள் அரசாண்டான்.

அரசன் தன் ஆபரணங்களை எல்லாம் களைந்து விட்டு ஒரு நாள் அரண்மனைப் பக்கமாய்ச் சிறிது தூரம் சென்றான். அங்கே சண்டாளர்கள் சக்கிலியர்கள் இசை வாத்தியங்களை முழக்கிக் கொண்டிருந்தார்கள். அதன் தலைவன் வயோதிகன் இப்புதிய அரசனைப் பார்த்து பூர்வ குடும்பப் பெயரால் அழைத்தான் "ஓ, கடஞ்சலே! எனது பூர்வீக உறவினரே, இப்போது எங்கே இருக்கிறீர்கள்? தங்களை இங்கே காணப் பெருமகிழ்ச்சியடைகிறேன். தாங்கள் இசையில் நிபுணனா யிருப்பதைக் கண்டு இவ்வூர் அரசர் தங்கள் வேலையில் அமர்த்திக் கொண்டாரா?" என்று கேட்டான். அரசன் அக்கிழவன் கூறிய பேச்சிற்கு பதில் பேசவில்லை. அவசரமாக

அரண்மனை அந்தப்புரத்திற்கு ஓடினான். ஜன்னல் பக்கமாய் நின்று கொண்டிருந்த அரண்மனை பெண்களும் சேவகர்களும் அவர்களிடையில் நடந்த சம்பாஷணையைக் கேட்டு தமது அரசர் சக்கிலிய ஜாதியில் பிறந்தவரென்று தெரிந்து மிக்க விசனத்தில் ஆழ்ந்தார்கள்.

அரசன் முகம் வெளிறிவிட்டது. பெண்களும் சேவகர்களும் மந்திரிகளைப் பார்த்து "இவ்வூர் மன்னர் நமது ராஜா, கீழ்த்தர சண்டாள சக்கிலிய வகுப்பில் பிறந்தவர். என் செய்வது?" என்று முறையிட்டார்கள். அரசர் முன் சற்று எட்ட இருந்து வரலானார்கள். அவரது உடலைத் தொடவும் கூசினார்கள். அரசர் எல்லோராலும் புறக்கணிக்கப் படலானார். சண்டாள அரசரோடு தொடர்ந்து வசித்துவந்த பாபத்தைத் தொலைக்க அக்கினியில் தங்களை தகித்துக் கொள்ளும் செயலைத் தவிர வேறு எவ்விதமான தவத்தாலும் பிராயச்சித்தம் செய்ய இயலாதெனை ஒருவர்க்கொருவர் கூறிக் கொள்ளலானார்கள். அக்கினி குழு எழுப்பப்பட்டது. எல்லோரும் குழந்தைகள் உள்பட அதிலே குதித்து எரிந்து சாம்பலானார்கள். இவ்விபத்தைக் கண்ட இராஜா இதயம் நொந்து வருந்தி "என்னோடு பழகியதால் என் பிரஜைகள் தீக்குளித்தார்கள். நான் உயிர் வைத்திருப்பதில் என்ன பயன்? தீயில் குளிப்பேன்" என்று கூறிக்கொண்டு தனியே விறகுகளை அடுக்கி எரிமூட்டி தன்னையே தகித்துக் கொண்டான். தீயில் தன் உடலை வீழ்த்திக்கொண்டபோது காவல மன்னன் கடுமையான உணர்ச்சிவசப்பட்டான். நீரில் நின்றுகொண்டிருந்த காதியை மனோராஜ்யம் எழுப்பி விட்டது. அவன் இதயம் துடிதுடிக்க உடம்பு நடுநடுங்கியது. சிறிது நேரம் சென்ற பிறகே அவன் சுய உணர்வைப் பெற்றான். மாயையின் விளைவுகளினின்று விடுபட்டான். பரமஸாந்தி எய்தியது அவனுடைய மனம். குளக்கரைக்கு வந்து தனக்குள், "அந்த இராஜ்யத்தில் சென்றது யார்? நான் காதி குளத்தில் நீராடினேன். நான் கண்டதெல்லாம் வியப்பாயிருக்கிறது. எனக்கு விவாகமே இல்லை. மனைவி எப்படி இருப்பாள் என்று கூட தெரியாது காமம் இன்னது

என்று அறியேன்" என்றெல்லாம் சிந்தித்து காதி சில நாட்களை கழித்தான் தனது குடிசைக்குள்ளே.

ஒரு பிராம்மணனை விருந்தாளியாக உபசரிக்கும் வாய்ப்பு கிட்டியது காதிக்கு. பழங்களும் தேனும் பறிமாறினான். இருவரும் சந்தியா காலங்களில் தத்தம் கடமைகளை ஆற்றினார்கள். சூரியன் அஸ்மித்தபோது, அவர்கள் அமர்ந்துகொண்டு பல்வேறு விஷயங்களைப் பற்றியும் ஆத்மஞானத்தைப் பற்றியும் பேசலானார்கள். காதி விருந்தாளியைப் பார்த்து "ஐயா, ஏன் மெலிந்திருக்கிறீர்கள்?" எனக் கேட்டான். அதற்கு "கீரதேசம் பிரசித்தி பெற்றது. அங்கு ஒரு மாதம் தங்கினேன். ஒருவரைச் சந்தித்தேன். அடியில் வரும் சங்கதியைக் கேட்டேன்' என்று விருந்தாளி ஆரம்பித்தார்.

"அந்த தேசத்தில் ஒரு அரசர் எட்டு ஆண்டுகள் ஆண்டாராம். நாய் தின்னும் இழிவான சண்டாள சக்கிலிய ஜாதியைச் சேர்ந்தவர் அரசர் என்று மக்கள் கண்டு கொண்டார்கள். பிராமணர்களும் இதர மக்களும் தீக்குளித்தார்கள். அரசரும் அவ்வாறே செய்தார். இச் செய்தியைக் கேட்டு எனது பாவங்களைப் போக்கிக் கொள்ள பிரயாகைக்கு யாத்திரை சென்றேன். அங்கு தவங்களும் சாந்திராயன விரதமும் அனுஷ்டித்தேன். ஆனதால் நான் உடல் தளர்ந்து மெலிந்துள்ளேன்" என்று கூறி முடித்தான்.

இதைக் கேட்டதும் காதி மிகவும் வியப்படைந்தான். "எனது உறவினர்களிடையில் நான் இறந்து போனதைக் கண்டது சந்தேகமில்லாமல் எனது மனத்தினுடைய பிரமையாகும்; ஆனால், எனது கண்ணோட்டத்தின் பிற்பகுதியில் தான் சண்டாளனாக இருந்த விஷயம் இந்த பிராம்மணன் சண்டாள தேசத்தில் பிரவேசித்த பாவத்திற்காக அனுஷ்டித்த சாந்திராயன தவத்தினால் நிரூபிக்கப்படுகிறது. ஆகையினாலே சண்டாளனின் விவரங்கள் முழுமையும் தெரிந்து கொள்ள உடனே பூடானுக்குச் செல்ல வேண்டும்" என்று தனக்குள் அரசன் முடிவு செய்து கொண்டான். தனது பூர்வீக ஜன்மம் சண்டாள ஜன்மமென்பதன் சம்பவங்களின் உண்மையை தனக்குத் தானே ருஜுப்படுத்திக்கொள்ள காதி

பிரயாணஞ் செய்துதான் சொர்ப்பனத்தில் கண்ட தேசத்திலே பிரவேசித்து சண்டாளர்களின் இருப்பிடமாகிய தனது ஜனனமான ஊரைக் கண்டான். கதாஞ்சாவின் வாழ்க்கை முழுவதையும் பற்றி சண்டாளர்கள் விரித்துரைத்தார்கள். மேலும் அவன் கீரதேசத்திற்குள் சென்றான். அரண் மனையைக் கண்டான். தனது வாழ்க்கையின் சம்பவங்களைப் பற்றி மக்கள் சொன்னதைக் கேட்டான். திகைப்பும் வியப்புமடைந்தான். “மகாவிஷ்ணுவினுடைய மாயை இதுதானா? இப்போது மாயையின் தன்மையும் செயல்களும் எனக்கு நன்கு புரிந்துவிட்டன. மாயை உண்மையில் மர்மமாயிருக்கிறது!” என்று தனக்குள் எண்ணமிடலானான். உடனே ஓர் மலைக்குகைக்குள் போய் ஒருவருஷ காலம் அகோர தவம் மேற்கொண்டான். கைநிறைய ஜலத்தை மட்டும் பருகி ஜீவிக்கலானான். கரு நீலமேகத்தின் வடிவிலே விஷ்ணுமூர்த்தி காட்சியளித்து “ஓ, காதி, நீ மாயையின் உண்மையான சொரூபத்தையும் மகிமையையும் பூர்ணமாகக் கண்டாய். மாயை விரித்த மாயா ஜாலப் பின்னல் வலையைத் தெரிந்து கொண்டாய். இன்னும் என்ன வேண்டும்? இங்கே இக்கடும் தவத்தை ஏன் செய்கிறாய்?” என்று கேட்கலானார். பகவான் முன் காதி சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து அவரைப் புகழ்ந்து “ஓ, பகவானே! மாயையின் தன்மையைத் தெளிவாகப் புரிந்துகொண்டேன். ஆனால் மாயையின் குப்தமான சுவயம் நிலையை இன்னும் அறியாமலிருக்கிறேன். பகவானே! அதே காட்சிகள் விழிப்பு நிலையிலும் கூட தொடர்ந்து காணப்படுவது எப்படி? சொப்பனம் போல் அவ்வளவு பொய்யான எதையோ கண்டதாக நினைத்தது ஒரே க்ஷண நேரம் மாத்திரமே - நீர் நடுவில் நின்றபோது. ஆனால் அது வெளிப்புறப் பார்வைக்கும் உணர்வுக்கும் எங்ஙனம் பிரத்தியக்ஷமாகிறது? சண்டாளனாக நான் ஜனனமான மாயைத் தோற்றம் என் கண் முன்னே எப்படிப் புலப்படுவதாயிற்று? அது எனது ஞாபகத்தில் மட்டுமே இருந்திருக்க வேண்டும்” என்று உரையாடினான்.

அதற்குப் பகவான், வெளிப்புறத்தில் காணப்படுவது உண்மையிலே ஒருவனுடைய மனத்தின் தோற்றம் மாத்திரமே ஆகும். ஒருவனுக்கு வெளியே பூமி, கடல், மலைகள், வானம் என்பவை எதுவுமே கிடையாது; அவை யாவும் மனத்திலே அடங்கியுள்ளன. இப்பிரபஞ்சமும் இதர பொருள்களும் தமக்கு அடிப்படை ஆதாரமாக மனத்தைப் பற்றிக் கொண்டிருக் கின்றன. மனத்திற்கு அப்பாலே எக்காலத்திலுமே அவை இருக்கிறதில்லை. எல்லா மக்களும் மனோ மாயையின் வாயிலாக இவ்வுலகம் முற்றிலும் நிஜமானதென்று கருதி எல்லாப் பொருள்களையும் இரசிக்கின்றனர். விதைக்குள் எங்ஙனம் பழங்களும் புட்பங்களும் அடங்கிக் கிடக்கின் றனவோ, அங்ஙனம், இப்பூமியும் இதர எல்லாப் பொருள்களும் மனத்தில் மாத்திரமே அடங்கியுள்ளன. பிரபஞ்சம் முழுவதும் மனத்தில் மாத்திரமே தங்கியுள்ளது. பானைகளைச் செய்வதும் செய்யாமலிருப்பதும் பானை செய்கிறவனுடைய செயல் களாகின்றன. அது போல, நிகழ்காலத்திலே பொருள்களின் தோற்றமும், சென்று போன இறந்த காலத்திய எண்ணங்களும், காணப்படாத நிகழ்காலமும் யாவும் மனோசெயல்கள்.

வாழ்க்கை நாடகம் ஒரு நேரத்தில் ஒரு பங்கு காட்சியே வெளிப்படுத்துகிறது. மனமாகிய மேடை நகர்ந்து செல்வது போல சண்டாளக் காட்சி ஒன்றை உனக்கு வழங்குவதில் வியப்பில்லை. கணக்கிலடங்காத காட்சிகளைக் காட்டுவதும் சுலபம். மனம் மகிழ்ச்சியடைகிறபோது, ஓ, காதி! உனது மனம் பிரபஞ்சம் முழுவதையும் வலிமை படைத்தாக அடக்கிக் கொண்டு, முழுமையில் அற்ப பாகமாகிய ஓர் சண்டாளனின் வாழ்க்கையை உனது பொருளாக வெளிப்படுத்துமேயானால், அதற்கு நீ ஏன் ஆச்சரியப்பட வேண்டும்? உன்னை நீ ஒரு சண்டாளனாக கருதச்செய்வதற்கு உனது மனத்திலே உண்டாகியிருக்கிற பதிவே ஆகும். ஏகாக்ரத்தின் மூலம் உனது மனக்கருத்து ஒரு சண்டாளனின் வாழ்க்கையைப் பிரதிபிம்பித்தது. இப்பிரதி பிம்பம் பிராம்மண விருந்தாளியால் பிடிக்கப்பட்டது. அவன் கூட பாதிக்கப்பட்டான். பனம்பழமும்

காக்கையும் எனும் உபமானக் கதையைப் போல சண்டாளனின் வாழ்க்கைக் கருத்து பூடானிலும் கீரதேசத்திலும் வாழ்ந்த மக்கள் எல்லோருடைய உள்ளங்களிலும் தானே பிரதிபிம்பித்தது. எல்லோருடைய உள்ளங்களிலும் பிரதிபிம்பமானது ஓர் உண்மையெனக் காட்டிக் கொண்டது. இவை யாவும் மனத்தின் கற்பனைச் சடலங்கள் ஆகும். எதுவும் நிஜமல்ல. இவையெல்லாம் உனது கற்பனையின் புகைப்படலங்கள். நீ கண்டதும் கேட்டதும் எதுவாயினும் அவை உனது கற்பனையின் வலை பின்னல் மாத்திரமே. நம்பிக்கைகளாலும் ஆசைகளாலும் வெறிபிடிக்கப் பெற்ற மனம், பொருள்கள் தனக்கு முன்னாலே இருப்பது போன்று ஒருவன் கனவு காண்பது போல் தனக்கு முன்னாலே ஒவ்வொன்றையும் பார்க்கிறது. விருந்தாளியோ தேசமோ கிடையாது. பூடான், கீரதேசத்தவர்கள் கூட இல்லை. அதெல்லாம் ஒரு பகல் கனவு. மனக்கண் கொண்டு நீ கண்டது எதுவும் பொய்யாய்ப் போயிற்று.

உண்மை இதுவே. ஒரு காலத்தில் பூடான் தேசத்துக்குச் செல்லுகையில் வழியில் இந்த மலைக்குகையில் தங்கினாய். நீண்ட பிரயாணத்தின் அலுப்பினால் அயர்ந்த தூக்கத்திலே நீ வீழ்ந்தாய். சண்டாளன், பூடான் நகரம், கீரதேசம் இவைகளைப் பற்றி நீ கனவு கண்டாய். குளத்து நீரில் பிரார்த்தனையின் போது, மனத்தின் மாயை தான் உனக்கு இவற்றையெல்லாம் காண்பித்தது. மனத்தின் பிரத்தியக்ஷங்கள் உண்மையிலே ஆச்சரியப்படத்தக்கவை. பல பையன்கள் ஒரே விதமான விளையாட்டை பல்வேறு வகைகளிலும் ரஸித்து மகிழ்வது போன்று, வெவ்வேறு மக்கள் பிரபஞ்சக் கனவு எனும் ஒன்றை வெவ்வேறு வகைகளிலும் நோக்குகிறார்கள். பல செயல்கள் ஒரே நேரத்தில் அடிக்கடி நடைபெறுகின்றன - காக்கை உட்கார பனம்பழம் விழவும் எனும் கதையைப்போல ஒரே காலத்தவர்கள் கீரதேசத்தவர்களும் பூட்டான் பிரதேசத்தவர்களும். ஆகவே இவ்விரு தேசத்தவர்கள் உள்ளங்களிலும் உனது உள்ளத்திலும் சண்டாளன் எனும் கோட்பாடு உணர்ச்சி பெற்றது எவ்வளவு தவறாக இருந்தபோதிலும் பல

மக்கள் ஒரே அபிப்பிராயம் கொண்டிருப்பது போல. ஒரு சண்டாளன் கிராம எல்லைப் புறத்தில் ஓர் வீட்டைக் கட்டினது வாஸ்தவமே. அதை நீ பாழடைந்த நிலையில் பார்த்தாய். ஆனால் அதே வீட்டை நீயே கட்டியதாக நினைத்தது உனது தவறான கருத்து. நீ பிழை செய்துவிட்டாய். 'நான்' 'நீ' 'அவன்' 'என்னுடையது' 'உன்னுடையது' 'இது' 'அது' என்று வித்தியாசமாகக் கருதுகிற அஞ்ஞானிகள் மாயை, துயரம் மற்றும் வலிகளுக்கு உள்ளாகிறார்கள்; பிரகாசிக்கின்ற சர்வ வியாபகமான ஆத்மாவை மாத்திரம் எங்கணும் நோக்குகின்றவர்களும் பிரபஞ்சம் பிரம்மன் அல்லது நான் என்பது தவிர வேறல்ல என்று சாக்ஷாத்காரம் பெற்றவர்களும் சதா சந்தோஷமாயும் ஸாந்தமாயும் இருப்பார்கள். அவர்கள் ஒருபோதும் பொருள்களைப் பற்றிக் கொள்ளமாட்டார்கள். பொருள் மீது பற்றுதலோ பேராசையோ அவர்களுக்குக் கிடையாது, அஞ்ஞானத்தைப் போக்கியவர்கள். இன்னும் நீ மனப்பிரமையின் ஆதிக்கத்திலே இருக்கிறாய்.

நீ பரிபூரண ஞானத்தைப் பெறவில்லை. மோஹம் என்பது மர்மமானதோர் சக்கரம். இச்சக்கரத்திற்கு மனம் அச்சு. இந்த மனத்தை நீ வைராக்கியம், ஞானத்தால் ஒழிக்க வேண்டும். பிறகு மாயை உனக்குத் தொந்தரவு தராது. இமயமலைக் குகைக்கு செல், தவமும் தியானமும் பத்து வருடங்கள் மேற்கொள்க. அப்பால் நீ பிரம்மனைப் பற்றிப் பூரணமான தகுந்த ஞானத்தைப் பெறுவாய்'' என்று திருவாய் மலர்ந்தருளிய வண்ணம் அந்தர்த்தானமானார் காதியின் பார்வையினின்று. அங்ஙனமே காதி பத்துவருடங்கள் கடும் தவத்தைப் புரிந்தான். ஆசைகள், பந்த பாசங்கள், கொடிய பிரமைகள் அனைத்தும் நீத்து ஆத்மஞானத்தை எய்தினான். அச்சம், வேதனை, பொருள்கள் மீது நாட்டம் இவை நீங்கப் பெற்ற நித்தியானந்த பரமபதத்தை அடைந்தான். விடுதலையுற்ற முனிவராகிய ஜீவன் முக்தரானார்.

## உத்தாலகன் கதை

"ஓ இராமா! உத்தாலக முனிவரைப் போன்று பஞ்ச பூதங்களை வெற்றி கொண்டு உடல் உலகம் ஆகிய எண்ணங்களை ஒழித்து ஆத்ம விசாரணை செய்யத் தொடங்கி, அனைத்தின் ஆதிகாரணத்தில் ஆழமூழ்கி உனது உள்ளத்திலே அதிமேம்பாடான ஒளி உதயமாக விடுக" என்று திருவாய் மலர்ந்தருளினார் மகா வசிஷ்ட மகான். ஸ்ரீஇராமர் "மதிப்பிற்குரிய குருதேவா! உத்தாலக முனிவர் ஐந்து பூதங்களை எப்படி அழித்து அத்வைத நிலையை எய்தினார் என்பதை எனக்குக் கூறுங்கள்" என்று வசிஷ்டரைப் பார்த்துக் கேட்டார். வசிஷ்டர் இப்போது கதையைக் கூறுகிறேன். அது மிகவும் இனிமையானது, உணர்வைத் தூண்டிவிடக் கூடியது. ஆத்ம விசாரணையின் மூலம் சொல்ல முடியாத ஒளிமயமான மகா உத்திஷ்டம் வாய்ந்த பிரம்மபதத்தை எய்தினார். இந்த முனிவர் கவர்ச்சி மிக்க இயற்கைக் காட்சிகள் நிறைந்த கந்தமாதனம் எனும் மலைப் பிரதேசத்தில் வசித்து வந்தார். கடுமையான அனுஷ்டானங்களைக் கையாண்டு வந்தார். சமய நூல்களைப் படித்து அன்றாட கர்மானுஷ்டானங்களை ஒழுங்காகவும் பக்தி சிரத்தையுடனும் ஆற்றிவந்தார். விவேகம் அவரது உள்ளத்தில் உதயமாயிற்று. அவர் தமது உள்ளத்திலே அடியில் வருமாறு தீர்க்காலோசனை புரியலானார்.

"ஜனன மரணங்களிலிருந்து எப்போது நான் விடுதலை பெறுவேன்? எனது சங்கல்பங்களையும் விருப்பு வெறுப்புக் களையும் எப்போது ஒழிப்பேன்? தூய நிர்விகல்ப சமாதியில் மகிழ்ந்து சதா காலமும் எனது சொந்த ஸ்வரூபத்திலே எப்போது இளைப்பாறுவேன்? எப்போது நான் முற்றிலும் ஆசையற்றவனாவேன்? புலன்வழி இன்பப் பொருள் களுக்கான ஆசாபாசங்கள் எப்போது தொலையும்? தாமரையிலை மீதுள்ள பனித்துளி போன்று எப்போது நான் பற்றற்று இருப்பேன்? ஆழ்ந்த தியானத்திலே மூழ்கியிருக்குங் காலை, கானகச் சிறுபறவைகள் எனது தலைமேல் அடர்ந்து வளர்ந்துள்ள குடுமியிலே எப்போது தங்கள் புல் கூட்டைக் கட்டும்?" என்று எண்ணமிடலானார். உத்தாலகர்

பத்மாசனத்தில் அமர்ந்து பரமாத்மா மீது தியானம் புரியத் தொடங்கினார். அவர் தமது மனத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. குரங்குபோல அது ஒரு பொருளிலிருந்து வேறொன்றுக்குத் தாவிக் கொண்டிருந்தது. அவர் தமது மனத்தை நோக்கி, "ஓ, மூடமனமே! அழியக்கூடிய பொருள்களை நாடி ஏன் ஓடுகிறாய்? அவற்றிலிருந்து அணு அளவு சந்தோஷம் கூட நீ அடையமுடியாது. சுயநலக் காரியங்களை ஏன் செய்கிறாய்? இவை கடுமையான வலியை உண்டுபண்ணும். பரமாத்மாவிலே அமைதியாக இளைப்பாறிக்கொள். நித்தியானந்தத்தை நீ அனுபவிப்பாய். ஒலி, ஸ்பரிசம், ஒளி, சுவை, மோப்பம் இவைகளை நாடி ஏன் ஓடுகிறாய்? உன்னைப் பிணைப்பதற்கு வாசனைகள் வலையாகப் பின்னப்பட்டுள்ளன" என்று கூறிக் கொண்டார்.

மேலும் தமது மனத்தைப் பார்த்து அடியில் வருமாறு அவர் கூறலானார் : - "ஓ, அறிவிலாத மனமே! ஒலியினால் மானும், ஸ்பரிசத்தினால் ஆண் யானையும், ஒளியினால் வண்ணாத்திப் பூச்சியும், சுவையின் மூலம் மீனும், மோப்பத்தால் தேனீயும் மாள்வது போன்று நீ சாகாதே. மான், யானை, வண்ணாத்திப்பூச்சி, மீன், தேனீ இவை ஒவ்வொன்றும் ஓர் இந்திரியத்தை திருப்திப்படுத்துவதில் ஈடுபட்டுள்ளது. ஆனால் நீ ஐந்து புலன்களைத் திருப்திப்படுத்துகிற ஆசையினால் அதிகமான அபாயத்தில் உள்ளாக்கப்பட்டிருக்கிறாய். பஞ்சேந்திரியங்கள் ஒன்று கூடி உன்னைத் தொல்லைப்படுத்துகிற சமயத்தில் நித்தியத்துவத்தின் பரமஸாந்தியை நீ எங்ஙனம் அநுபவிக்கப் போகிறாய்? உன்கதி நிச்சயமாக வருந்தத்தக்கது! பட்டுப்பூச்சி தனது உமிழ் நீரிலிருந்து கட்டப்பட்ட புழுக்கூட்டிலே தன்னையே சிக்கவைத்துக் கொள்வது போன்று, நீ ஆசைகளாகிய வலையிலே உன்னையே சிக்கவைத்துக் கொண்டாய். ஆசைகள் அனைத்தினின்று உன்னை விடுவித்துக்கொள். உச்சிமுதல் உள்ளங்கால்வரை எனது உடலை ஒவ்வொரு அணுவாகப் பிரித்தேன். "நான்" என நாம் அழைக்கின்றதை அதில் எங்கேனும் நான் காணமுடியவில்லை. பிரபஞ்சம்

முழுவதையும் பிரம்மன் அல்லது பரமாத்மா மாத்திரமே நிரப்பிக் கொண்டிருக்கிறது. அதற்கு நாம்ரூபம் கிடையாது. அது வர்ணமற்றது, குணமற்றது. அது குட்டையாகவோ, நெட்டையாகவோ, சிறிதாகவோ, பெரிதாகவோ இல்லை. அந்த சர்வ வியாபகமான ஆத்மாவாக நானே இருக்கிறேன். ஓ, மனமே! பேதங்கள், வேற்றுமைகள் யாவும் நீயே சிருஷ்டித்துக்கொண்டாய். வலிகள், துன்பங்கள், கவலைகள், அனைத்துக்கும் நீயே காரணம். விவேகத்தாலும் நான் யார் எனும் விசாரணையாலும் விரைவில் உன்னை ஒழித்து விடுகிறேன். உடலுக்கோ, உள்ளத்துக்கோ, பிராணனுக்கோ அல்லது புலன்களுக்கோ நான் என்பதைப் எப்படிப் பொருத்தமுடியும்? மாமிசமும் எலும்பும் கலந்த வலை பின்னலுக்கோ கண்களுக்கோ, காதுகளுக்கோ, மூக்குக்கோ அல்லது நாக்குக்கோ நான் என்பதைப் எப்படிப் பொருத்தக் கூடும்? நான் என்பது சர்வ வியாபகமான, அமரத்துவமான, பகுக்கவொண்ணாத சுவயம்ஜ்யோதியாக விளங்குகிறது. நீண்ட காலம் உன்னால் ஏமாற்றப்பட்டுள்ளேன். என்னிடமிருந்து ஆத்மாவாகிய ஆபரணத்தைத் திருடிக் கொண்ட கள்வன் நீயே. இனிமேல் உன்னை நம்பவேமாட்டேன். உன்னோடும் உடலோடும் எனக்குச் சம்பந்தம் கிடையாது. உன்னோடும் உடலோடும் இந்திரியங்களோடும் கொண்டுள்ள ஐக்கியம் வெறும் தற்காலிகமானதே. ஓ, மனமே! உன் பூர்வீக வீட்டுக்குத் திரும்புவாயாக. உலகாயத ஆசைகள் செறிந்த காட்டிலே திரியாதே. ஞானம் பெற்று, எங்கிருந்து மீளுதல் கிடையாதோ அந்த நித்தியானந்த நிலையை எட்டிப்பிடி".

"இப்போது ஸாந்தமாயிருக்கிறேன். எனது இதயம் மகிழ்ச்சியால் நிறைந்துள்ளது. மனம், உடல் இந்திரியங்களின் தளைகளினின்று என்னைத் தளர்த்திக் கொண்டேன். எல்லாப் பொருள்களின் ஐக்கியத்தைக் காண்கிறேன்; அச்சமற்றிருக்கிறேன். எல்லாமாயும் எல்லாவற்றிலும் எக்காலங்களிலும் எல்லாவிடங்களிலும் என்னை நான் காண்கிறேன். எனக்கு மனத்தின் சமநிறை, சமதிருஷ்டி

உண்டு. என் ஆத்மாவின் மகிமையை உணருகிறேன். ஆத்மாவில் திருப்தியடைகிறேன். ஆத்மாவிலே நான் ஆனந்த பரவசமடைகிறேன்" என்று கூறிக் கொண்டார். அப்பால் உத்தாலகர் பத்மாசனத்திலே அமர்ந்து பர்திகண் மூடிக்கொண்ட வண்ணம் தியானம் புரியத் தொடங்கினார்.

தகுந்த ஸ்வரத்தோடு உச்ச குரலில் மகத்தான இராகத்திலே மணியடிக்கிறது போல எதிர் ஒலி உண்டாகும் வண்ணம் ஓம் எனும் பிரணவத்தை அவர் உச்சாடனம் புரிந்தார். இப்பிரணவத்திலே மூன்றரை மாத்திரைகள் அடங்கியுள்ளன. ஓம் மந்திரத்தின் முதலாவது அங்கத்தை அகாரத்தைக் குரலெழுப்பிய போது, ரேசகமுறை (அதாவது பிராண மூச்சை வெளியே விடுதல்) நிகழ்ந்தது. அவரது இதய அக்கினி உடல் முற்றிலும் பரவி அதை எரித்தது. பிரணவத்தின் முதல்படி இதுவே. அவரது யோக சாதனையில், ரேசக நிலையை அவர் எந்தவிதமான ஹடயோகத்தின் மூலமும் அடையவில்லை. இரண்டாவது நிலையில் அதாவது பிரணவத்தின் உகாரம். அதாவது கும்பகம் எனும் மூச்சை நிறுத்தல் நிகழ்ந்தது. முன்பு உடலை எரித்த அக்கினி மின்னல் ஒளிபோல் க்ஷணநேரத்தில் வெளியே தள்ளப்படுகிறது. எறிந்து போன வெண்ணிறச் சாம்பல் போல பனிக்கட்டி வெள்ளையாக உடல் மாறிற்று. பிரணவயோகத்தின் இரண்டாவது படி. இதை ஹடயோகத்தின் மூலம் பெறவில்லை. அப்பால் பிரணவத்தின் மூன்றாவது படியிலே மகாரமாகிய பூரகம். அதாவது மூச்சை உள்ளே இழுத்துக் கொள்ளல் நிகழுகிறது. உத்தாலகர் இப்போது பரிபூரண ஓய்வை அனுபவித்தார் - இது மூன்றாவது நிலை. விஷ்ணுமூர்த்தியின் தேகம் போல உத்தாலகருடைய உடல் ஒளிமயமாய் விளங்கலாயிற்று.

பிராணாயாமத்தைப் பயின்று பிராண, அபான இவற்றைக் கட்டுப்படுத்தினார்! உடலிலுள்ள நவத்துவாரங் களையும் மூடிக் கொண்டார் - பிராணன் வெளியே செல்லாதபடி தடுத்துக்கொள்வதற்காக. அப்பால் மிகுந்த சிரமத்தோடு புலன்களை அதற்குப் பொருத்தமான

பொருள்களிலிருந்து பிரித்து இழுத்துக் கொண்டார். கீழ்ப்படுத்தப்பட்ட மனத்தை அவர் தமது இதயக் குகைக்குள் அடக்கிக் கொண்டார். தீவிரமான போராட்டத்தின் மூலம் எண்ணங்களையெல்லாம் முறியடித்தார். அவரது உள்ளத்திலே சந்தேகக் கூட்டங்கள் தாமாக அடிக்கடி தலைதூக்கின. வீரன் ஒருவன் எதிரிகளை ஒழித்துக்கட்டுவது போன்று விவேகமாகிய வாளாயுதத்தால் அவற்றை அழித்தார். அப்பால், பகுத்தறிவின் மூலமாக மனத்தைச் சார்ந்த இருளை அழித்தார். பின், அவர் தமக்கு முன்னால் அழகான ஒளிக்கூட்டத்தைக் கண்டார். இக்கட்டத்தையும் கடந்தார். அப்பால் நித்திரை மயக்கத்திற்குள்ளானார். தூக்க மயக்கத்தை உதறித்தள்ளினார். அப்பால் நீல நிறமான ஆகாசத்தின் விரிந்த வெளியைக் கண்டார். பிறகு மோஹம் அல்லது மருட்சி உண்டானது. இதையும் கூட வெற்றிகரமாக அகற்றினார். இருள், ஒளி, தூக்கம், ஆகாசம், மோஹம் ஆகிய நிலைகளைக் கடந்து இறுதியில் நிர்விகல்ப சமாதி நிலையை அடைந்தார். இதை எந்த பாஷையாலும் வர்ணிக்க இயலாது. காண்பன யாவும் மறைந்தன. அவர் அமிர்தம் நிறைந்த சமுத்திரத்தில் மூழ்கிவிட்டார். மங்காத பிரகாசத்தோடு விளங்குகிற அமரத்துவ பிரம்ம ஆசனத்தை அவர் அடைந்தார். எல்லாவகை வலிகளினின்று நீங்கப் பெற்றார். அவர் நீந்துகிற அன்னம் போன்று ஆனந்த சாகரத்தில் நீந்தலானார்.

ஆறு மாதங்களுக்குப் பிறகு சமாதி கலைந்தார்! சித்தர்கள், தேவர்கள் மற்றும் தேவலோக ஸ்திரீகள் அவரைச் சூழ்ந்து மயக்க முயற்சித்தார்கள். தேவலோகத்தை வழங்கினார் தேவேந்திரன். அது வேண்டாமென்று மறுத்தார். தேவர்கள் கூடி "மரியாதைக்குரிய முனிவரே! நல்லாசிகளோடு நாம் இங்கு காத்திருக்கிறோம். தேவலோக இரதத்தில் ஏறுக. அது தங்களைத் தேவலோகத்திற்கு இட்டுச் செல்லும். ஆனந்தத்திற்கு கடைசி இருப்பிடம் சொர்க்கமே. இங்கே உங்களுடைய ஆசைகள் பரிபூரணமாகத் திருப்தி செய்யப்படும். தேவலோக மாதர்களைப் பாருங்கள். விசிறிகளோடும் பூமாலைகளோடும் உங்களுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். சொர்க்க இன்பத்திற்கு நிகரான இன்பம் கிடையாது. சொர்க்க போகங்களை இந்த கல்பம் இறுதி வரை தாங்கள்

அனுபவிக்கக்கூடும். தங்கள் தவம் சொர்க்க போகங்களைத் துய்ப்பதற்காகவே பயன்படுகிறது" என்று திருவாய் மலர்ந்தருளினார்கள். ஆனால் உத்தாலகர் தேவர்களின் ஆசை மூட்டக்கூடிய மொழிகளாலும் அப்ஸரப் பெண்களின் கபடமான கவர்ச்சிகளாலும் கிஞ்சித்தேனும் அசைக்கப் படவில்லை! தகுந்த மரியாதையோடு உபசரித்தார். அவர்களை அமைதியோடு போகுமாறு வேண்டிக் கொண்டார். உத்தாலகர் தங்கள் தூண்டுதல்களினால் சிறிதேனும் அசைக்கப்படாமல் ஒரே வைராக்கிய நிலையில் இருந்தபடியால் தேவர்களும் அப்ஸர மாதர்களும் மேற்கொண்டு காத்திருப்பதால் பயனில்லை எனக் கருதினார்கள். எனவே அவர்கள் தங்கள் சொர்க்க வாசஸ்தலம் திரும்பினார்கள். நிர்விகல்ப சமாதியில் ஆனந்த நிலையிலே அல்லது பிரம்மனோடு அல்லது பரமாத்மாவோடு கலந்ததிலே முனிவர் க்ஷணநேரமோ அல்லது ஆயிரம் ஆண்டுகளோ இளைப்பாறுவாராகில் அதன் பிறகு மறுபிறப்பை உண்டாக்குகிற சிற்றின்பப் பொருள்களை ஒருபோதும் நாடவேமாட்டார். உத்தாலகர் காடுகளிலும் பூங்காவனங்களிலும் விந்திய பீடபூமிகளிலும் ஹிமயமலைச் சாரல்களிலும் சுதந்திரமாகச் சஞ்சாரம் புரியலானார். அவர் நாட்கள், மாதங்கள், வருடங்களை ஆழ்ந்த சமாதியில் கழித்தார். பரிபூரண ஸாந்த நிலைஎய்தி ஓர் ஜீவன் முக்தர் ஆனார். துயரங்கள், ஐயப்பாடுகள், களங்கங்கள், தொடர்ந்த ஜனனமரண வலி ஆகியவற்றிலிருந்து அவர் விடுதலை பெற்றார். நிர்விகல்ப சமாதியின் நீண்ட அனுபவத்தின் மூலமாக, உத்தாலகர் தமது மனத்தை சுயேச்சையான உணர்விலே (சித் சாமான்ய) ஐக்கியப்படுத்தி சத்வ சாமான்ய எனும் நிலை எய்தினார்.

ஸ்ரீஇராமர் "மதிப்பிற்குரிய குருதேவரே! சத்வ சாமான்ய என்றால் என்ன? இதை தயவுசெய்து விளக்குவீர்களாக" எனக் கேட்க வசிஷ்ட மகிரிஷி கூறலானார். சங்கல்பங்கள் அல்லது எண்ணங்கள் அகற்றப்பட்டால் மனம் சுயேச்சை உணர்வின் தன்மையாக ஆகிறது. இந்த சுயேச்சை உணர்வு (சித்சாமான்ய) தானே சத்வ சாமான்ய நிலையில் உள்ளது. சத்வசாமான்ய

என்பது சர்வவியாபகமான இருப்பு நிலை. அது துரியாதீத நிலை ஆகிறது. கற்பூரம் நெருப்பிலே லயமாகிறது போன்று மனம் தூய உணர்விலே லயமாகிறது. உள்ளே வெளியே உள்ள பொருள்கள் மற்றும் காட்சிகள் அனைத்தும் மறைகின்றன. இதுவே சத்வ சாமான்ய. ஞானி அல்லது ஜீவன் முக்தனின் அதிமேம்பட்ட தர்சனம், சத்வசாமான்ய, ஆமை தன் தலையையும் அங்கங்களையும் உள்ளே இழுத்துக் கொள்வது போல, முனிவர் தம்மையே ஆத்மாவிற்குள் இழுத்துக்கொள்கிறார் - பொருள்கள் தம் முன்னால் தோன்றியபோது, பொருள்களைப் பற்றிய எண்ணங்களே அவருக்கு கிடையாது. அவற்றால் அவர் சிறிதேனும் பாதிக்கப்படவில்லை. இதுவே சத்வ சாமான்ய.

நிர்விகல்ப சமாதியில் விவேகம் வைராக்கியம் மூலமாக இளைப்பாறி சத்வசாமான்ய நிலையின் பரம தரிசனத்தை கிரகிக்கிறவர்கள் ஜீவன் முக்தர்கள் மாத்திரமே. அஞ்ஞானிகள் அல்ல. நீண்டகாலம் கழிந்த பிறகு உத்தாலகர் தமது சாகுந் தன்மை வாய்ந்த தேகத்தை பூமியில் நீக்கி விட்டு விதேகமுக்தராகக் கருதினார்! பத்மாசனத்தில் அமர்ந்தார். பாதி கண்களை மூடிய வண்ணம், நவத்துவாரங்களையும் அடைத்துக் கொண்டு இந்திரியங்களைக் கட்டுப்படுத்தினார். அவர் தமது தலை, கழுத்து, முதுகு ஆகியவற்றை நேராக நிறுத்திக் கொண்டவாறு பிராணனைக் கட்டுப்படுத்தினார். வாயின் உள்புறத்தில் மேல் பாகத்தில், நாக்கின் நுனியைப் பதியவைத்துக் கொள்கிற கேசரி முத்திரையை பயின்றார். இப்போது மூச்சு சுத்தமாக நின்றுவிட்டது. அவரது முகம் தெளிவாயும் பிரசன்னமாயும் விளங்கியது. ஏகத்துவத்தின் பரமதரிசனம் அவருக்குக் கிட்டியது. பிரம்மானந்த சாகரத்திலே அவர் தம்மை அமிழ்த்திக் கொண்டார். அவரது முகம் அன்றலர்ந்த தாமரை போன்று மலர்ந்திருந்தது. ஒளிகளுக்கெல்லாம் மகத்தான ஒளியாய் விளங்குகிற பரம்பொருளோடு அவர் இரண்டறக் கலந்தார். விதேக முக்தி அடைந்தார். இடையறாத ஆத்ம விசாரணை மூலமாக நிர்விகல்ப சமாதியில் புகுந்தவன் பிரம்மனுடைய நித்தியானந்தத்தை அனுபவித்து அமரத்துவத்தை எய்துகிறான்.

## பாசன், விலாசன், வரலாறு

"அஞ்சாத வீரமுள்ள இராமா! தியானத்தைப் பயின்று ஆத்மாவில் அல்லது பரமாத்மாவில் மகிழ்ச்சியடைகிறவர்கள் வலிகள் துன்பங்கள் கவலைகள் மற்றும் வேதனைகள் ஆகியவற்றினின்று விடுதலை பெறுகிறார்கள். ஜீவன் ஒரு காளைமாடு போன்றவன். அவன் சம்ஸாரம் எனும் அத்துவானக் கானகத்தில் குறிக்கோள் இல்லாமல் அலைகிறான். அவன் ஆசைகள் எனும் பலமான கயிறுகளால் கட்டுண்டிருக்கிறான். கர்மா எனும் சவுக்கினால் அடிபடுகிறான். நோய்கள் எனும் தெள்ளுப் பூச்சிகளின் கடியினால் அவஸ்தைப்படுகிறான். சம்ஸார வேதனையின் கனமான சுமையின்கீழ் புலம்பிப் பெருமூச்சு விடுகிறான். முன்னும் பின்னுமாக அசைவதன் காரணமாக உடல் நொறுங்கி அவதிப்படுகிறான். அஞ்ஞானத்தினால் அவன் எண்ணிக்கையற்ற ஜனனங்கள் எனும் ஆழமான பள்ளத்திலே வீழ்ந்துவிட்டான். சாதகன் மனத்தை நாசஞ் செய்து சகஜ ஞானத்தின் மூலமாக தனது அமரத்துவ ஆத்துமாவை நேரடியாக உணரவேண்டும். அப்பால்தான் அவன் அகங்காரத்தையும், சுயநலத்தையும் நசிக்கக்கூடும். முனிவர்கள் அல்லது ஜீவன்முக்தர்களோடு அவன் இடையறாது சத்சங்கம் ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். ஆத்ம தரிசனம் எய்துவதற்கான சாதனங்களைக் கண்டுபிடித்துக் கொள்ளவேண்டும். நன்கு பயிற்சியளிக்கப்பட்ட தூய்மையான உள்ளம் ஆத்மஞானம் எய்துவதற்கு ஓர் நிச்சயமான சாதனம். மனம் ஆத்மாவிலே லயமானால், துரியநிலை அல்லது பிரஹ்மாகார உணர்வைப் பெற்று மகிழ்கிறான். ஒருவனுக்கு இவ்வனுபவம் கைகூடிவிட்டால் பொருள்கள் மீதுள்ள வாஸனைகள் அனைத்தும் சுத்தமாக நாசமாகும். ஆத்மவிசாரம் ஒழுங்கான சிரத்தையுடன் துவக்கப்பட்டாலும் மனம் படிப்படியாக உயர்நிலை தூய்மையைப் பெறும். ஒருவன் தனது உயர்தரமான உள்ளத்தின் மூலம் கீழ்த்தர உள்ளத்தை நிர்மூலமாக்கி பிரம்மஞானம் பெறுதல் வேண்டும். அப்பால்தான், இந்த பயங்கரமான சம்ஸார வலிகள்

அனைத்தும் முடிவு பெறும். மனம் நிர்மூலமாக்கப்பட்டால், அடித்தளமாகிய அஹங்காரம் அழிக்கப்பட்டால், ஆத்மஜோதி உதயமாகி சாகாத ஆத்மானந்தம் எழும்பும். இந்த அநுபவத்தை விளக்குவதற்கு, ஓ, பராக்கிரமமுள்ள இராமா, பாசன், விலாசன் எனும் இரண்டு சகோதரர்களிடையே நடந்த சம்பாஷணை அடங்கிய பழைய கதை ஒன்று சொல்லுகிறேன்" என்று தொடங்கிய வசிஷ்ட மகிரிஷி கதை கூறலானார்.

சாஹ்யமலை மீது அமைந்த அத்திரிமகரிஷியின் ஆஸ்ரமத்தில் பாசன், விலாசன் எனும் இரு சிரேஷ்டர்கள் வாசம் புரிந்தார்கள். அவர்கள் அத்திரீ மகரிஷியின் குமாரர்கள். அவர்கள் மலரும் மணமும் போல .அன்னியோன்னிய அன்பினால் இணைந்து வந்தார்கள். அவர்களுக்கு ஒரே ஆத்மாவும் ஒரே மனமும் இரு உடல்களில் இருந்தன. ஒரே அடிமரத்திலிருந்து பிரிந்த கிளைகள் போல் அவ்வளவு ஐக்கியமாய் ஒருவரை ஒருவர் நேசித்தார்கள். பெற்றோர்கள் வயதானவர்கள், காலமானார்கள். ஈமக்கிரியை களைப் புரிந்தார்கள். பெற்றோர்களின் மரணத்தினால் மிகுந்த துயரமும் கவலையும் அடைந்தார்கள்; அகோரமாய் அழுதார்கள் அவர்கள் வெவ்வேறு திசைகளிலே பிரிந்து சென்றார்கள். ஏகாந்தமான கானகங்களில் ஏகாங்கிகளாக கடுந்தவம் புரிந்தார்கள். ஆசைகள் அனைத்தையும் ஒழித்துக் கட்டினார்கள். உடல் நலிவுற்றது. உண்மைஞானம் இன்னமும் பெறமுடியவில்லை. அப்பால் இருவரும் சந்தித்தார்கள்.

"பாசா! பிரேமைச் சகோதரா! உன்னை நான் வரவேற்கிறேன். எனது இதயத்தின் வெகு ஆழமான குகைக்குள்ளே நீ ஓர் ஆசனம் வைத்துள்ளாய். நீ எனது உயிரேதான் சகோதரா! என்னை விட்டுப் பிரிந்த பிறகு இவ்வளவு காலத்தையும் எங்கே எப்படி கழித்தாய் என்பதை எனக்குச் சொல். உனக்கு ஸாந்தி கிடைத்ததா? நீ ஆத்ம ஞானத்தைப் பெற்றாயா? நீ சந்தோஷமாய் இருக்கிறாயா? உள்ளத்தின் வேதனைகளிலிருந்தும் நீ விடுபட்டு

சுதந்திரமாயிருக்கிறாயா? எல்லையற்ற இறைவனின் பேரானந்தத்தையும் சாசுவதமான ஆண்டவனின் இன்பத்தையும் நீ அநுபவித்திருக்கிறாயா" என்று கேட்டார்.

பாசன் பேசத் தொடங்கி, "இன்று உன்னைச் சந்திக்கிறதிலே மிக்க அதிர்ஷ்டசாலியானேன். பலமாக ஆழமாய் பதிந்துள்ள வேர்களுடன் கூடிய ஆசைகளாகிய விதை அழியாமலும் மனம் நசியாமலும் உள்ளளவு நமக்கு ஸாந்தி கிடைக்குமென எங்ஙனம் எதிர்பார்க்கக் கூடும்? ஆத்மதரிசனம் நாம் பெறாத அளவும் ஆத்மஞானம் அடையாத அளவும் சாஸ்வதமான பேரின்பத்தை அநுபவிக்க எங்ஙனம் நாம் எதிர்பார்க்கக் கூடும்? பயனற்ற உலகாயத அலுவல்களிலும், சுயநலப் பிரயத்தனங்களிலும் வீணான பேச்சுக்களிலும் நம் வாழ்நாட்கள் எங்ஙனம் கழிந்து போகின்றன என்று பார். உடல் வாடிய விருக்ஷம் போல் தளர்வெய்துகிறது. வயோதிக வயது நரைத்த மயிரோடும் சுருங்கிய தோலுடனும் நம்மைப் பின் தொடருகின்றது. கொந்தளிக்கின்ற மனவெழுச்சிகள் அழிக்கப்படாமலும் நம்பிக்கை பயம் ஆகியவை நிர்மூலமாக்கப்படாமலும் இருக்கிற பரியந்தம் எங்ஙனம் மேலான ஆனந்தத்தை அனுபவிக்கக்கூடும்? பல்வேறு ஆசைகளாகிய களைகளை தூய விவேகம் அல்லது பகுத்தறிவு எனும் சுளுகுப்பாறையைக் கொண்டு அப்புறப்படுத்தாமலிருக்கிறவரை பிரம்மனுடைய கலப்பற்ற ஆனந்தத்தை எங்ஙனம் நாம் அநுபவிக்கக்கூடும்? மரணம் எனும் எலி வாழ்வு எனும் முடிச்சை வேறோடு கடித்துக்கொண்டிருப்பதில் சதாகாலமும் சுறுசுறுப்பாயிருக்கிறது. உலகாயத வாழ்வு என்ற நீர் அருவி ஆசாபாசங்களாகிய மண்ணோடும் கவலைகளும் ஆத்திரங்களுமாகிய நுரையுடனும் தொடர்ந்த மறு ஜனனங்கள் எனும் நீர்ச்சுழிகளுடனும் ஓடிக்கொண்டே இருக்கிறது. இந்திரியங்களோடு மனம் நாட்டியமாடுகிறது. ஒரு செக்கண்டு நேரமேனும் அதற்கு ஓய்வு கிடையாது. அஞ்ஞானமாகிய வியாதியைக் குணமாக்கும் விசேஷமான நிச்சய மருந்து பிரம்ம ஞானமே. மறுபிறப்புக்கள் எனும் கொடிய நோய்க்கு அதுவே

மேலான மருந்து. பிரம்ம ஞானத்தைப் பெறாதவர்களும் இந்திரிய சுகங்களிலே நம் வாழ்நாட்களை கழிப்பவர்களும் ஜனன மரணமென்னும் சக்கரத்தில் மீண்டும் மீண்டும் சிக்கிக் கொள்வார்கள். மரங்களிலுள்ள உலர்ந்த இலைகள் காற்றினால் சிதற அடிக்கப்படுவதுபோல இவர்கள் மரணமாகிய நீரோட்டத்தால் அடித்துச் செல்லப்படுவார்கள்" என்று கூறி முடித்தான்.

பாசனுடைய ஆத்துமாவைத் தூண்டுகிற சம்பாஷணையைக் கேட்டதும் விலாசன் மிகுந்த சந்தோஷமடைந்தான். அதன் பிறகு இரு சகோதரர்களும் பிரம்மஞானம் பெறுவதிலே சிரத்தையோடு தங்களை ஈடுபடுத்திக் கொள்ளலானார்கள். அவர்கள் பரமாத்மா மீது தீவிரமான தியானத்தை இடைவிடாமல் செலுத்தி, ஆத்மசாக்ஷாத்காரம் அடைந்து ஜீவிக்கிற காலத்திலேயே விடுதலை பெற்ற முனிவர்கள் எனும் ஜீவன் முக்தர்களாக ஆனார்கள். வலிகள், துன்பங்கள், கஷ்டங்கள் மற்றும் மனப்பிரமைகள் ஆகியவை உலகாயதமும் அஞ்ஞானமும் நிறைந்த சேற்றிலே அமிழ்ந்து கிடக்கின்றவர்களை மாத்திரமே பாதிக்கும். ஆத்ம தரிசனம் அடைந்தவர்கள் சதா காலமும் எல்லையற்ற பிரம்மனுடைய நித்தியானந்தத்தை அனுபவிக்கிறார்கள்.

## வீதஹவ்யன் கதை

"ஓ, வீரமுள்ள இராமா! பயங்கரமான மறு பிறப்பை ஆத்மஞானம் மாத்திரம் அழிக்கும். ஆசைகள் எனும் கயிற்றால் கட்டப்பட்ட வலி கொடுக்கிற மனத்தை இந்த ஞானமே நிர்மூலமாக்கும். மோகக் கவர்ச்சிகளிலே பாதிக்கப்படாத சுத்தமான மனம் படைத்தவர் பல உலகாயத அலுவல்கள் செய்தாலும் கூட ஒருபோதும் பந்தப்படமாட்டான்; ஆனால் மோகக் கவர்ச்சியால் பாதிக்கப்பட்ட அசுத்தமான மனம் படைத்தவன் பல்வேறு நியம நிஷ்டைகள் புரிந்தாலும் எப்போதும் பந்தப்பட்டிருப்பான். யார் ஒருவன் ஆசையோ அல்லது மோகக் கவர்ச்சியோ இல்லாமல் கர்மங்களைத் தூய உள்ளத்துடன் புரிகிறானோ, அவன் ஒரு போதும் கர்த்தாத் தன்மை, பலன்களை எதிர்பார்த்தல், நடிக்கிறவன், கவர்ச்சியின்மையின் மூலமாக அநுபவிக்கிறவன் ஆகிய கருத்தையே கொள்ளமாட்டான்" என்று வசிஷ்டர் ஆரம்பித்தார். "மதிப்பிற்குரிய குருதேவ! கவர்ச்சி என்றால் என்ன? கவர்ச்சியின்மை என்றால் என்ன? ஒருவனை பந்தத்திற்கு இட்டுச் செல்லும் அக்கவர்ச்சி என்பது என்ன? விடுதலைக்கு ஏதுவாக இருக்கும் அக்கவர்ச்சியின்மை என்பது என்ன? இப்பந்தத்தை நான் எங்ஙனம் அழிப்பேன்? மேற்குறிக்கப்பட்ட விஷயங்களைப் பற்றி விளக்குங்கள்" என்றார் ஸ்ரீ இராமர். மகரிஷி வசிஷ்டர் பதில் கூறலானார்.

இவ்வுடல் சாஸ்வதமென்று நம்புகிறவனும், உடலுக்கும் உடலில் உறையும் நித்தியமாயுள்ள அந்தர்யாமி அல்லது உள்ளிருப்பவனுக்கும் உள்ள பேதத்தைப் பகுத்தறியத் தவறுகின்றவனும், எப்போதும் உடலை மாத்திரமே சிந்திக்கிறவனும் எவனோ அவன் மோகக் கவர்ச்சிக்கு ஓர் அடிமையாகிறான். மோகக் கவர்ச்சியால் கட்டப்படுகிறான். இதுதான் மோகக் கவர்ச்சி. சந்தேகமில்லாமல் இது பந்தத்திற்கு இட்டுச் செல்லும். ஒவ்வொன்றும் பிரம்மன் அல்லது ஆத்மா மாத்திரமே என்கிறதும் இப்பிரபஞ்சத்தின் மீது ஒருவன் நேசிக்கவோ விரோதிக்கவோ எதுவுமில்லை என்கிறதுமான நம்பிக்கையே கவர்ச்சியின்மை ஆகும். இந்த கவர்ச்சியின்மை

மோக்ஷத்திற்கு அல்லது இறுதியான விடுதலைக்கு வழிகாட்டும். கவர்ச்சியின்மை ஜீவன் முக்தர்களுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றது. கவர்ச்சியின்மை நிலவும்போது, உலக இன்பங்களை உள்ளம் ஒழித்துவிடுகிறது; அகங்காரம் மறைய, எதன்மீதும் உள்ள கவர்ச்சிமடிகின்றது. கவர்ச்சி யின்மை என்கிற நிலை மோக்ஷத்திற்கு இட்டுச்செல்லுகிறது. கவர்ச்சியின்மையை வகிக்கின்றவர்கள் கர்மாக்களின் பலன்களைப் பரித்தியாகம் பண்ணுகிறார்கள். அவர்கள் கர்மா அல்லது அகர்மாவை நாடுவதில்லை. கவர்ச்சி ஒருவனை மறுபிறப்புக்களிலே சிக்கவைக்கிறது. கவர்ச்சி இருவகைப்படும். பந்தியா (கட்டுகின்ற) மற்றும் அபந்தியா (கட்டாமலிருக்கின்ற). முன்னது அஞ்ஞானிக்குச் சொந்தம்; பின்னது ஆத்ம தரிசனம் எய்தியுள்ளவர்களுக்குரிய ஆபரணமாகும். பொருள்களைப் பற்றிய மோகக் கவர்ச்சியின் மூலம் முன்னது மறுபிறப்புக்களை விளைவிக்கிறது.

பின்னது ஆத்மஞானத்தையும் விவேகத்தையும் உற்பத்தி செய்கிறது. மகாவிஷ்ணுவும் மற்றும் சித்தர் குழாங்களும் சுபந்நியாக் கவர்ச்சியின் மூலம் பல்வேறு கர்மாக்களைப் புரிவதாலே இப்பூமியை இரக்ஷிக்கின்றார்கள்.

ஒரு ஜீவன் முக்தன் உலக சுபிட்சத்தின் பொருட்டு நானாவிதமான கர்மங்களைப் புரிந்தாலும் அக்கர்மங்களால் பந்திக்கப்படுவதில்லை. அவன் பொருள்களோடு தொடர்பு கொண்டாலும் உபேக்ஷயாயிருக்கிறான். பொருள் களிடத்திலே அவனுக்கு கவர்ச்சி கிடையாது. அவன் உள்ளம் சதாகாலமும் பரமாத்மாவின் மீதே பதிந்திருக்கிறது. அவன் இவ்வுலகை ஓர் உண்மையின்மை எனக் கருதுகிறான். அவன் தற்காலத்திய உடைமையை நம்பவோ எதிர்காலத்தில் வரும் பொருளை நினைத்து வாழ்வதோ கிடையாது. இறந்த கால ஞாபகச்சம்பவ இன்பத்திலே வாழ்கிறதுமில்லை. உறங்குகையில் அவன் தனது பரஞ்ஜோதி தரிசனத்திலே ஜாக்கிரதாவஸ்தையில் நிலைத்திருக்கிறான். நடந்து செல்லுகையில், நிர்விகல்ப சமாதியின் தூங்காமல் தூங்கும் ஆழ்ந்த தூக்க நிலையில் அமிழ்ந்திருக்கிறான். கர்மங்களைப்

புரிகிறான்; ஆனால் ஏதும் புரியாதவன் போல் தங்கியிருக்கிறான். தன்னை கர்த்தா என நம்புகிற பிழை இல்லாமல் அவன் கர்மங்களைப் புரிகிறான். எவ்விஷயத்திலும் அவன் சந்தோஷப்படுவதோ, சஞ்சலப்படுவதோ கிடையாது. சிறுவர்களோடு ஒரு சிறுவனாகவும் வயோதிகர்களோடு அனுபவசாலியாகவும் அவன் நடந்து கொள்கிறான். யுவர்களின் சமுதாயத்திலே அவன் யௌவனம் நிறைந்தவனாகவும் ஞானிகளின் சங்கத்திலே கம்பீரமுள்ளவனாகவும் விளங்குகிறான். பிறர் சந்தோஷத்திலே அவன் மகிழ்கிறான். துக்கத்தில் ஆழ்ந்துள்ளவர்களோடு இரக்கமுள்ளவனாகிறான். தொட்டிலில் தூங்கும் குழந்தை தனது மனத்தின் காரணம் எதுவுமில்லாமல் தன் அங்கங்களைக் கொண்டு ஸ்வேச்சாபூர்வமாய் ஆடுகிறது போல, அவன் மனத்தின் பிரயோகமில்லாமல் உடலின் அங்கங்களை வெறுமனே இயக்குவதால் வெளிப்புறக் கர்மங்களைப் புரிகிறான். உட்புற உள்ளத்தின் உத்தேசம் இல்லாமல் வெளிப்புற உடலால் ஆற்றப்படும் ஓர் செயல் செயலாற்றுகிறவனின் செயல் அல்ல எனப் பாவிக்கப்படுகிறது. அது அவன்மீது நல்லது தீயதுவாகிய விளைவைச் சுமத்துகிறதில்லை. கவலையினின்று அவன் ஒடுங்குவதில்லை. நல்லதிர்ஷ்டத்தை அவன் வாழ்த்துகிறதுமில்லை. அவன் தன் வெற்றியின்மீது மனம் பூரிப்பதில்லை, தோல்வியிலே கவலைப்படுவதுமில்லை. இந்திரியப் பொருள்கள் மீது மனம் கவனம் நாட்ட அனுமதிக்கப் படாவிட்டால், அது படிப்படியாக நாசமடையும். இதற்கு ஜாக்கிரதையில் சுஷுப்தி (விழிப்பு நிலையில்) தூக்கம் எனப்படும். நதி கடலோடு கலக்கிறதுபோல, ஜீவாத்மா தானே பரமாத்மாவோடு லயமாகிறது. பார்க்கப்படுகிறதும் பார்வையும் பார்க்கிறவனிடம் லயமாகிவிட்டால் பரமாத்மாவின் ஆனந்தம் அநுபவிக்கப்படுகிறது. இது துரிய நிலை.

ஆசைகள் அனைத்தம் நிர்மூலமாக்கப்பட்டால் விரிவான மனத்தின் நாசம் மாத்திரமே மோக்ஷம். மனதையும் அதன்

எண்ணங்களையும் வேரோடு அழிப்பாயாக. ஒருவனுக்கு ஆத்ம தரிசனம் கிடைத்தால், அப்பால் பந்தம் எங்கிருக்கிறது? மன அமைதியும், ஆத்மஞானமும் எய்தியுள்ள ஜீவன் முக்தர்கள் ஆசைகளினின்று முற்றிலும் விடுபட்டவர்கள். பற்றின்மை என்பது ஓர் கோடாலி. இச் சம்ஸாரக் காட்டை இதைக் கொண்டு வெட்டித்தள்ளலாம். திருப்தியும் அமைதியும் நிறைந்த விருக்ஷத்திலே பற்றின்மை என்பது ஓர் பூங்கொத்து. பற்றில்லாதவன் இதயத்துப் பலவீனங்கள் அனைத்தினின்றும் விடுபட்டவர். முற்றிலும் பற்றின்மை உற்ற மனிதனுக்கு பிரபஞ்சம் முழுவதும் ஓர் வைக்கோல் துரும்பு தவிர வேறல்ல. தம் ஸ்வரூபத்தில் அல்லது ஆத்மாவில் இளைப்பாறு கிறவர்களுக்கு தங்கள் உடல்களைப்பற்றிய உணர்ச்சியே இருக்காது. இவ்வுலகத்தின் நானாவிதமான தூண்டுதல் களிடையிலே இருந்தாலும் கூட அவர்கள் தங்கள் இலட்சியத்தை இழக்கமாட்டார்கள். ஓர் மாது தன் வீட்டு அலுவல்களைச் செய்து கொண்டிருந்தாலும் வெகு தொலைவிலுள்ள தன் சோரநாயகன் மீது அவள் மனம் சதா ஏகாக்ரம் பட்டிருப்பதுபோல, அவர்கள் மக்கள் சமுதாய நலனுக்காக உலகில் பாடுபட்டாலும் கூட அவர்களுடைய மனம் பிரம்மனிலே சதா பதிந்திருக்கும். ஆசைகள் அனைத்தும் அழிந்தால் உள்ளத்தில் ஏற்படும் அமைதி மோக்ஷத்திற்கு வழிகாட்டும். பற்றற்ற மக்கள் மோக்ஷத்தினால் பயன் அடைவார்கள். பற்றற்ற மனிதர்கள் சந்தோஷமான ஜீவன் முக்தர்கள். ஆசைகளில் அழுந்தியுள்ள மக்கள் பந்தப்பட்டிருக்கிறார்கள். இவ்விரு வகுப்பினரைக் காட்டிலும் மகா மேன்மை படைத்தவர்கள் விதேகமுக்தர்கள்.

அத்தகைய ஜீவன் முக்தர்கள் எதிர்காலப் பொருள்களை விரும்பமாட்டார்கள்; இறந்த கால பொருள்களைப் பற்றிச் சிந்திக்கமாட்டார்கள். உலக ஐக்கியத்திற்காக அவர்கள் சதா செயலாற்றுவார்கள். இயற்கையில் எந்தவிதமான வியப்பும் அச்சமும் தரவல்ல நிகழ்ச்சிகளால் பாதிக்கப்படமாட்டார்கள். கதிரவன் குளிர்ந்து போனாலும், அல்லது சந்திரன் அக்கினி கக்கினாலும் அல்லது நெருப்பு தன் ஜ்வாலையை

கீழ்முகமாகச் செலுத்தி எரிந்தாலும் அல்லது நதி மேல் நோக்காய் பிரவாகம் போனாலும் அவர்கள் ஒருபோதும் குழப்பமடைவதில்லை. சமுத்திரத்திலே எண்ணிக்கை கடந்த அலைகள் தண்ணீர் மேல் ஏற்படும் ஏற்றத்தாழ்வினால் எழுவது போன்று, நானாவிதப் பொருள்களோடு கூடிய உலகமானது உள்ளத்தின் சஞ்சலப் போக்கின் பிரகாரமே தோன்றுகிறது.

"மதிப்பிற்குரிய மகா குருதேவரே! உள்ளத்தின் சஞ்சலப் போக்குக்குக் காரணம் என்ன? அதை அடக்குவது எங்ஙனம்? இவ்விஷயங்களைக் குறித்து எனக்கு தயவுசெய்து விளக்குங்கள்" என்று கேட்கலானார் ஸ்ரீஇராமர். வசிஷ்டர் உபதேசிக்கலானார். சஞ்சலம் உள்ளத்தோடு சேர்ந்ததே தவிர வேறல்ல - எண்ணெய் எள்ளிலிருப்பதுபோல, பனிக் கட்டியிலே வெண்மை போல, மணம் மலர்களிலிருப்பது போல அல்லது ஜ்வாலை அக்கினியிலிருப்பதுபோல, இந்த சஞ்சலத்தை ஒழிப்பதற்கு இரண்டு நெறிகள் உண்டு; யோக நெறி, ஞானநெறி. உள்ளத்தின் விகாரங்களை அடக்குவது தான் யோகம். அது உள்ளத்தை ஒரே ஒரு பொருள் மீது திரும்பச் செய்கிறது. ஞானம் என்பது ஆத்ம சோதனை மற்றும் எல்லாப் பொருள்களைப் பற்றியும் பூரணமான ஆராய்ச்சி. உள்ளம் என்பது பிராணனின் சஞ்சலமே தவிர வேறல்ல. பிராணன் அடக்கப்பட்டால், உள்ளம் கூட அடக்கப்பட்டு விடும். உள்ளம் அடக்கப்பட்டு அதன் சஞ்சலம் தடுக்கப் பட்டால் வலிகள் அனைத்தும் தொலைந்துபோகும். மறுபிறப்புக்கள் எல்லாம் முடிவு பெறும். ஸ்ரீராமர் "பிராணனை அடக்குவது எப்படி? அதன் இயக்கத்தை நிறுத்துவது எங்ஙனம்?" என்று வினவ, வசிஷ்டர் உபதேசிக்கலானார். சுவாசத்தைக் கட்டுப்படுத்தல் என்கிற பிராணாயாமப் பயிற்சியை ஒழுங்காகவும் ஒரே மாதிரியாகவும் செய்தால் பிராண இயக்கம் நிறுத்தக் கூடும். யோகமாணவன் யோகசாஸ்திர ஞானத்தைப் பெற்றிருக்க வேண்டும். அவனுக்கு வைராக்கியம் இருத்தல் வேண்டும். ஆசைகளினின்று விடுபட்டவனாய் இருக்கவேண்டும். குரு உபதேசம் பெற வேண்டும். யோகிகளோடும்

மஹான்களோடும் அவன் பேரிணக்கமும் நட்பும் வைத்துக்கொள்ள வேண்டும். அப்பால் தான் பிராணனைக் கட்டுப்படுத்துவதிலே அவனுக்கு வெற்றி கிட்டும். பிராணனின் சக்தி உடலிலுள்ள நாடிகளிலும் நுரை ஈரல்களிலும், நாளங்களிலும் தசை நார்களிலும் சுழன்று பரவுகிறது. இந்த பிராணனின் மாறுதல் தான் உடலிலுள்ள அந்தக் கரணங்களுக்கெல்லாம் உத்வேகமும் தூண்டுதலும் அளிக்கிறது. இந்த பிரதான மூச்சு இயக்கத்தால் எழும் அதிர்வு ஆசைகளையும் உணர்ச்சிகளையும் இதயத்தில் தூண்டி விடுகிறது. ஜீவாதாரமான பிராணனின் அதிர்வு இருதயக் குகையில் நாடித் துடிப்பையும் உள்ளத்திலே அறிவையும் உண்டாக்குகின்றது. பிராணதார மூச்சு அடக்கப்பெற்றால் உள்ளம் அமைதியாகிவிடும். உள்ளத்தின் செயல் நிறுத்தப் பட்டால் உலகம் இருக்கிறதென்ற அறிவு அழிந்துபடுகிறது - ஆழ்ந்த தூக்கத்தில் உள்ளம் செயல் அற்றிருக்கும்போது உலகத்தைப் பற்றி அறிவு இல்லாமற்போவது போல.

ஒரே பொருள் மீது ஆற்றுகிற தியானம் கூட மூச்சு அடக்கத்தை உண்டுபண்ணுகிறது. பூரகம் (மூச்சை உள்ளே இழுத்தல்) ரேசகம் (மூச்சை வெளியே விடுதல்) மற்றும் தியானம் இவற்றை இடைவிடாமல் பயிலுவதால் சஞ்சலிக்கின்ற பிராணனை நிறுத்தச் செய்யும். ஓம் என்ற ஓர் அசைச்சொல்லை உச்சரித்தால், ஓம் எனும் சொல் ஒலிக்கப்படும்போது அதன் முடிவில் ஏற்படுகிறது. ஒலியின் உண்மையான சுபாவத்தைப் பற்றித் தியானித்தல், ஓம் எனும் பிரணவத்தின் முக்கியத்துவத்தைச் சிந்தித்தல் இவை பிராண அடக்கத்தைத் தூண்டும். சுவாசித்த மூச்சை உள்ளே நிறுத்துதலுக்குக் கும்பகம் என்று பெயர். கும்பகப் பயிற்சிகூட பிராணனைத் தடுக்கும். கேசரி முத்திரைப் பயிற்சி பிராணனைக் கட்டுப்படுத்தும். நாக்கு நுனியை அன்னாக்குத் தொளைவரை மடித்து அதை மூடிக் கொள்க. சுவாசம் தொண்டைவழி போகும். பிராணனை நிறுத்தக்கூடும். பிராணாதார மூச்சு மூக்கு நுனியிலிருந்து பன்னிரண்டு அங்குல இடத்திற்குள் சஞ்சரிக்கின்றது. இந்த இடத்தை

நுட்பமாகக் கவனிக்கவும். இவ்வழியால் கூட பிராணன் அடக்கப்படும். கண்களை இரு புருவங்களின் இடையில் திருப்புக. இது பிராண அசைவை நிறுத்தும். இப்பயிற்சிகளின் மூலமாக பிராணனை அடக்கக்கூடும். அப்பால் புனர்ஜன்மங் களிலிருந்து ஒருவனுக்கு படிப்படியாக விடுதலை கிடைக்கும். இத்தகைய செயல்முறைப் பயிற்சியின் மூலம் மனிதன் துக்கத்தினின்று விடுதலை எய்தி தெய்வீகப் பேரானந்தத் தாலே நிரம்பப் பெற்று பரமாத்மாவில் லயமாகிப் பரவசமடைகிறான். பிராணன் அடக்கப்பட்டால், உள்ளம் மிகுந்த அமைதி கொள்கிறது. உள்ளத்திற்கும் பிராணனுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. உள்ளம் அமைதி பெற்று அதன் மூலத்திலே இலயமாகிவிட்டால், பிரம்மன் மாத்திரமே மிஞ்சுகிறது. எவனுடைய மனம் எல்லா ஆசைகளிலிருந்தும் பற்றுக்களிலிருந்தும் விடுபட்டதோ, எவன் நித்தியமான இளைப்பாறுதலை பரமாத்மாவிலே கணடு கொண்டானோ அவன் மனிதர்களிலே மகத்தானவன்.

“மதிப்பிற்குரிய குருமகான்! மனதையும் பிராணனையும் அடக்குதலுக்கு இட்டுச்செல்லும் யோக மார்க்கத்தைப் பற்றி எனக்குத் திருவாய் மலர்ந்தருளினீர்கள். இப்போது பூரணமான பிரம்மஞானத்தின் மூலம் மனம் எந்த வகையில் கட்டுப்பாட்டுக்குள் கொணரப்படும் என்பதைப் பற்றித் திருவாய்மலர்ந்தருளுங்கள்” என ஸ்ரீ ராமர் வினவ, வசிஷ்ட மகரிஷி மேலும் உபதேசிக்கலானார். எங்கணும் தொடக்கம், மத்தி, அல்லது இறுதி இல்லாமல் பிரம்மன் மாத்திரமே வியாபித்திருக்கிறார் என்கிற அசையாத நம்பிக்கையே நிஜமான பூரண ஞானம். உலகம் முழுமையும் பிரமன் வியாபகமாயிருக்கிறார். உலகம் ஆத்மாவின் இயல்புக்குத் தகுந்தாற்போல் இருக்கிறது. நானாவிதமான பொருள்களின் சக்தி ஆத்மாவாயிருக்கிறது எனும் உறுதியான கொள்கை ஆத்மாவைத் தரிசித்தல் ஆகும். நமது மறுபிறப்புக்கும் வலிக்கும் காரணம் அஞ்ஞானம். பார்வைக் குறைவினால் கயிற்றில் பாம்பைக் காட்டுகிறது - சரியாகப் பார்க்கும் போது தவறு நீக்கப்படுகிறது. இதுபோல, பூரணஞானம் நம்மை

இவற்றிலிருந்து விடுவிக்கிறது. மனிதனிலே பிரம்மஞானம் பூரணத்தை உண்டுபண்ணுகிறது. சர்வம் பிரம்மமயமே என்பது தத்துவஞானம். இவ்வுலகம் பிரம்மன் மாத்திரமே ஆகும் எனும் திடமான அறிவும் காட்சியும் பூர்ணமே. இவ்வுலகம் பிரம்மன் மாத்திரமாய் இருக்கிறபோது இருப்பு அல்லது இருக்காமை, உண்மை வஸ்து அல்லது உண்மையல்லாதது, பந்தம் அல்லது மோக்ஷம் இவற்றிற்கு இடம் ஏது? எங்கணும் ஒரே ஆத்மாவைத் தரிசியுங்கள். நானாவிதத்திலே ஏகத்துவத்தை அறியுங்கள். ஆத்மாவைத் தரிசியுங்கள். அப்பால், மரங்கள், மலைகள், நதிகள், குடங்கள், துணிகள் இவற்றின் இடையிலுள்ள பேதங்கள் அனைத்தும் காணாமற் போகும். அவற்றோடு எல்லாச் சங்கல்பங்களும் மறையும். எல்லாவற்றுள் எல்லாமாய் பிரம்மனை விரிவான காட்சியாகக் கொள்வதால் ஓர் துண்டு கட்டை அல்லது கல்லுக்கும் உங்களுடைய துணிக்கும் நீங்கள் எவ்விதமான வித்தியாசத்தையும் காணமுடியாது. அப்படியானால், வீணான இந்த பேதங்களை உண்டுபண்ண ஏன் பிரியப்படுகிறீர்கள்? பிரம்மன் மாத்திரமே முதலிலிருந்து முடிவு பரியந்தம் இருக்கிற அழியாத வஸ்து என்பதைத் தெரிந்துகொள்ளுங்கள். இந்த பிரம்மன் உங்கள் ஆத்மா என்பதைத் தெரிந்து கொள்க. சிதாகாசம் அல்லது பிரதிபலிக்கப்பட்ட உணர்வு அல்லது ஜீவாத்மா மற்றும் எல்லாப் பொருள்களும் இறுதியில் தாமாகவே மூலத்தில் அல்லது பிரம்மனிலே இலயமாகின்றன.

"தாமரை மலர் போன்ற கண்ணுடைய இராமா! ஆனந்த நிறைவான பிரம்மனிலே நீ இளைப்பாறுவாயாக. சமுத்திரத்திலுள்ள நீர்நுரை, நீர்க்குமிழிகள், சிறு அலைகள், பெரிய அலைகள் போலத் தோன்றுவது போன்று, பிரம்மன் மாத்திரமே மனத்தின் மூலமாய் நாமரூபங்களாகத் தோன்றுகின்றது" என்று தொடங்கி மேலும் உபதேசிக்கலானார், மகான் வசிஷ்டர். சத்தியமார்க்கத்தைப் பின்பற்றுகிறவன், தினந்தோறும் ஆத்மவிசாரம் புரிகிறவன் எவனோ அவன் உலகாயத இன்பங்கள் எனும் பொறியிலே

சிக்கி இரையாக ஒருபோதும் தூண்டப்படமாட்டான். அவன் உலகாயதக் கவர்ச்சிகளாலோ அல்லது சிற்றின்ப சுகங்களாலோ ஒருபோதும் பாதிக்கப்படமாட்டான். காற்றுக்கு எதிராக நிற்கிற கற்பாறை போன்று அசையாமல் இருப்பான். மிகுந்த சோதனைகளுக்கு ஆளாகும் சந்தர்ப்பங்களிலும் பிரதிகூலமான நிலைகளிலும்கூட கிஞ்சித்தேனும் குழப்பமடையாமலிருக்கும் பக்தர்கள் மோக்ஷம் எய்திய புருஷர்கள். இவர்கள் தான் நித்திய ஸாந்தி நிலவுகிற சாம்ராஜ்யத்தில் நுழைவதற்கு இலாயக்கானவர்கள். இவர்கள் மாத்திரமே ஆத்ம சாக்ஷாத்காரம் பெறுவார்கள். மோக்ஷத்திற்கு இட்டுச் செல்லும் மற்றொரு மார்க்கத்தைபற்றி இப்போது உனக்குச் சொல்லுகிறேன். பராக்கிரமசாலியான இராமா! ஆழ்ந்த கவனத்துடன் இதைக் கேட்பாயாக" என்றார்.

முன்னொரு காலத்தில் விந்தியமலையிலே வீதஹவ்யன் எனும் மகா தபசி வசித்து வந்தார். ஆசாரக்கிரியா ஸம்ஸ்காரங்களிலே அவர் நாளடைவில் அதிருப்தி கொண்டார். இவை மக்களை பிரமிக்கச் செய்து வியாதிகளுக்கும் இடைஞ்சல்களுக்கும் காரணமாக உதவுகின்றன. அக்கினிக்கு நைவேத்தியம் வழங்கும் பழக்கத்தை விட்டுவிட்டார். நிர்விகல்ப சமாதி எய்துவதற்கு விரும்பினார். வாழை மரங்களினால் அவர் ஒரு குடிசையை கட்டினார். அதில் தமது மான்தோலை விரித்தார். அதன்மேல் அவர் ஒரு கால் மீது மற்றொரு காலை மாற்றி வைத்துப் பத்மாசனத்திலே அமர்ந்து தமது கைகளைத் குதிங்கால்கள் மீது வைத்த வண்ணம் கண்களை மூடிக்கொண்டார். அவர் வெளிப்பொருள்களிலிருந்து படிப்படியாக மனத்தை இழுத்துக்கொண்டார். அதை ஒரே நிலையில் இருத்தி இறுதியில் உறுதியாகக் கட்டுப்படுத்தினார். தமது இதயத்திலே, அவர் தமக்குள் பேசிக் கொள்ளலானார்:- மனத்தைக் கட்டுப்படுத்தினேன். ஆனால் அது பிராணனால் மீண்டும் குழப்பமடைகிறது. காற்றால் அலைக்கழிக்கப்படும் உலர்ந்த இலை போன்று காற்றில் அது மிதக்கிறது. அது வெளிப்புற

இந்திரியங்களை ஓர் சாரதி குதிரைகளை ஓட்டுகிறது போல ஏவி, பல்வேறு பொருள்களுக்கு அவைகளால் தூண்டப் படுகின்றது. அது ஒன்றிலிருந்து மற்றொரு பொருளை நாடி ஓடுகிறது- குரங்கு ஓர் மரத்தினின்று வேறொன்றுக்குத் தாவுகிறது போல, இதன் போக்கைத் தடுக்க நான் முயன்றேன். அது பொருள்களை நாடி ஓடுகிறது. ஆவலோடும் குதூகலத்தோடும் அவைகளைப் பின்தொடருகிறது. ஐந்து ஞானேந்திரியங்கள் உள்ளத்திற்கு வெறும் வாசல்கள், நான் பார்க்கிறவன் பேசாத மௌன சாட்சியாயிருக்கிறேன். இழிவான கொடிய இந்திரியங்களே! நீங்கள் ஏன் வீணாகக் கவலைகளிலும் இடர்ப்பாடுகளிலும் மாட்டிக் கொள்கிறீர்கள்? ஓய்வு ஒழிச்சலின்றி ஏன் அவ்வளவு புத்தியில்லாமல் புரளுகிறீர்கள்? நான் தூய உணர்வுடையவன். நான் உள்ளத்தோடும் இந்திரியங்களோடும் பேரிணக்கம் கொண்டேன். வீழ்ச்சியுற்றேன். சர்வஞானம் படைத்த ஆத்மா கண்களையும், காதுகளையும் நன்றாய் அறியும். ஆனால் இந்த இந்திரியங்கள் அந்தர்யாமியாயுள்ள ஆத்மாவை அறிய இயலாது. அறிவு ஒருபோதும் இந்திரியங்களோடு மிக்க நெருக்கமாய் அணுகாது. அவைகள் பிராம்மணர்களும் கீழ்சாதியார்களும், பூனையும் எலியும், கீரியும் பாம்பும் போன்றவைகள்.

ஓ, மனமே! திரிகிற தெருநாய் போல நீ ஏன் அலைகிறாய்? ஓ, கேடு கெட்ட அறிவே! அகங்காரத்தினால் அழியக்கூடிய இவ்வுடலை நித்தியாத்மாவென்று தவறாகக் கொண்டு விட்டாய். நான் என்பதை உடலோடும் பொருள்களோடும் குழப்பிக் கொள்ளாதே. தனிமை என்ற உணர்விலிருந்து எழுகின்ற அஹங்காரம் ஆகிய மருளை (பிரமையை) நீக்குவாயாக. ஓ, மனமே! இரவியின் முன் இருள் மறைவது போல, நீ ஆத்மவிசாரத்தினால் விரைவில் மறந்துபோவாய். ஓ, மனமே! நீ இப்போது சத்திய நெறியில் நடைபோட்டு ஆத்மவிசாரத்தைத் தொடங்கத் தீர்மானித்துவிட்டாய். நிகழ்கின்ற இந்தப் போக்கு உண்மையிலே ஓர் மெச்சத்தக்க போக்கே ஆகும். விரைவிலே நீ ஆத்மாவின்

நித்தியானந்தத்தை அனுபவிக்கப் போகிறாய்'' என்று கூறிக்கொண்டார். இந்த விசாரணையின் மூலம் வீதஹவ்யன் உள்ளத்தையும் இந்திரியங்களையும் பிராணனையும் உறுதியாகக் கட்டுப்படுத்தினார். மூக்குமுனையை நோக்கினார். உடல் அசைவற்றதாகியது. மூச்சு நின்றுவிட்டது.

அப்பால் அவர் முந்நூறு ஆண்டுகளை ஒருக்ஷணப் பொழுது போலக் கழித்தார். சிங்கங்களின் உரத்த கர்ஜனை, இடியின் பயங்கரமான ஓசை, வேடுவர்களின் கூக்குரல்கள் ஆகியவை இவரைச் சமாதியினின்று எழுப்ப முடியவில்லை. வெள்ளத்தால் தாக்குண்ட அவரது உடல் தோள்கள் வரை மணலிலே புதையுண்டிருந்தது. சமாதியிலிருந்து எழுந்த வீதஹவ்ய முனிவர் தமது உடல் மணலிலே புதையுண்டிருப்பதைக் கண்டார். பிராண இயக்கம் சுயேச்சையாயில்லை. ஆகையால் உடலிலே உயிர்ப்புத்தன்மை இல்லை. அவர் உள்ளத்தில் புகுந்து தபசியாகக் கைலாய மலைச்சாரலிலே நூறு ஆண்டுகளைக் கழித்ததும் பிறகு வித்தியாதரராக மற்றொரு நூறு ஆண்டுகளையும் தேவலோகத்தில் தேவேந்திரனாக ஐந்து ஆண்டுகளையும், அப்பால் சிவபெருமானுடைய புத்திரராகிய விநாயக மூர்த்தியாகவும் கழித்ததை உணர்ந்தார். திவ்ய ஞானக் கண்ணால் அவர் சென்றகால வாழ்வுகளின் சம்பவங்களை உணரலானார். திரிகால ஞானமும் உணர்ந்தவரானார். வீதஹவ்யர் தமது உடலை மணற்குவியலிலிருந்து தூக்க விரும்பினார். சூரியபகவானிடம் சூக்ஷ்ம உடலுடன் சென்று பிங்களாவைக் கூட்டி வந்தார். அவர் உடலைச் சூழ்ந்திருந்த மணலை பிங்களா அப்புறப்படுத்தினார். பிங்களா விந்தியா பூஞ்சோலைக்குள் ஒரு மேகமாகப் புகுந்தார். அம்மேகம் பெரிய யானையின் உருவத்தை ஏற்றுக் கொண்டது. இந்த யானை மணலையும் மண்ணையும் அப்புறப்படுத்திற்று. பிங்களா தமது யதாஸ்தானத்தைப் போய்ச் சேர்ந்தார். முனிவரின் சூக்ஷ்ம உடல் ஸ்தூல உடலில் பிரவேசித்தது. உயிர்ப்புச் சக்தி ஊடாடியது. வீதஹவ்ய முனிவர் ஸ்நானம் புரிந்து சூரிய பகவானை வழிபட்டார். பின் ஓர் ஆற்றங்கரையில் சிறிது

பொழுது கழித்தார். உலகாயதப் பொருள்களிடத்தில் அவருக்குக் கவர்ச்சி கிடையாது, அம்முனிவரிடம் இந்திரிய நிக்கிரகம், உதாரகுணம், ஸாந்தி, தயாளம், திருப்தி அன்பு, ஞானம் மற்றும் அந்தரங்க ஆனந்தம் இவை காணப்பட்டன.

அவர் பின்வருமாறு தமக்குள் பேசிக்கொள்ளலானார் : இது பரியந்தம் இந்திரியங்களை எல்லாம் அடக்கிக் கொண்டிருக்கிறேன். இப்போது நிர்விகல்ப சமாதியில் பிரவேசித்து பாறைபோன்று அசையாமல் இருப்பேன். ஆனந்தக் கடலில் அல்லது சுயேச்சையான உணர்வில் என்னை அமிழ்த்திக் கொள்வேன். ஆத்மாவில் நான் திளைப்பேன். ஆழ்ந்த உறக்கத்திலிருக்கிறவன்போல நான் இருப்பேன். உலகாயதப் பொருள்களிடத்திலே எனக்குக் கவர்ச்சி கிடையாது. நான் உலகிற்குச் செத்தவனாயிருப்பேன். உலக உணர்வு எனக்கு எதுவும் இல்லை. ஆழ்ந்த உறக்கத்திலிருப்பினும் உலகிலே விழித்திருக்கிறவன் போல இருப்பேன். எனது சொந்த ஸ்வரூபத்தை முற்றிலும் உணருகிறவனாவேன். பரிபூரண அறிவு எனக்கு உண்டு. நானாவித நன்மை இல்லாத துரியானந்தத்தை அனுபவிப்பேன். பிரம்மனுடைய ஒரே தன்மையான ஸாரத்தைப் பருகுவேன் - இங்ஙனம் சிந்தித்த வண்ணம் அவர் தியானத்தில் அமர்ந்தார். அவர் ஆறு பகலும் இரவும் சமாதியில் இருந்தார். அவர் ஆத்மாவின் நித்தியானந்தத்தை அனுபவித்து ஓர் ஜீவன்முக்தரானார். ஜனனமரண வட்டத்தினின்றும் துவந்தங்களிலிருந்தும் அவர் விடுதலை பெற்றார். விதேகமுக்தி நிலையை அடைய விரும்பினார். மலைக்குகைக்குள் அவர் புகுந்து பத்மாசனத்தில் அமர்ந்து பின்வருமாறு தமக்குள் கூறிக்கொள்ளலானார்:

"ஓ, ஆசைகளே? உங்களிடமிருந்து இப்போது விடைபெறுகிறேன். உங்கள் மூலமாக நான் விஷயங்களை அனுபவித்தேன். ஆசையற்று ஸாந்தி அனுபவிக்கிறேன். ஓ, கோபமே! நீயவர்களிடமிருந்து என்னைக் காப்பாற்றிக் கொள்ள உதவினாய், உனக்கு இப்போது வந்தனம் கூறுகிறேன். ஸாந்தி பெற்றுவிட்டேன். உன் தந்திரங்களைக்

கண்டு கொண்டேன். ஓ, இன்ப சுகமே! பிரியா விடை பெறுகிறேன். நீ கணக்கற்ற ஜன்மங்களிலும் மறுபிறப்புக் களிலும் உனது சுசப்பான இன்பங்களை ருசிபார்க்கத் தூண்டினாய். இவ்வுலகில் உன்னோடு ஆடியதெல்லாம் போதும் போதும். ஓ, சிற்றின்பங்களே! பிரிவு விடை கூறுகிறேன். வெகுகாலமாக என்னை ஏமாற்றிவிட்டீர்கள்! உங்களுக்கு எட்டாத இடத்திலிருக்கிறேன். எனது நிஜமான சச்சிதானந்த நிலையை மறக்கச் செய்தீர்கள். ஓ, வலிகளே! நீங்கள் எனது இரக்ஷகன். என் கண்களைத் திறக்கச் செய்தீர்கள். மாறு வேஷத்தில் நீங்கள் எனக்கு ஓர் ஆசீர்வாதம்! நீங்கள் ஆத்மாவின் நித்தியானந்தத்தை எனக்குப் புலப்படுத்தினீர்கள்.

நீங்கள் இல்லாமல் நான் ஒருபோதும் விசேஷித்த நன்மை பெறுவதற்கு முயற்சி செய்திருக்கமாட்டேன். என்னை ஆத்மவிசாரத்துக்கும் தியானப் பயிற்சிக்கும் சமாதிக்குமாய் வழிகாட்டினீர்கள்! ஓ, உடலே! எனது பழைய அத்யந்த நண்பன். உன்னை விலக்குகிறேன். உனக்குத்தக்க மரியாதைகளைச் செலுத்துகிறேன். எனக்கு எதேஷ்டமான வலிகளைக் கொடுத்தாலும் கூட இந்த சம்ஸார சமுத்திரத்தை உனது துணையால் மாத்திரம் கடந்துவிட்டேன். ஓ, பேராசையே! எனக்குத் திருப்தி. உலக லாபம் எதுவும் எனக்குத் தேவையில்லை. மோக்ஷமாகிய மகோன்னதமான செல்வம் எனக்குக் கிடைத்திருக்கிறது. மிக்க உயர்தரமான லாபத்தைப் பெற்றுவிட்டேன். உனக்கு விடை தருகிறேன். ஓ, பற்றும் காமமும்! இனி என்னைத் தொந்தரவு பண்ணாதீர்கள். வைராக்கியமும் தூய்மையும் எனக்கு உண்டு. உங்களுக்கு வணக்கம். ஓ எனது இனிய குகையே! தியானப் பயிற்சிக்கு நீ துணைவனாயிருந்தாய். பேரிரைச்சலுள்ள உலகத்திலே களைத்துப் போனால் எனக்கு ஒரே புகலிடம் நீ தான். ஓ, தடியே! என் களைப்பைப் போக்குவதில் நண்பனாயிருப் பதைக் காண்கிறேன். வயோதிகனாகிய எனது உடலுக்கு நீ ஆதாரமாயிருந்தாய். ஓ, பிரதான பிராணனே! அடுத்தபடி உனக்குப் பிரிவு விடை கூறுகிறேன். பல்வேறு ஜன்மங்களில்

எல்லாம் எனக்கு உறுதுணையாயிருந்தாய். புண்ணிய கர்மாக்களே! உங்களுக்கு மீண்டும் மீண்டும் நான் நமஸ்கரிக்கிறேன். தங்கள் உதவியால் தீயசெயல்களைப் புரிவதினின்று காப்பாற்றப்பட்டு இறுதி மோக்ஷத்தை விரைவில் பெற்றேன். ஓ, சகோதரர்களே, நண்பர்களே! தங்களிடமிருந்து இப்போது விடை பெற்றுக்கொள்கிறேன். தாங்கள் எல்லோரும் சந்தோஷமாயிருக்கக் கடவது. தாங்கள் எல்லோரும் இறுதியான சொர்க்கபதத்தைப் பெறுவீர்களாக. (இவ்விதம் வீதஹவ்ய முனிவர் எல்லோரிடமும் இறுதி விடை பெற்றார்).

அவர் மிருதுவாக பிரணவத்தை உச்சரித்தார். இது இந்திரிய சுகத்திற்குரிய பொருள்களையும் சங்கல்பங்களையும் நீக்கிற்று. "ஓம்" மீது அவர் தியானம் புரியலானார். இருளும் ஒளியும் தோன்றி மறைந்தன. அவரது இதயம் ஜ்வலித்தது. அவர் ஜாக்கிரதா சுஷுப்தி நிலையில் பாறை போன்று உறுதியாய் அமர்ந்திருந்தார். அவர் துரிய நிலை அடையப் பெற்றார். சுயேச்சையான சித் ஆனார். சுயேச்சையான சத் ஆனார். அவர் நாஸ்திகர்களுக்கு சூனியமாகவும், பிரம்மவாதிகளுக்கு பரப்பிரம்மனாகவும், சாங்கியர்களுக்கு புருஷனாகவும் யோகினிகளுக்கு இஸாவாகவும், சைவர்களுக்கு சிவனாகவும், காலவாதினிகளுக்கு காலாவாகவும், மத்யாமிகர்களுக்கு மத்யாமாகவும் ஆனார். மகரிஷிகளால் அறியப்படுகிற "அது" ஆக அவர் ஆகிவிட்டார். "அது" எங்கும் வியாபித்துள்ளது. எல்லா விளக்குகளையும் ஜ்வலிக்கச் செய்கிறது; அது ஒன்றாகவும் பலவாகவும் இருக்கிறது; சாஸ்திரங்களின் இறுதியான முடிவாக உள்ளது. அது உலகுக்கு ஆதரவாகவும் இன்றியமையாததாகவும் இருக்கிறது. அவர் இருபதினாயிரம் ஆண்டுகள் இந்த மகோன்னதமான நிலையில் வசித்தார். உலகம் முழுவதும் சந்தோஷத்தோடு சுற்றித் திரிந்தார். இறுதியில் ஜோதிகளுக்கெல்லாம் ஜோதியாயுள்ள மெய்ப் பொருளிலே கலந்தார் - விதேகமுக்தி எய்தினார்.

# 6. நிர்வாணப் பிரகரணம்

## வில்வப் பழத்தின் வரலாறு

"ஓ, இராமா! ஒரு சமயம் சந்தோஷத்தைக் கொடுத்த ஒரு பொருள் மறுசமயம் சஞ்சலத்தைக் கொடுக்கிறது. ஆரோக்கியமாயிருக்கிறவனுக்குப் பால் மகிழ்ச்சியைத் தரும். காய்ச்சல், அஜீரணம் மற்றும் வயிற்றுப்போக்கு ஆகியவற்றால் பாதிக்கப்பட்டிருக்கும்போது பால் வலியைத் தந்து வாந்தியை உண்டுபண்ணுகிறது. மக்கள் எல்லோருடைய அநுபவமும் இதுவே. ஒரு பொருளைப் பெறவேண்டி விருப்பங் கொண்டால், அப்பால்தான் அப்பொருள் உனக்கு சந்தோஷம் வழங்குகிறது. ஆகையால் சந்தோஷத்திற்குக் காரணம் ஆசையே. சம்போகம் ஆசைகளின் தற்காலிகமான திருப்தியைக் கொணருகிறது. நீ திருப்தி அடைந்தால் அப்பொருள் சந்தோஷத்தை மேலும் தருவதில்லை. க்ஷணப்பொழுதிருக்கும் சந்தோஷங்களிலே உற்சாகம் கொள்வது வெறும் முட்டாள்தனம். ஓ, இராமா! ஆசைகள், எண்ணங்கள் அனைத்தையும் புறக்கணிப்பாயாக. பொருள்களோடு உள்ளத்தைப் பூட்டி வைக்காதே. ஆத்மஞானமற்றவன் பந்தப்பட்டவன்; பிரம்மக்ஞானத்தை எய்தியவன் பந்தத்தினின்று விடுதலை பெற்றவன். ஆகையால் ஓ, இராமா, பிரம்மன் மீது இடையறாத அதி தீவிரமாகத் தியானித்து பிரம்மஞானத்தைப் பெறுவாயாக" என்று வசிஷ்ட மகரிஷி உபதேசிக்கத் தொடங்கினார்: அவர் உபதேசங்கள் மேலும் காண்க.

இந்த மனம் சேஷ்டை பண்ணும் ஓர் பிசாசு. பந்தமோக்ஷங்களுக்கு இதுவே காரணம். இது சதா சஞ்சலப்படுகின்றது. பாதாளத்திலிருந்து வானமுகட்டிற்கு கண்ணிமைக்கும் கணத்திலே அது தாவுகிறது. உலகம் முழுவதையும் ஒரு க்ஷணப்பொழுதிலே சிருஷ்டிக்கவும் அழிக்கவும் கூடிய ஆற்றல் அதற்கு உண்டு. உள்ளத்தின் அதிர்வு மாயையை உண்டுபண்ணுகிறது. அஞ்ஞானத்தின் காரியம் மனம். ஓ, இராமா! வாஸனைகளை அழிப்பதன் மூலமாகவோ அல்லது பிராணனைக் கட்டுப்படுத்துவதன்

மூலமாகவோ இந்த மனத்தை அகற்றுவாயாக. மனம் வாஸனைகளின் மூட்டையே தவிர வேறல்ல. வாஸனைகள் அழிந்துபட்டால், மனம் ஒருக்காலும் இருப்பதில்லை. மனம் விரிதலாலும் சுருங்குதலாலும் உலகத்தின் படாடோபக் காட்சியையும் அழிவையும் உண்டாக்குகின்றன. ஆகையால் விருத்திகளையும் அல்லது சங்கல்பங்களையும் அல்லது எண்ணங்களையும் கட்டுப்படுத்துவன் மூலம் மனத்தின் செயலைத் தடுத்து நிறுத்துக. பிராணனைக் கட்டுப்படுத் தலானது மனத்தைக் கட்டுப்படுத்தலுக்கு வழி செய்கிறது. பிராண இயக்கம் மன இயக்கத்தை விளைவிக்கிறது. வாழ்வு சுவாசம் உலக காரியத்தை நடத்தவும் நிறுத்தவும் செய்கிறது. பிராணாயாமப் பழக்கத்தால் சுவாசத்தைக் கட்டுப்படுத்து வாயாக. மனம் நாசமடைந்தால், அந்தமில்லா ஆனந்தத்தை நீ அனுபவிப்பாய். பார்க்கப்படுபவைகளும் பார்வையும் பார்க்கிறவனிடம் இலயமாகிவிட்டால் அறிகிறவனும் அறியப்படுகிறதும் அறிவும் (ஞாதா, ஞாயா, ஞானம்) ஒன்றினால் (ஐக்கியமானால்) அதாவது திரிபுடி அழிந்து போனால் நீ மேலான ஆத்மசாந்தியை அனுபவிப்பாய்.

ஆசைகளின் துறவு, சுவாசக் கட்டுப்பாடு, விவேகமான விசாரம் இவை இதயத்தின் இயக்கங்களையும் மனத்தின் ஆற்றல்களையும் சுருக்கி இறுதியில் காமத்தையும் மாயையையும் தடுக்கும். சரியான ஞானம் விகாரமான மனத்தைப் பலவீனப்படுத்தும். தவறான ஞானம் காமவிகார மனத்தைத் தடித்துக் கொழுக்க வைக்கும். ஞானியின் மனம் மனமாயில்லை. அது பிரம்மனே தான். அது தூய்மையின் ஸாரம். இரஸவாத முறையினால் தாமிரம் தங்கமாக மாற்றப்படுவது போல, தியான முறையினால் காமவிகார மனம் தூய மனமாக மாற்றப்படுகிறது. மேன்மைகளும் வித்தியாசங்களும் மனத்தினால் சிருஷ்டிக்கப்பட்டவை. அவை உண்மையில் இருப்பதில்லை. கீழ்த்தரமான அல்லது அசுத்த மனம் உலகப் பொருள்களிடையில் விளையாடுகின்றது. மேல்தரமான அல்லது சுத்த மனமோ பரமாத்மாவான பிரம்மனிலே அமைதியாக இளைப்பாறுகிறது. பிரம்மன் ஏகம்.

வகுத்தும் பேதப்படுத்தியும், உடைத்தும் பிரித்தும் வருகிற மனத்தின் மூலம் அது நானாவிதமாக ஆகியுள்ளது. மனிதனுக்கும் பிரம்மனாகிய கடவுளுக்கும் இடையில் பிரிக்கின்ற சுவர் மனமாகும். சாதாரண சுவர், சுண்ணாம்பு, செங்கல், சிமெண்ட் ஆகியவற்றால் கட்டப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த மர்மமான சுவரோ வாஸனைகள், எண்ணங்கள், அகங்காரம், விருப்புகள், வெறுப்புகள் ஆகியவற்றால் ஆக்கப்பட்டுள்ளது. இந்த மர்மமான சுவர் விசாரம் அல்லது தியானத்தின் மூலம் தகர்க்கப்பட்டால் மட்டும் 'நீ ஏகத்துவத்தை அனுபவிப்பாய். ஏகம் மாத்திரமே உண்மை. பிரம்மன் மாத்திரமே உண்மை. நானாவிதம் என்பது மாயையானது - கயிற்றிலே பாம்பு அல்லது கனவிலே நீர் அல்லது தூணிலே கள்வன் போல.

வசிஷ்ட முனிவர் "ஓ, இராமா! இதற்கு முன் சொல்லப்படாத சிறிய இனிய கதையை உனக்குப் போதனைக்காகக் கூறுகிறேன்" என்று தொடங்கி கதையைச் சொல்லலானார்.

பெரிய அழகிய வில்வப்பழம் ஒன்று இருந்தது. அதன் குறுக்களவு அநேக பதினாயிரம் மைல்கள் கொண்டு விஸ்தாரமாயிருந்தது. எத்தனை கல்பங்கள் கழிந்தாலும் அப்பழம் அழியாது. அதற்கு தேனைப் போல அல்லது தெய்வலோகத்திலுள்ள தேவாமிர்தம்போல இனிமையான நிலையான வாசனை இருந்தது. அது மிகவும் மிருதுவாயும் சுவையாயும் இருந்தது. எல்லாப் பழங்களிலும் அது சிறந்தது. எல்லாப் பழங்களின் ஸாராம்சமாய் அது விளங்கியது. அது மந்தாரகிரியைப் போல உறுதியாயும் ஸ்திரமாயும் இருந்ததல்லாமல் கல்பத்தின் இறுதியில் அடிக்கிற கொடிய காற்றுகளாலும் கூட அசைக்கக்கூடாததாயும் இருந்தது. பூமி மேல் ஒரு போதும் அது விழுவதில்லை. கனியாத நிலையில் அது ஒரு போதும் காணப்படுவதில்லை. அறுசுவை ரஸங்களினால் அது உண்டாக்கப்பட்டது. அதில் உள்ள எண்ணிக்கை கடந்த விதைகளைப் போல அதிலே பத்து லக்ஷத்திற்கு மேற்பட்ட உலகங்கள் அடங்கியிருக்கின்றன. உயிர்

இனங்கள் எல்லாவற்றையும் ஆதரித்துத் தாங்கக்கூடிய ஸாரமான நெட்டியும் ஸத்தும் அதில் அடங்கியிருக்கின்றன. அற்புதமான இப்பழத்தின் சதைப்பிடிப்புள்ள பாகம் வரையறை அற்ற ஞானம் அல்லது தூய உணர்வு மயமாயிருக்கிறது. எலும்புச்சாரம் போன்ற பாகம் சித்-சக்தி. இதிலிருந்து ஆகாசம், காலம், இடம், அசைவு, சட்டம் முதலியவை உற்பத்தி.

இராமபிரான், "ஓ, மரியாதைக்குரிய மஹானுபாவரே! இது அழகான உருவ அலங்காரம். வில்வப்பழத்தின் திருஷ்டாந்தக் கதையைப் புரிந்து கொண்டேன். வில்வப்பழம் பிரம்மன் தானே ஆகும். அது அழியவொண்ணாத, எல்லை கடந்த சத்-சித்-ஆனந்த பரமாத்மா. அது சர்வ வியாபகமாய் உள்ள ஞானம் அல்லது தூய உணர்வைத் தவிர வேறல்ல. ஞானமாகிய வில்வப்பழத்தின் தோல் பிரம்மனுடைய முட்டையும் சர்வ லோகங்களுமாகும்" என்று கூறவும் வசிஷ்ட மாமுனிவர் "பிரம்மன் மிகவும் மதுரமான ஆன்மீயப்பழம், அது பேரானந்தமும் ஞானமும் பொதிந்துள்ள பண்டம். அதிக ஆச்சரியம் படைத்த இந்தப் பழத்தைப் புசிக்கிறவன் அல்லது சுவைக்கின்றவன் சிரஞ்சீவித்துவத்தை எய்துகிறான்" என்று திருவாய் மலர்ந்தருளி முடித்தார்.

135

## சிகித்வஜனின் சரித்திரம்

துவாபரயுகத்திலே, மால்தேசத்திலே சிகித்வஜன் என்னும் மன்னன் பிறந்தான். அவன் நீதி மிகுந்தவன், கம்பீரம் நிறைந்தவன். ஸாந்தஸ்வரூபி, உறுதியுள்ளவன், தீனதயாளு, நன்னடத்தை உள்ளவன். சௌராஷ்ட்ர தேசத்து இராணியின் புத்திரியாகிய சூடாலை என்பவள் இம்மன்னனின் மனைவி. சூடாலைக்கு விவேகமும் ஆத்மவிசாரமும் உண்டு. அவள் அடியில் வருமாறு ஆத்ம விசாரணை புரியலானாள். இந்த "நான்" என்பது என்ன? நான் யார்? எனது யதார்த்த சுபாவம் என்ன? மனத்திலிருக்கும் மாயை எங்கிருந்து வந்திருக்கிறது? அது யாருக்கு உரியது? எப்போது எங்கிருந்து அது உதித்திருக்கிறது? வீம்பு பாராட்டுகிற அற்பத்தனமான "நான்" என்பதை அழிப்பது எப்படி? உடலையும் உள்ளத்தையும் சாராமல் மாறுதலில்லாத சிரஞ்சீவித்துவமுள்ள இறுதியான சத்தியப்பொருள் ஒன்று இருக்கிறதா? இந்த இறுதியான சத்தியப் பொருளை அடைவது எப்படி? மோக்ஷம் என்றால் என்ன? பந்தம் என்பதென்ன? வித்தை என்பது எது? அவித்தை என்பது என்ன? மாயை என்பது என்ன? இந்த சம்ஸாரம் என்பது என்ன? பந்தத்தையும் அவித்தையையும் ஒழிப்பது எங்ஙனம்? நித்தியானந்தமும் சிரஞ்சீவித்துவமும் மகோன்னத ஸாந்தியும் எய்துவது எங்ஙனம்?

இச்சரீரம் மந்தமாயுள்ளது. இது பஞ்சபூதச் சேர்க்கை. அழியக்கூடியது; இதற்குத் தொடக்கமும் முடிவும் உண்டு. ஆகையால் நான் என்கிற பதத்தை அதற்குப் பொருத்த முடியாது. இப்பதத்தை பத்து இந்திரியங்களுக்கும் இணைக்க முடியாது. இந்திரியங்கள் உள்ளத்தால் இயக்கப்படுகின்றன. அவைகூட மந்தம் அதாவது ஜடம், பிராணனும் கூட "நான்" ஆக இருக்கமுடியாது; ஏனெனில் அதுகூட ஜடம். அது ரஜோகுணத்திலிருந்து வந்துள்ளது. "நான்" என்கிற பதத்தை மனத்திற்கும் கூட பொருத்த இயலாது; மனமும் ஜடம். அதற்கு ஆதியும் அந்தமும் உண்டு. அது சுயம் ஜோதியல்ல. மூலபூதங்களாகிய தன் மாத்திரைகளின் சத்வபாகத்தால் மனம்

உண்டாக்கப்பட்டிருக்கிறது. அது புத்தியால் தார் போட்டு குத்தி வேலை செய்யத் தூண்டப்படுகிறது. புத்திகூட அஹங்காரத்திலிருந்து வலிமை பெறுகிறது. ஆகையால் அது "நான்" ஆக இருக்கமுடியாது. அஹங்காரம் ஜீவனால் இயக்கப்படுகிறது. எனவே, ஜீவன் "நான்"ஆக இருக்க முடியாது. அது வெறும் பிரதிபலிப்பு. தண்ணீர் வற்றிய போது, அதன் மேல் விழுந்த சூரிய பிம்பம் மறைவது போன்று, மனமாகிய குளம் வற்றியபோது அதாவது இந்த மனம் அழிந்து போனபோது பிரதிபலிப்பாகிய ஜீவன் மறைந்து போகிறது. மூலாதாரம், உற்பத்தி ஸ்தானம், உடல், புலன்கள், உள்ளம், பிராணன், புத்தி, ஜீவன் ஆகியவற்றையெல்லாம் தாங்கும் சக்தி படைத்த சத் - சித் ஆனந்த ஆத்மா அல்லது பிரம்மனே நிஜமான எல்லை கடந்த "நான்" ஆகும். நான் இந்த ஆத்மாவோடு அபேதமாயிருக்கிறேன். சத்-சித்- ஆனந்தம் எனது நிஜமான ஸ்வரூபம்"- அவள் தூய, சர்வ வியாபகமான அமரத்துவ ஆத்மாவின் மீது தியானத்தை அப்பியசித்து ஆத்மசாக்ஷாத்காரம் எய்தினாள். அவள் ஓர் ஞானி, யோகினியும் கூட. அவளிடம் யோக சக்திகள் நிறைந்திருந்தன. வானவெளிகளிலே நடப்பாள். அணிமா, மகிமா ஆகிய சக்திகளைப் பெற்றிருந்தாள்.

தன் மனைவி ஓர் ஞானி என்றும் யோகினி என்றும் சிகித்வஜன் நம்பவில்லை. ஆத்மஞானத்தைப் பற்றிய கருத்தைச் சிறிதளவு சூடாலை தன் கணவனுக்கு எடுத்துரைக்க முயற்சித்தாள். ஆனால் சிகித்வஜன் அந்த போதனைகளாலே பயனடையவில்லை. அவன் அதிருப்தியான வாழ்க்கையை நடத்தினான். அவனுக்கு மன அமைதி கிடையாது. சூடாலையைப் பார்த்து அவன் 'இப்பூலோக வாழ்விலிருந்து நான் எவ்விதமான சுகமும் பெறவில்லை. இதயத்தில் பாதிக்கப்பட்டிருக்கிறேன். கானக வாழ்வில் நுழைய நான் விரும்புகிறேன். தவமும் தியானமும் அப்பியசிக்க வேண்டும். எனக்கு அனுமதி கொடு என்று தன் கருத்தை எடுத்துக் கூறினான். "எனது மரியாதைக்குரிய பிராணபதி! இந்த நிலையில் தாங்கள் ஒய்வு பெறலாகாது" என்று சூடாலை

பதிலிறுத்தினாள். அவள் வார்த்தைகளுக்கு மன்னன் எவ்வித கவனமும் செலுத்தவில்லை. நள்ளிரவிலே அவன் அரண்மனையை விட்டுப் புறப்பட்டுப் பன்னிரண்டு நாட்கள் பயணம் செய்து மந்தாரமலைச் சாரலிலே உள்ள வனத்திலே புகுந்தான். மந்திரங்களை உச்சரித்தான். பழங்களைத் தின்று காலங்கழிக்கலானான். நாளடைவில் அவனுடைய உடம்பு நலியலாயிற்று.

தன் அருகில் படுத்திருந்த கணவனை சூடாலை கண்விழித்துப் பார்க்கையில் காணவில்லை. அவர் கானகம் போயிருப்பாரென்று கருதினாள். நிரம்பவும் கவலைப் பட்டாள். பதினெட்டு ஆண்டு காலமாக அவளே அரசாங்கத்தைப் பரிபாலனஞ் செய்து வந்தாள். தன் கணவனின் நிலையைக் காண விரும்பினாள். ஓரிரவில் சூடாலை தனது யோக சக்தியால் வானத்தில் நடந்துபோய் மந்தாரகிரியில் இறங்கினாள். அவள் தன் வடிவத்தை மாற்றிக்கொண்டாள். தான் ஒரு மகத்தான பிராம்மண சிரேஷ்டரின் புத்திரன் என்றும், அக்குடும்பத்தில் ஜனனமானதால் தன் பெயர் கும்பமுனி என்றும் கூறிக்கொண்டு அவள் தன் கணவன் முன்னால் தோன்றினாள். சிகித்வஜன் எழுந்து நின்று பிராம்மண இளைஞனை நமஸ்கரித்து வரவேற்றான். சூடாலை ஆகாயத்தில் நின்றிருந்தாள். அவள் கால்கள் தரைமேல் படவில்லை. யோகத்திலே மகோன்னதமான சக்திகளை எய்திருப்பதை சிகித்வஜனுக்கு நிரூபணம் செய்து திருப்தி உண்டு பண்ணுவதற்காகவே அவள் அங்ஙனம் நின்றாள். சிகித்வஜன், "கும்பமுனியே! கடுமையான தவம் புரிந்தேன் - ஆனால் ஆத்மஞானத்தைப் பெறவில்லை. உடல் வலிகளை அதிகரித்துக்கொண்டேன்" என்று கூறினான். ஆத்மாவின் பேரானந்தத்தை ஒருவன் அநுபவிக்கலாம் - குருவின் பாதத்தருகில் அமர்ந்து சுருதிகளை சிரவணம் பண்ணி உபநிஷதங்களிலுள்ள மகா வாக்கியங்களைச் சிந்தித்தும் தியானித்தும் வந்தால், குருவின் ஞான உபதேசம் சிஷ்யனிடத்தில் பரிபக்குவம் பெற்றுவிட்டால் சிஷ்யன்

நித்தியானந்த சுகத்தை அநுபவிக்கக் கூடும். முனிவர்களின் சத்சங்கத்தில் நீங்கள் போய் பந்தம் மோக்ஷம் இவற்றின் இயற்கை நிலைகளைப் பற்றி ஏன் தர்க்கம் புரியவில்லை! "நீ யார்?" என்ற கேள்வியில் நீங்கள் ஏன் விசாரணை புரியவில்லை? இங்கே தாங்கள் அஞ்ஞான நிலையில் தங்கியிருக்கக் காரணம்? பூமியிலுள்ள பொந்துக்குள் வாசம் புரியும் பூச்சியைப்போல இங்கே வாசம் புரிகிறீர்களே! எல்லா விஷயங்களிலும் மகோன்னதமானது ஞானம் மாத்திரமே ஆகும். ஜனனமரணங்களும் அவற்றைச் சேர்ந்த நோய்களும் கொண்ட மிகப் பயங்கரமான வியாதியை ஞானம் மாத்திரமே ஒழித்துக்கட்டும். இதைப் பற்றித் தாங்கள் அக்கறை காட்டவில்லையே! மரக்கட்டைக்குள் வசிக்கிற சில பூச்சிகள் கட்டையைத் தொளைப்பதிலேயே தம் வாணாளை கழித்து மடிந்து போகும். அதுபோல, இளவரசரே! தங்கள் வாணாளை முழுவதும் கொடிய தவங்களைப் புரிவதிலேயே கழிக்க விரும்புகிறீர்களா? சிரஞ்சீவித்துவமும் மகத்தான நித்திய ஸாந்தியும் வாரி வழங்க வல்ல ஞானத்தைப் பெறுதற்குத் தாங்கள் விரும்பவில்லையா?

பிரம்மஞானத்தைப் பெற்று அசுத்தமான வாஸனைகளையும் அதன் விளைவுகளையும் அழிப்பீர்களாக; ஜீவன்முக்தன் ஆகுக. தார்மீகச் செயல்கள் அசுத்தமான வாஸனைகளைப் போக்கடிக்கும். அசுத்தமான வாஸனைகள் அழிந்துபோனால் மனம் நாசமடையும். அப்பால் ஆத்மஞானம் உங்களிடம் உதயமாகும்; என்று மடைதிறந்த வெள்ளம்போலத் திருவாய் மலர்ந்தருளினான், சூடாலை பிராம்மண இளைஞன் போன்ற மாறுவேஷத்திலே.

சிகித்வஜன் கும்பமுனியின் முன்னால் சாஷ்டாங்கமாய் விழுந்து நமஸ்கரித்தான். "என்னைத் தயவுசெய்து தங்கள் சிஷ்யனாக ஏற்றுக் கொள்ளுங்கள். ஆத்மஞான இரகசியங்களை எனக்குத் தீக்ஷை புரியுங்கள். தாங்கள் எனது மரியாதைக்குரிய மகத்தான குருதேவர்" என்று பணிவுடன் பகர்ந்தான். கும்பமுனி, "அரசரே! தயவு செய்து இரண்டு கதைகளைக் கேளுங்கள். கற்றறிந்தவனும் சிந்தாமணியும்

என்ற கதை, யானையின் கதை மற்றொன்று" என்று கதை சொல்லலானான்.

முன்னொரு காலத்தில் சாஸ்திரங்களை நன்கு கற்றுத் தேர்ந்த தனவந்தன் ஒருவன் இருந்தான். அவன் பளிங்கு போன்ற பிரகாசம் பொருந்திய இரத்தினக்கல் சிந்தாமணியைப் பெறுவதற்கு பூஜைகளும் இதர புனிதமான சடங்குகளும் பிரார்த்தனைகளும் புரிந்தான். ஒருவன் நினைக்கிறதெல்லாவற்றையும் வழங்கக்கூடிய சக்தி சிந்தாமணிக்குண்டு. அப்பேர்ப்பட்ட சிந்தாமணியைத் தேடிப் பயணமானான். தனக்கு முன்னால் சிந்தாமணி ஜ்யோதியாக ஜ்வலிப்பதைப் பார்த்தான். தனக்குள்ளே அவன் "இது சிந்தாமணியாயிருக்க முடியாது; அகோர தவத்தின் மூலமாகத்தான் சிந்தாமணியை அடையக்கூடும். அவ்வளவு தவத்தை நான் புரியவில்லை" என்று சிந்தித்த வண்ணம், இந்த பொன் போன்ற வாய்ப்பை இழந்தான். மீண்டும் இரத்தினக்கல்லை நாடி அலையலானான். கற்றறிந்த தனவந்தனை முட்டாளக்குவதற்காக சித்தர் ஒருவர் அவன் போகும் வழியில் சிறிய கண்ணாடித் துண்டு ஒன்றை வைத்தார். அந்த முட்டாள் பொய்யான அந்த வஸ்துவை நிஜமான இரத்தினக்கல் எனவே கருதினான். அதை எடுத்துக் கொண்டான். தான் விரும்பியதெல்லாம் தனக்கு அது வழங்கும் என்று எண்ணினான். இந்த நம்பிக்கையோடு தன்னிடமுள்ள எல்லாவற்றையும் தானம் செய்தான். இந்த பொய்யான இரத்தினக் கல்லை எடுத்துக் கொண்டு அவன் கானகத்துக்குள் புகுந்தான். ஏமாற்றத்துக்குரிய இந்த சிந்தாமணி இரத்தினக்கல் அவனுக்கு எவ்வித பயனும் தரவில்லை. தனது மிதமிஞ்சிய அஞ்ஞானத்தின் பொருட்டு அவன் பல்வேறு அவதிகளுக்கும் தொல்லைகளுக்கும் ஆளானான். இனி யானை கதை கேளுங்கள்.

பெரிய யானை ஒன்று விந்தியமலையில் வசித்து வந்தது. மாவுத்தன் ஒருவன் விரித்த வலையில் இந்த யானை சிக்கிக் கொண்டது. மாவுத்தன் அந்த யானையை வலுவான இரும்புச் சங்கிலிகளால் பிணைத்தான். அதற்கு நீளமான கூர்மையான

இரண்டு கொம்புகள் இருந்தன. கடினமான அச்சங்கிலிகளை அறுத்தெறிந்துவிட்டு ஒடியே விட்டது யானை. மாவுத்தன் விழுந்தான் கீழே. அப்பால் அவன் பள்ளம் ஒன்றைத் தோண்டி அதன் மேல் இலைகளும் புல்லும் போட்டு நிரப்பினான். அந்த யானை மீண்டும் இந்த அகழியில் சிக்கிக் கொண்டது. மறுபடியும் மாவுத்தனால் ஹிம்சிக்கப்பட்டது யானை. மாவுத்தன் கீழே விழுந்த சமயத்தில் மாவுத்தனைக் கொன்றிருந்தால் அகழியிலே யானை வீழ்ந்திருக்க முடியாது. அதுபோல முட்டாள்கள் தங்களுக்கு நேரவிருக்கும் அபாயங்களைத் தடுத்துக் கொள்ளக் கூடிய முன் ஆலோசனை அற்றவர்களாய் விந்தியமலை யானையைப் போல நிச்சயமாக வேதனைக்குள் அகப்பட்டு அவதிப்படுவார்கள்.

சிகித்வஜன், "ஓ, தெய்வீக இளைஞரே! கும்ப முனீஸ்வரரே! சிந்தாமணி, யானை இந்த இரண்டு தத்துவக் கதைகளின் உட்கருத்தைத் தயவு செய்து எனக்கு விளக்குங்கள்" என்றான். கும்பமுனி அடியில் வருமாறு விளக்கி உபதேசம் புரியலானார்.

சிந்தாமணியைத் தேடிய சாஸ்திரி வெறும் சாஸ்திரங்களின் ஆராய்ச்சியில் ஈடுபட்டவனே. உண்மை (தத்துவ) ஞானம் அவனுக்கு இல்லை; இரத்தினக் கல்லைத் தேடினான். ஆனால் அது எத்தகையது என்பது பற்றித் தெரிந்துகொள்ளவில்லை. அதே மனிதனே தாங்களும், திவ்ய சாஸ்திரங்கள் அனைத்தும் கற்றுத் தேர்ந்தும்கூட தங்களுக்கு மனோ அமைதி கிடையாது. தாங்கள் தங்கள் இராஜ்யம், மனைவி, இதர உறவினர்கள் எல்லாம் துறந்தீர்கள் - உண்மையான சிந்தாமணி இங்கே தான் உள்ளது. உண்மையான துறவு பற்றிய கருத்து உங்களுக்குக் கிடையாது. அகங்காரத்தையும் ஆசைகளையும் அழிப்பதன் மூலமாகத்தான் ஒருவன் பூரணத்தையும் ஸாந்தியையும் எய்துகிறான் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். உலகத்தைத் துறத்தல் அல்ல - ஆசைகளையும் அகங்காரத்தையும் துறத்தலால் தான் நீடித்த ஸாந்தியும் நித்தியானந்தமும் எய்தக் கூடும். உண்மைத் துறவு என்னும் இரத்தினத்தைத் தாங்கள்

இழந்துவிட்டீர்கள்; பொய்யான திருஷ்டியின் மூலம் வேதனை மிகுந்த தவங்கள் எனும் பொய்யான உடைந்த கண்ணாடித் துண்டை தாங்கள் பொறுக்கி எடுத்துக் கொண்டீர்கள். ஆகையால் உங்களுக்கு மனோவமைதி இல்லை. விலை மதிக்க வொண்ணாத சிந்தாமணி தங்கள் முன்னாலிருந்தும்கூட தவத்தின் மூலம் ஸாந்தியைப் பெறக்கூடும் என்று அபத்தமாக தாங்கள் கற்பனை புரிந்தீர்கள். சிந்தாமணியை அடைந்துவிட்டதாக தாங்கள் வீணாகச் சிந்தித்தீர்கள். ஆனால் உங்கள் இலாபத்திற்கு உடைந்த கண்ணாடித் துண்டு மதிப்புக் கூட கிடையாது என்று நீங்கள் கண்டுகொள்வீர்கள். மகத்தான இளவரசே! இப்போது விந்தியமலை யானைக் கதையின் அர்த்தத்தை எடுத்துக் கூறுகிறேன். இக்காட்டில் உள்ள ஆத்மா தான் அந்த யானை. இரண்டு நீளமான கொம்புகள் என்பவை வைராக்கியமும் விவேகமும், மாவுத்தன் அஞ்ஞானம். மாவுத்தனால் கட்டப்பட்ட யானை பலவிதமான வேதனைகளுக்கு இலக்கானது போல, அஞ்ஞானத்தால் பாதிக்கப்பட்டு தாங்கள் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். பிரம்மாண்டமான யானை இரும்புச் சங்கிலியால் கட்டுண்டது போன்று, தாங்கள், இரும்புச் சங்கிலியாகிய ஆசையால் கட்டுண்டிருக்கிறீர்கள். ஆசைகளோ இரும்பைக் காட்டிலும் அதிக வலிமை படைத்தவை. இரும்பு துருப்பிடித்து காலக்கிரமத்திலே பாழாகிப் போகிறது. ஆனால் ஆசைகளோ வெகுவாக வளர்ச்சியடைந்து தங்களைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டிருக்கின்றன. இரும்புச் சங்கிலிகளாகிய கட்டுகளை யானை உடைத்தது போல தாங்கள் தங்கள் இராஜ்யம், சிற்றின்பபோகம், மனைவி, உற்றார், நண்பர் முதலிய கட்டுகளை உடைத்தெறிந்து விட்டீர்கள். ஓ, இளவரசே! இரும்புச் சங்கிலிகளாகிய கட்டுகளை உடைத்தல் சாத்தியமே; ஆனால் ஆசைகள், நம்பிக்கைகள் மற்றும் எதிர்பார்க்கப்படும் எண்ணங்கள் ஆகிய கட்டுகளை உடைப்பதோ மிக மிகக் கஷ்டம். யானை அம்பாரியிலிருந்து மாவுத்தன் கீழே வீழ்ந்தான். சிற்றின்ப நுகர்வுக்கு அபேக்ஷையாயிருப்பதன் மூலம் தங்கள் அஞ்ஞானத்தை அழித்தலை இது குறிக்கிறது. ஆனால் உங்கள்

துறவு உண்மையானதல்ல. உண்மையான துறவின் இரகசியத்தைத் தாங்கள் அறிந்து கொள்ளவில்லை. யாவற்றையும் தாங்கள் துறந்துவிடவில்லை''. இங்ஙனம் சூடாலையாகிய கும்பமுனி விளக்கம் செய்தார்.

சிகித்வஜன் "எனது இராஜ்யம், எனது பொக்கிஷம் மற்றும் எனது பிரியமான மனைவி யாவற்றையும் துறந்திருக்கிற போது என்னுடையதெல்லாவற்றையும் துறக்கவில்லை என்று தாங்கள் எப்படிக் கூறுகிறீர்கள்? யாவற்றையும் நான் பரித்தியாகம் பண்ணியிருக் கிறேனல்லவா? இச்செயல்கள் அனைத்தும் உண்மையான பரிபூரணமான பரித்தியாகத்தைப் பண்ணவில்லையா? இன்னும் எதனை என்னிடமிருந்து பரித்தியாகம் பண்ணுவது?" எனக் கேட்ட போது, கும்பமுனி, "தாங்கள் தங்கள் இராஜ்யம், அரண்மனை, நண்பர்கள், உறவினர்கள், மனைவிகூட - இவற்றை நீக்கிவிட்டாலும், இவை உண்மையான பரித்தியாகமென நிலை நாட்டமாட்டா. இவற்றில் எதுவும் தங்களுக்கு உரிமை பாராட்டியது அல்ல. அவை தாமாக வந்து தாமாகப் போனவை. தங்களிடமிருந்து தாங்கள் இன்னும் தங்கள் அகங்காரத்தையும் ஆசைகளையும் துறக்கவில்லை. துக்கங்களை நிவர்த்தி பண்ணி நித்தியானந்தமும் ஸதா நீடித்திருக்கிற ஸாந்தியும் தாங்கள் பெறக்கூடும் ஆசைகளையும் அகங்காரத்தையும் அகற்றினால் மட்டுமே" என்று ஆணித்தரமாகப் பதில் பகர்ந்தார்.

அப்பால் சிகித்வஜன் "தற்சமயம் என்னுடையவை எல்லாம் கானகமாக அமைகிறது. இந்த பாறைகள், மரங்கள், புதர்கள் எனது உடமைகளாக விளங்குகின்றன. இவைகளையும் கூட விலக்கிவிட முற்றிலும் தயாராயி ருக்கிறேன் - அது உண்மையான துறவு ஆகுமேயானால்" என்றான். அதற்குக் கும்பமுனி "கானகத்தைத் துறப்பது உண்மையான பரித்தியாகம் ஆகாது. இன்னமும் உங்களிடம் ஆசையும் அகங்காரமும் இருக்கவே செய்கின்றது". எனவே, சிகித்வஜன் தனது மான்தோல், ஜபமாலை, குசப்புல், மட்பாத்திரங்கள் மற்றும் மரத்தாலான கிண்ணம் இவற்றைக்

குவித்து வைத்து உலர்ந்த விறகுகளைக் கொண்டு நெருப்பிட்டான். தன் பர்ணகசாலைக் குடிசையையும் கொளுத்தினான். அவன் கும்பமுனியிடம் "இப்போது நான் நிஜமான பரிபூரணமான துறவைப் பெற்றுவிட்டேன் எனக் கருதுகிறேன். ஓ, தெய்வீக இளைஞரே! என்னால் துறக்கப்பட வேண்டியது இன்னும் ஏதேனும் உள்ளதா? இப்போது நான் என்ன செய்யவேண்டும்?" என்று வினவினான். கும்பமுனி "மகா இரக்கமாயிருக்கிறது! எதையும் நீங்கள் துறக்கவில்லை" எனவும் சிகித்வஜன் தனக்குள், "மாமிசம், இரத்தம், எலும்புகள் இவை குவியலாகக் கொண்ட எனது உடல் மாத்திரமே உள்ளது. இம்மலை உச்சிக்கு ஏறி, பூமியின்மீது அடிபட்டு சுக்கல்சுக்கலாகப் போகும்படி என் உடலை வீழ்த்தி விடுகிறேன்" என எண்ணமிட்டான். அதைச் சொல்லிய வுடன், உயரமான ஓர் குன்றின் சிகரத்திற்கு ஏறிச் சென்று தன் உடலை கீழே எறியப்போகும் தருணத்திலே அவனுடைய குருதேவரான கும்பமுனி தடுத்து "என்ன முட்டாள்தனமான காரியத்தைச் செய்கிறீர்கள்? ஒரு குற்றமுமறியாத உங்கள் உடலை அழிக்க நீங்கள் ஏன் முயற்சி செய்கிறீர்கள்? ஆத்மஞானம் எய்தும் மார்க்கத்திலே இவ்வுடல் எப்படி தடையாயிருக்கும்? இவ்வுடலை நாசப்படுத்துவது நிஜமான பரிபூரணமான துறவு ஆகமாட்டாது. உன் உடலைச் சஞ்சலப்படுத்துகிற இயக்குகிற, எல்லா ஜனங்களுக்கும் கர்மாக்களுக்கும் விதையை உற்பத்தி செய்கிற சத்துரு ஒருவன் இருக்கிறான். உங்கள் உடலுக்குள்ள சத்துருவை நீங்கள் ஒழிக்கக்கூடுமானால், அப்பால்தான் தாங்கள் சர்வத் தியாகம் புரிந்தவர்களாக ஆவீர்கள்" என்று போதனை புகன்றார்.

சிகித்வஜன் "ஓ, கும்பமுனிபுங்கவரே! அப்படி உடலைச் சஞ்சலப்படுத்துகிறது எது? அதைக் கூறுங்கள். புனர்ஜன் மங்களுக்கு வேராக உள்ளது எது? எதிர்கால வாழ்வுகளிலே ஏற்படக்கூடிய செயல்களுக்கும் துக்கங்களும் வேறாக இருக்கிறது எது? எதை நீக்குவதன் மூலம் துவந்தங்கள் நிறைந்த இப்பிரபஞ்சத்தில் யாவற்றையும் தள்ளி நீக்கக் கூடுமோ அதைப் பற்றிக் கூறுங்கள். தெய்வீக இளைஞரே! இந்த உடலை

இயக்கவும் சஞ்சலப்படுத்தவுமாயிருக்கிற ஒன்றை நான் நீக்குவதற்கு உள்ள சாதனங்களை எடுத்துக் கூறுங்கள்" எனவும், கும்பமுனி "இந்த மனம் எல்லாத் தொல்லைகளுக்கும் துயரங்களுக்கும் வேராக இருக்கிறது. இதுவே ஜீவன், பிராணன், புத்தி, அஹங்காரம் என்ற பல்வேறு பெயர்களால் தெரியவருகிறது. அது சங்கல்பங்களை உற்பத்தி செய்கிறது. அது ஜீவனை மாயாஜாலப் பொருள்களோடு சொந்தப்படுத்துகிறது. அது மாயையின் வாசஸ்தலம் உனது உடலுக்கு மூல ஊற்றாக உள்ளது. மந்தமில்லாததாகவோ மந்தமுள்ளதாகவோ அது இல்லை. சதாசஞ்சலிக்கின்ற இந்த மனம் இவ்வுலகத்தை அமைக்கிறது. அது பந்தத்தை விளைவிக்கிறது. காற்று எங்ஙனம் மரத்தை அசைத்து விடுகிறதோ அங்ஙனம் இம்மனமானது இவ்வுடலை இயக்கிச் சஞ்சலப்படுத்துகிறது. விஷமத்தனம் வாய்ந்த இம்மனம் சகல கர்மாக்களுக்கும் கருவாக இருக்கிறது. மனத்தின் ஆட்சிக்குள் இருக்கிறவன் சதா கவலைகளுக்கும் கலக்கங்களுக்கும் தொல்லைகளுக்கும் துக்கங்களுக்கும் இடுக்கண்களுக்கும் இலக்காகின்றான். ஆகையால் இந்த மனத்தை நீக்குவதன் மூலம் இவ்வுலகத்திலுள்ள ஒவ்வொன்றையும் நிஜமாக நீக்குகிறீர்கள். மனஒழிப்பு உண்மையான துறவாக அமைகிறது. இது மட்டுமே ஆத்மஞானமும் நித்தியானந்தமும் எய்துவதற்கு உதவியாகும். ஆத்மஞானத்தை நீங்கள் அடைகிறபோது பிரம்மன் அல்லது பரமாத்மாவோடு நீங்கள் அபேதமாக ஆகிவிடுகிறீர்கள்" என்று போதிக்கலானார். 'ஒ, முனீஸ்வரரே! இந்த மனம் என்பது என்ன? இதன் நிஜமான இயல்பு என்ன? இம்மனத்திற்குக் காரணம் என்ன? இதன் நிஜமான இயல்பு என்ன? இம்மனத்திற்குக் காரணம் என்ன? விஷமத்தனமுள்ள இம்மனத்தை நான் எப்படி நாசம்பண்ண முடியும்?" என்று வினவினான்.

கும்பமுனி உபதேசம் புரியலானார் : "மனம் வாசனைகளின் ஒர் மூட்டை. மனத்தின் இயற்கைத் தன்மை வாசனைகளில் அடங்கியிருக்கிறது. மனமும் வாசனைகளும் சம அர்த்தமுள்ளவை. வாஸனைகள் அல்லது சூட்சும

ஆசைகளை ஒழிப்பது அஞ்ஞானிகளுக்கு மிகவும் கடினமாகும். அஹங்காரம் மனமாகிய மரத்திற்கு வித்து ஆகும். மனம் உடலை இயக்குகின்ற இயந்திரம். இதயமாகிற தாமரையைச் சுற்றி வட்டமிடுகிற தேனீ அது. புத்தி அஹங்காரவித்தினின்று முளைக்கின்ற துளிர் ஆகும். மனமாகிற இந்த மரத்திற்கு உடல் தண்டு ஆகும். சங்கல்பங்கள் சிறிய கிளைகளைக் கொண்ட கிளைகள், அவை புத்தியாகிற துளிரினின்று முளைப்பவை. அது செய்கின்ற அலுவலுக்குத் தக்கவாறு மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கு வடிவங்களை ஏற்றுக் கொள்கின்றது. சங்கல்ப - விகல்பங்கலைப் புரிகின்றபோது அது மனம். ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்திக் கொள்கிறபோது, அது சித்தம் எனப்படும். அது தீர்மானிக்கிறபோது புத்தி என்கிறோம். ஆத்மாவிடம் வீம்பு பாராட்டுகிற போது அது அஹங்காரம் என்ற பெயரை வகிக்கிறது. மனமாகிய மரத்தின் கிளைகளை தினந்தோறும் வெட்டுவீர்களாக. இறுதியில் அடிவேரோடு முற்றிலும் மரத்தை அழித்துவிடுங்கள். கிளைகளை வெட்டுதல் இரண்டாந்தரமானது. பிரதான காரியம் விஷமான விருக்ஷத்தை உடனே வேரோடு வெட்டிச் சாய்த்தலே ஆகும். வாசனைகள் எனும் கிளைகள் கணக்கிலடங்காத கர்மாப் பயிர்களை விளைவிக்கும். ஞானமாகிற வாளாயுதத்தால் வாசனைகளை அழித்துவிடுங்கள். நீங்கள் ஸாந்தியை அநுபவிப்பீர்கள். மனமாகிற மரத்தின் விதையாகிய அஹங்காரத்தை எரித்துவிடுங்கள்" என்றார் கும்பமுனிவர். சிகித்வஜன் "ஓ, மரியாதைக்குரிய முனிசிரேஷ்டரே! மனமெனும் மரத்தின் விதையை எரிக்கத்தக்க நெருப்பு எது என்பதைப் பற்றி எனக்குச் சொல்லுங்கள்" என்று பணிவுடன் வினவ, கும்பமுனி "மனமாகிய மரத்தின் விதையாகிய அஹங்காரத்தை எரிக்கவல்ல நெருப்பு பிரம்மஞானம் அல்லது ஆத்மஞானம். நான் அல்லது நான் யார்? எனும் விஷயங்களின் உண்மையான தன்மையை விசாரிப்பதன் மூலம் இந்த ஞானம் பெறக்கூடும்" என்று பதில் மொழிந்தார்.

சிகித்வஜன், "ஓ, முனிவரே! நான் என்னும் விஷயத்தின் உற்பத்தியைப் பற்றி பல்வேறு வழிகளிலே இடைவிடாமல் விசாரணை புரிந்துள்ளேன். நான் இந்த உடலோ பிராணனோ அல்ல, இந்த மனமோ புத்தியோ அல்ல, அங்கங்களோ அகங்காரமோ அல்ல" என்று கூறவும்; கும்பமுனி, "இவைகளில் எதுவும் தாங்கள் அல்லவென்றால் தங்களைப்பற்றி நிஜமாக என்ன நினைக்கிறீர்கள்? நான் என்பது இவையெல்லாம் அல்ல என்றால், பின் வேறே அது எது" எனக் கேட்க, சிகித்வஜன் "மிகுந்த மரியாதைக்குரிய மஹாமுனிவரே! தூய்மையான புத்திமயமான அந்த ஆத்மா அல்லது சுயேச்சையான உணர்வு நானாக இருக்க உணருகிறேன். மனத்தின் விதை அஹங்காரத்தை விட்டொழிக்க என்னால் இயலவில்லை. அதை ஒழிக்க என்னாலான பிரயத்தனம் எல்லாம் செய்தேன். எவ்வளவுக் கெவ்வளவு அதை ஒழிக்க நான் முயற்சிக்கிறேனோ அவ்வளவுக்கவ்வளவு அதிகமாக அது என்னைப் பற்றிக் கொள்கிறது" என்று விடை கூறினான். கும்பமுனி, "ஏதோ ஒரு காரணத்திலிருந்து ஒவ்வொரு காரியமும் நிகழுகிறது. எங்கணும் உள்ள இயற்கையின் பொதுவிதி இது. அஹங்காரத்தின் காரணத்தைக் கண்டுபிடியுங்கள். தங்கள் அஹங்காரத்திற்குள்ள காரணத்திலே பரிசோதனை செய்யுங்கள்; அது என்ன என்பதை என்னிடம் கூறுங்கள்" என்றார். சிகித்வஜன் "வெறும் மாயை என் அஹங்காரத்திற்குக் காரணம். அறிவு அஹங்காரத்திற்குக் காரணம். ஓ, தெய்வீக இளைஞரே! வெளிப்புறப் பொருள்கள் மீதுள்ள சிந்தனைகளைத் தணிப்பதற்கான சாதனங்களைப் பற்றிக் கூறுங்கள். வெளிப்புறத் தோற்றங்களை நாமரூபங்களை எவ்வாறு நான் நீக்குவது?" என்று கேட்டான். அதற்குக் கும்பமுனி "அறிவுக்குக் காரணத்தை நீங்கள் கூறினால், அப்பால் காரண காரிய முறையைப் பற்றியும் சிந்தனைகளை ஒடுக்கும் வழிமுறையையும் அகங்காரத்தை அழிக்கும் வழியையும் எடுத்து விளக்கக்கூடும்" என்றார். சிகித்வஜன், உடல், மரம், நதி, மலைகள், பசு, குதிரை முதலிய மாயா சம்பந்தமான பொருள்கள் மூலமாக அறிவு

உண்டாகிறது. பொருள்கள் இல்லாவிடில், எதைப்பற்றியும் நினைக்கவோ அறிந்துகொள்ளவோ இயலாது. பொருள்கள் இன்றேல், அவைகளைப் பற்றிய அறிவே நமக்கு இராது. அப்பால், மனதின் விதையாகிய அகங்காரம் உறிஞ்சப் பட்டுவிடும்" என்று சொல்லலானான்.

கும்பமுனி, "உடலும் ஏனைய பொருள்களும் உள்ளபோது, கண்ணுக்குத் தோன்றுகிற பொருள்களின் அறிவு கூடவே இருக்கும். உடலும் பொருள்களும் நிஜமாகவே இல்லையாதலால், அறிவுக்கு அடிப்படை பின் எதற்காக? நீங்கள் உங்கள் உடலை நிஜமான பொருள் என்று நம்பினால், ஓ இளவரசரே! உங்கள் அறிவு உங்கள் ஆத்மா உடலைவிட்டுப் பிரிந்த பிறகு எதை நம்புகிறது?" என்று வினவ, சிகித்வஜன், "ஒவ்வொருவனாலும் பார்க்கப்படுகிற உடல் சகல கர்மாக்களின் பலன்களையும் அனுபவிக்கிறது. இத்தகைய உடல் எவனாலும் பொய் என எடுத்துக்கொள்ள இயலாது. எல்லோராலும் பார்க்கப்படுகிற உடல்; கைகள், கால்கள் கொண்டு பல்வேறு காரியங்களைப் புரிகிறது. இந்த உடலை யார் திரஸ்கரிப்பது? உடல் இருக்கிறதில்லை என்று எப்படி நாம் இயம்ப இயலும்?" என்று பேசினான். கும்பமுனி, "ஜனனத்திற்கு முன் உடல் இருக்கவில்லை; அதன் அழிவுக்குப்பின் உடல் இல்லை. தொடக்கத்திலும் இருக்காமல் இடைக் காலத்தில் மாத்திரம் தோன்றுகிறதால், அது மாயையானது. நிஜமாக இல்லாததொன்று. கர்மங்களின் மூலமாக உண்டு பண்ணப்பட்ட இந்த உடல் தானாக காரணமாயில்லை. எனவே, அறிவின் காரியம் தானாகவே இல்லாததொன்று. ஏதோ ஒரு காரணத்தால் உண்டு பண்ணப்படாத எதுவும் இருக்கிறதாகக் கூறப்படமாட்டாது. அதைப் பற்றி நாம் வகிக்கும் அறிவு அல்லது உணர்வுதானே மாயையானது. ஆகையால், அறிவாகிய மாயையின் மூலம் விளைவிக்கப்படுகிற அகங்காரமும் இதர காரியங்களும்கூட இல்லாதவைகளே. யாருக்காவது எத்தகைய பொருளாவது உண்மையான காரணமில்லாமல் தானாகத் தோன்று மேயானால், மணலில் தோன்றும் கானல் நீர் போன்று

பொய்யாகிறது. காரணங்கள் என்ற தன்மையில்லாத பொருள்கள் அனைத்தும் கிளிஞ்சலில் வெள்ளிபோலவும் அல்லது கம்பத்தின் கள்வன் போலவும் பொய்யானவை. உடல் மற்றும் அகங்காரம் இவற்றை உண்மையென நம்புதல் மலடி வயிற்று மகனுடைய உடலை அலங்கரிப்பது போலிருக்கிறது" என்றார். சிகித்வஜன் "நமது தகப்பனார்களை நமது உடல்களை உற்பத்தி செய்தவர்கள் எனவும் உடல்களுக்குக் காரணங்கள் எனவும் எடுத்துக்கொள்ளக் கூடாதா?" என வினவினான். உடனே கும்பமுனி "தகப்பனார் காரணம் ஆகமாட்டார். அவருக்கு இன்னொரு காரணம் உண்டு" என்றார். சிகித்வஜன் "நமது உற்பத்திக்கு நமது பெற்றோர்கள் காரணங்கள் என்று நிச்சயமாக மதிக்கலாம். நமது பெற்றோர்களின் ஜனனங்களுக்கு நமது பாட்டன் பாட்டிகளே காரணங்கள். பிரம்மனை நாம் முதலாவது பெரிய பாட்டனாகவும், மனித குலத்திற்கு பிரதான சிருஷ்டிகர்த்தா ஆகவும் நாம் மதிக்க வேண்டும். இதில் நான் சரியாகப் பேசுகிறேனா? ஓ, மதிப்பிற்குரிய கும்பமுனியே" என்றான். கும்பமுனி, "பிரதான சிருஷ்டிகர்த்தா, பெரிய பாட்டனாரான பிரம்மன் அசலான காரணமாக இருக்கமுடியாது. ஏனெனில் அவர் தமது பிறப்புக்கும் ஓர் காரணம் தேவையாகிறது. அத்வைத, சுயம்புவான, சுயம்பிரகாசமான பிரம்மம் மட்டுமே சிருஷ்டிக்கு முன் பிரகாசித்துக் கொண்டிருக்கிறார்.

இப்பிரபஞ்சம் வெறும் தோற்றம்; கானலில் நீர் போல இது தோன்றுகிறது. எனவே பிரம்மன் சிருஷ்டி கர்த்தா எனக் கருதுவது தவறான கோட்பாடு. பெரிய பாட்டன் இருந்தார் என்பது அபத்தம். சிருஷ்டி என்பது எதுவுமே கிடையாது. எல்லா ஜீவராசிகளும் சிருஷ்டிக்கப்பட்டவை என்பது கூட அபத்தம் (இது சுயேச்சையான கடவுளின் நோக்கிலிருந்து) என்று விளக்கலானார். சிகித்வஜன் "பரப்பிரம்மன் பிரம்மாவுக்குக் காரணம், நிச்சயமாக இது சரியில்லையா? மரியாதைக்குரிய மகாமுனிவரே!" எனக் கேட்க, கும்பமுனிவர், பரப்பிரம்மன் ஜனனமற்றது, மரணமற்றது, காரணமற்றது, மாறுதலற்றது, காலமற்றது, செயலற்றது,

ஆதியற்றது, அந்தமற்றது. அவர் காரணமாயிருக்க முடியாது. அவர் நடிக்கிறவராகவும் இரசிக்கிறவராகவும் இருக்க முடியாது. ஒரே ஒரு உயிருள்ள உண்மைப் பொருள் உண்டு. அவர் தான் பிரம்மன். பிரம்மஞானம் எய்தி அவித்தையை ஒழிப்பீர்களாக. பிரபஞ்சம் முழுவதும் மறையும்; எங்கணும் ஆத்மாவை மாத்திரமே நீங்கள் காண்பீர்கள்" என்று உபதேசித்தார். சிகித்வஜன் "பெருந்தன்மையான குருதேவரே; நான் இப்பொழுது உண்மையைக் காண்கிறேன். இப்பொழுது நான் தூய்மையான சர்வ வியாபகமான சுதந்திரமான, அமரத்துவ ஆத்மாவாக உணருகிறேன். நான் ஸாந்தமாயிருக்கிறேன். சர்வ ஆனந்தமயமான ஆத்மாவிலே நான் ஸ்தாபிதம் பெற்றிருக்கிறேன். காணுகின்ற பிரபஞ்சம் உண்மையாக இருக்கிறதில்லை. என்னை மாயை தொட மாட்டாது. நான் பிரம்மன். நான் பகுக்கவொண்ணாத சுயம்ஜோதியான ஆத்மா. பிரம்மனிலே நான் லயமாகி விட்டேன்" என்று செப்பினான். கும்பமுனி, "முக்திக்குரிய நான்கு சாதனங்களைப் பெற்றிருக்கிறவனும் ஸாந்தமாயும் களங்கமில்லாமலும் இருக்கிறவனும், தற்சோதனை செய்து கொள்கிறவனும், இச்சையடக்கமும் புலனடக்கமும் கொண்டவனுமாக ஓர் சிஷ்யன் இருப்பானானால் குரு உபதேசங்கள் அச்சிஷ்யனுடைய உள்ளத்திலே பதிந்துவிடும். தாங்கள் ஞானம் நிறைந்தவர்கள். தாங்கள் இலட்சியத்தைப் பெற்றுவிட்டீர்கள். ஆத்மஞானத்தோடு ஜ்வலிக்கிறீர்கள்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

சிகித்வஜன் "ஓ, மரியாதைக்குரிய மகாகுருவே! சுதந்திரமடைந்த மாமுனிவர்கள் உலக க்ஷேமம் அல்லது ஐக்கியத்திற்காகப் பாடுபடுகிறார்கள். அவர்கள் மனத்தின் மூலமாகச் செயல்களைச் செய்யவில்லையா? ஒருவன் மனமில்லாமல் எப்படி வேலை செய்யக்கூடும். இந்த விஷயத்தைக் குறித்து தயவு செய்து விளக்குங்கள்" என்றான் கும்பமுனி, "மனம் இருவகையாயுள்ளதாகக் கூறப்படுகிறது. சுத்தம், அசுத்தம். ஆசையின் நினைவுடன் தொடர்பு கொண்டது அசுத்த மனம்; ஆசையற்றது சுத்தமனம் என்ற பெயரால்

அறியப்படுகிறது. அசுத்த மனம் கீழான மனம் என அழைக்கப்படுகிறது.

மனிதர்களுக்கு அவர்களுடைய மனம் மாத்திரமே பந்தம் அல்லது மோக்ஷத்திற்குக் காரணமாயிருக்கிறது. புலன் நுகர்வுப் பொருள்களினால் கவர்ச்சியடைந்த மனம் பந்தத்திற்கு ஏதுவாயும் அவ்வாறு கவர்ச்சியடையாத மனம் மோக்ஷத்திற்கு ஏதுவாயும் உள்ளது. புலன்நுகர்வுப் பொருள்களிடத்தில் ஆசையில்லாத மனத்திற்கு மோக்ஷம் இருப்பதாக கூறப்படுகிறது. ஆகையால் மோக்ஷத்தைப் பிரியப்படுகிற சாதகன் தனது மனத்தை சதாகாலமும் சுகபோகப் பொருள்கள் மீதுள்ள பற்றுக்கள் அவ்வளவினின்று விடுபட்டதாக வைத்துக் கொள்ள வேண்டும். அசுத்த மனம் அசுத்த வாஸனைகள் மற்றும் இரஜஸ், தமஸ் ஆகியவற்றால் நிரம்பப் பெற்றிருக்கும். சுத்தமனம் சுத்த வாஸனையோடு சத்வ குணம் நிரம்பப் பெற்றிருக்கும். அசுத்த வாஸனைகள் மறுபிறப்புக்களை உற்பத்தி பண்ணும். தூய வாசனைகளோடு கூடிய சுத்த மனமோ ஜனன மரணங்களிலிருந்து மோக்ஷத்திற்கு இட்டுச் செல்லும்.

உலகாயத மக்கள் கீழான அல்லது அசுத்த மனத்தோடு உழைக்கிறார்கள். அவர்கள் தங்கள் கர்மங்களினால் கட்டுண்டு விடுகிறார்கள். விடுபட்ட முனிவர்கள் தூய அல்லது ஸத்துவ மேலான மனத்தோடு வேலை செய்கிறார்கள்; அவர்கள் தங்கள் கர்மங்களினால் கட்டுண்டிருக்கவில்லை; ஏனெனில் அவர்களிடத்தில் அஹங்காரம் கிடையாது; தாங்கள் செய்யும் தொழில்களினின்று பலன்களை எதிர்பார்க் கிறதில்லை. அசுத்த மனம் சமநிலையற்றது. அது சதா சஞ்சலிக்கின்றது. ஒரு பொருளினின்று மற்றொன்றுக்கு அதுதாவுகிறது. புலன்நுகர்வுப் பொருள்களை நாடி சதா அதிக ஆசைப்படுகிறது. பலவகைகளான அச்சங்களினாலும் வலிகளினாலும் அது நிரம்பப்பெற்றிருக்கிறது. சுத்தமனம் சமநிலை படைத்தது. அது பிரம்ம விசாரணை செய்கிறது; அது (பிரம்மனிலே) பரமாத்மாவிலே இளைப்பாறுகிறது.

புலன்நுகர்வுப் பொருள்களை நாடி நகருகிறதில்லை. எல்லா வகைப்பட்ட அச்சங்களிலிருந்தும் வலிகளிலிருந்தும் அது விடுபட்டிருக்கிறது. அசுத்த மனம் வாஸனைகளைத் (சூட்சும ஆசைகள்) தவிர வேறல்ல; இது எண்ணிக்கையற்ற பிறப்புகளை உற்பத்தி செய்கிறது. மனம் அதன் சஞ்சலிக்கின்ற தன்மையினால் பலவிதமான ஆசைகளுக்கு இரையாகின்றது. சஞ்சலிக்கின்ற தன்மை ரஜோ குணத்தாலும் விக்க்ஷேப சக்தியாலும் உண்டாக்கப்படுகிறது. மனம் சஞ்சலிக்கிறபோது, அது ஒரு பொருளிலிருந்து மற்றொன்றிற்கு அலைகிறது. அஞ்ஞானி அல்லது உலகாயத மனிதன் அசுத்த மனத்தினால் அலைக்கழிக்கப்படுகிறான். அவன் கீழான அல்லது அசுத்தமனத்தின் தூண்டுதல்களுக்கு ஏற்ப செயலாற்றுகிறான். ஆனால் ஒரு முனிவர் அல்லது ஞானி தமது மனத்தை பூரண கட்டுப்பாட்டிற்குள் வைத்துக்கொண்டிருக்கிறார். அவர் தமது சகஜ ஞானமயமான அந்தராத்மாவின் குரலின்படி செயல்படுகிறார். அழுக்கின் மூலம் அழுக்கைப் போக்குகிறான் வண்ணான்; பிரயாணி தன் காலில் தைத்த முள்ளை மற்றொரு முள்ளினால் எடுத்துக்கொள்கிறான். அதுபோல அசுத்த மனம் சுத்தமனத்தால் கொல்லப்பட வேண்டும். கீழான அல்லது அசுத்த மனத்தைப் புறக்கணித் தவன் தன்னிடமிருந்து வெகு தொலைவிலே மறுபிறப்புக்களை ஓட்டி விடுகிறான். வலிகள் எவையும் அவனைப் பாதிக்காது. முனிவர் செயல்களை ஆற்றுவதற்குத் துணையாயுள்ளதூய வாசனைகள் அவருக்கு மறுபிறப்புக்களை வழங்குவதில்லை. நீங்கள் ஆத்ம அல்லது பிரம்மஞானத்தைப் பெற்றுவிட்டால், அசுத்த வாஸனைகள் எல்லாம் முற்றிலும் விடுபட்டுப் போகும். தியானம், ஜபம், கீர்த்தனம், பிராணாயாமப் பயிற்சி, பிரம்மவிசாரணை, மதசம்பந்தமான நூல்களைக் கற்றல் ஆகியவை தூய வாஸனைகளை உற்பத்தி பண்ணுகின்றன. பொருள்களைப் பற்றி ஆசைகளிலிருந்து உள்ளம் விடுபட்ட பொழுதும் ஆத்மாவில் அது இளைப்பாறும் பொழுதும், நீங்கள் நித்தியானந்தத்தை அநுபவிப்பீர்கள். பொருள்கள் மீதுள்ள ஆசைகள் அல்லது பற்றுக்களிலிருந்து மனம் விடுபட்டிருக்கும் போதும் இதயத்தில் அது

கட்டுப்படுத்தப்பட்டிருக்கும் போதும் அது ஆத்மாவின் நிஜத்தன்மையைப் பெற்றிருக்கும் போதும் நீங்கள் மோக்ஷம் அல்லது வாழ்க்கையில் இறுதி இலட்சியமாகிய சொர்க்கம் கிடைக்கப் பெறுவீர்கள். ஒ இளவரசரே! மனத்தை சஞ்சலிக்க விடாதீர்கள்; உங்கள் மனத்தை ஜடப் பொருள்களை நாடுகிற பற்றுக்கள் எல்லாவற்றினின்றும் விடுபட்டதாகச் செய்து கொள்ளுங்கள்; கீழான அல்லது அசுத்த மனத்தை சுத்த அல்லது மேலான மனத்தின் துணையைக் கொண்டு நீக்கிவிட்டு, மேலான மனத்தைக்கூட கடந்து மேலே செல்லுங்கள். பாறையைப் போன்று தாங்கள் உறுதியோடு இருப்பீர்களாக. தாங்கள் சுத்த அல்லது சாத்வீக மனத்தை வாய்க்கப் பெறுவீர்களாக. தாங்கள் சதாகாலமும் சர்வ ஆனந்த நிறைவான ஆத்மாவிலே அமைதியாக இளைப்பாறு வீர்களாக'' என்று உபதேசித்தார்.

சிகித்வஜன், "மரியாதையுள்ள மகா குருதேவரே இப்பிரபஞ்சத்தின் உற்பத்தி நாசம் பற்றி ஏதாவது கூறுங்கள். ஜீவாத்மா, சதா தூய்மையாயும் சுயம் ஜ்யோதியாயுமுள்ள பரமாத்மாவோடு எங்ஙனம் கலந்து ஐக்கியமாகும்?" என்று வினவினான். கும்பமுனிவர் "காண்பதெல்லாம் அழியக் கூடியவை; ஒவ்வொரு பிரளயம் அல்லது மகா கல்பத்தின் இறுதியிலே அவை அழியும். ஸாந்தமாயும், சர்வ வியாபகமாயும், அழியவொண்ணாததாயும், ஆனந்த நிறைவாயும் தூய்மையும் பிரகாசமும் நிறைந்ததாயுமுள்ள பிரம்மன் மாத்திரமே சதாகாலமும் இருக்கும். தண்ணீர் குறிப்பிட்ட காலத்தில் அலையாக மாறுகிறதுபோல, இவ்வுலகம் பரமாத்மா அல்லது பிரம்மனிலே எழுகிறதும் விழுகிறதுமாய் இருக்கிறது. வளையல்கள், மோதிரங்கள் மற்றும் பல்வேறு நகைகள் தங்கத்திலிருந்து வந்திருப்பது போன்று நாமரூபங்கள் கொண்ட இந்த உலகம் பிரம்மனிடமிருந்து வந்துள்ளது. அலையானது கடல் நீரைத் தவிர வேறல்ல; அதுபோல, இப்பிரபஞ்சம் அத்வைத சின்மாத்திரை (சுயேச்சையான சைதன்யம்) தவிர வேறல்ல. பிரம்மன், சிவன், சத்தியச் சின்மாத்திரை, சத் மற்றும் சித்

ஆகியவை அனைத்தும் சமானார்த்தமுள்ள பதங்கள். உள்ளத்திலே ஓர் அசைவு இவ்வுலகை உற்பத்தி பண்ணுகிறது. தாங்கள் ஆத்மசாக்ஷாத்காரம் பெற்று விட்டீர்களானால், பிரபஞ்சம் மறையும். கயிற்றின் மீது பாம்பு ஆரோபிக்கப்பட்டிருப்பது போல மாயாஜால இந்த உலகம் பிரம்மன் மீது ஆரோபிக்கப்பட்டிருக்கிறது. மோதிரங்கள் வளையல்கள் முதலியன தங்கத்தின் விவர்த்தா ஆகிறதுபோல, இவ்வுலகம் பிரம்மனுடைய விவர்த்தாவாக இருக்கிறது. அஞ்ஞானிக்கு மாத்திரம் இவ்வுலகம் நிஜமானது. ஆழ்ந்த தியானம் பழகினால், தாங்கள் திவ்விய பார்வையை விருத்தி செய்து கொள்வீர்கள். நேரடியான சகஜ ஞானமயமான காட்சி மூலம் பிரம்மன் அல்லது பரமாத்மாவை தாங்கள் தரிசிப்பீர்கள். பிரம்மன் மாத்திரமே நிஜமான இருப்பு. சர்வத்திற்கும் அவர் ஆத்மா. அனைத்திற்கும் அனைத்துமாய் இருக்கிறார். இப்பிரபஞ்சத்தின் ஸத்து. இயற்கையிலுள்ள வெவ்வேறு தன்மைக்குள் நானாவிதங்கள். இவைகளிலே ஒருபோதும் துவைதத்திற்கு இடம் கொடுக்காமல் அவர் வியக்திப் பொருளாக இருக்கிறார். உலகத்தின் தன்மையைப் பற்றியும் நமது அஹங்காரத்தைப் பற்றியும் விசாரணை செய்வது பயன்அற்றது. ஏனெனில் அவை நிஜமாக இருக்கிறதல்ல. கயிற்றில் பாம்பு போல அவை வெறும் மாயாமயமான தோற்றங்களே, அஹங்கார உணர்ச்சி மற்றும் உலகம் எனும் பதம் இவை வெறும் அர்த்தமற்ற சொற்கள். மனிதர்களால் கண்டுபிடிக்கப்பட்டவைகள். "நான்" "நீ" "இது" "அது" ஆகிய சொற்கள் ஒன்றிலிருந்து மற்றொன்றை அடையாளங்கண்டு கொள்வதற்காகக் கண்டுபிடிக்கப் பட்டவை. நமது கற்பனையால் இவை சிருஷ்டிக்கப்பட்டவை. இவை நிஜமாக இருப்பன அல்ல. "நான், நீ, அவன், அது, இது, இவை யாவும் சொப்பனங்களின் தோற்றம் போன்றவை" என்று விளக்கினார்.

சிகித்வஜன், "மரியாதை வாய்ந்த முனிவரே! மனம் போல வேறு ஒரு பொருள் இல்லை என்று நான் அறிகிறேன்" எனவும், கும்பமுனிவர், "இவ்வுலகம் நிஜமாக இருப்பதல்ல,

மனதைப் போல நிஜமான மூர்த்தி எக்காலத்திலும் எந்த இடத்திலும் எப்படியும் கிடையாது. உலகமே இருக்கிறதில்லை எனும்போது, ஒரு மனம் எங்ஙனம் இருக்கக்கூடும்? இவ்வுலகம் ஏகமான பிரம்மன் மாத்திரத்திலிருந்து உதயமான ஸாராம்சம். பிரம்மனைத் தவிர்த்து வேறாக எந்த உலகமும் கிடையாது. நம் முன்னால் இங்கே காணப்படும் எவையானாலும் சரி பிரம்மனிலே இருப்பு கொண்டிருக்கின்றன. காற்றில் புயல் கலக்கிறது போலவும் நகைகள் தங்கமாக உருகுவனபோலவும், இவ்வுலகம் பிரம்மனிலே அமிழ்ந்துவிடுகிறது. முனிவர் இவ்வுலகைப் பார்ப்பதில்லை. எங்கணும் அவர் ஆத்மாவையே காண்கிறார். இவ்வுலகம் அஞ்ஞானிகளின் பார்வையிலே தோன்றுகிறது. தீவட்டியில் சுழலும் பந்தத்தினால் தோன்றும் ஒரு வட்டம் எவ்வளவு பொய்யோ அவ்வளவு பொய்யானது இவ்வுலகம்; அஞ்ஞானத்திற்கு மறுபெயர் மனம். மனம் ஒன்றுமில்லை. உண்மையல்லாதது ஒன்று உண்மையுள்ளதாகத் தோன்றுகிறது. மனிதர்களை மறுபிறப்பு எடுக்கக் காரணமாயிருக்கிற ஜட ஆசை மனம் என்ற பெயரால் அறியப்படுகிறது. ஓ, இளவரசரே! பிறப்பற்றவரும், பகுக்கவொண்ணாதவரும், நித்தியரும், சதா ஸாந்தமாயுள்ளவருமான பிரம்மனோடு சதா இணைந்து இளைப்பாறுவீர்களாக" என்றார். சிகித்வஜன் "முனிபுங்கவரே! விடுதலை பெற்றவர்களான ஜீவன் முக்தர்கள் இவ்வுலகிலே எப்படி நடந்து கொள்கிறார்கள் என்பதைப் பற்றித் தெரிவியுங்கள்" என்று வினாவினான். கும்பமுனிவர் "விடுதலை பெற்ற முனிவர்கள் ஆசைகளினின்று விடுபட்டவர்கள். அவர்கள் தங்கள் மனத்தை நாசப்படுத்திவிட்டார்கள். அவர்கள் தங்கள்புலன்களை பூரண கட்டுப்பாட்டிற்குள் அடக்கியுள்ளார்கள். அவர்கள் திவ்ய பண்புகள் நிறைந்தவர்கள். அவர்கள் எப்போதும் சமநிலையும் சமதிருஷ்டியும் வாய்க்கப் பெற்றவர்கள். ஸ்வர்க்கத்திற் காகவோ தங்கள் செயல்களுக்கான பரிசுகளுக்காகவோ அவர்களிடம் ஆசை கிடையாது. வாழ்வின் எல்லாச் சூழ்நிலைகளிலும் சமமான மனப்பான்மை வாய்ந்தவர்கள்"

என்றார். சிகித்வஜன் "கண்ணியமான குருதேவரே! தனது நிலையான தன்மையோடு ஒரு பொருளின் வேகம் எப்படி ஒரே மாதிரியாக இருக்ககூடும்?" எனக் கேட்டான்.

கும்பமுனிவர் "ஒரே ஒரு வஸ்துதான் உள்ளது. இது பிரம்மன். இது மாத்திரமே ஒரு ஸத்து. இது சர்வ வியாபகமாயும், வர்ணிக்க இயலாததாயும், சிந்தனைக்கு எட்டாததாயும் குணங்கள் அற்றதாயும் இருக்கிறது. ஆத்மஞானம் பற்றிய நூல்களை நீண்டகாலம் கற்பதாலும், ஸத் சங்கத்தாலும் இடையறாத் தியானத்தாலும் ஒருவன் ஆத்மஞானத்தை அடையக் கூடும். இந்த ஆத்மா சமுத்திரஜலம் போன்றுள்ளது. சமுத்திரஜலம் பெரிய அலைகள் இயக்கப்படுவது போல இந்த ஆத்மா அதன் புத்தியால் இயக்கப்படுகிறது. இந்த, பிரம்மன் பிரபஞ்சத்தின் வடிவாக அஞ்ஞானிகளால் காணப்படுகிறது. புத்தி சதாகாலமும் சுறுசுறுப்புடனும் வேலையில் ஈடுபட்டும் இருக்கிறது. ஆனால் ஆத்மாவோ அசைவற்றது, செயலற்றது. புத்தியில் எழும் சிறிய அதிர்வு ஒன்று பிரபஞ்சத்தை உற்பத்தி செய்கிறது. பிரபஞ்சத்தின் இயங்கும் தத்துவமாக புத்தி அமைகிறது. புத்தி இயங்காமல் நின்றுவிட்டாலோ, தோன்றுகின்ற இப்பிரபஞ்சம் மறைகிறது. பிரம்மன் மாத்திரமே ஜ்வலிக்கிறது. அசைவு அனைத்தும் நின்று விட நிலையான பிரம்மன் மட்டுமே இருக்கிறது. ஓ, இளவரசே! தாங்கள் இந்த அமரத்துவ அசைக்கவொண்ணாத, சர்வானந்த மயமான பிரம்மனாக இருக்கிறீர்கள். இதைத் தெரிந்து கொண்டு சமாதியில் அசையாப் பாறை போன்று அமர்ந்து இளைப்பாறுவீர்களாக" என்று உபதேசித்தார்.

சிகித்வஜன் ஒரு சிலைபோன்று அமைதியாய் அமர்ந்து சமாதியிற் புகுந்து அந்நிலையிலேயே மூன்று முழுநாட்களாகத் தங்கினார். கும்பமுனிவர் சூடாலை வடிவமேற்றுக் கொண்டு யோகசக்தி மூலமாக ஆகாயத்தில் பறந்து தமது அரண்மனையை அடைந்தார். தமது கணவரின் கடமைகளை யெல்லாம் ஆற்றினாள். மூன்று நாட்களுக்குப் பிறகு ஆகாயத்திலே பிரயாணமாகி கும்பமுனியின் வடிவத்தை

ஏற்றுக்கொண்டு காட்டிலே சிகித்வஜனின் ஆசிரமத்திற்கு வந்தார். இளவரசர் நிர்விகல்ப சமாதியிலே இருப்பதைக் கண்டார். சமாதியைக் கலைக்க விரும்பினார். ஒரு சிங்கம் போலக் கர்ஜித்தார். இது வனாந்தர மிருகங்களை அதிர்ச்சியுறச் செய்தது; ஆனால் இது இளவரசரை சமாதியிலிருந்து எழுப்பவில்லை. அப்பால் அவர் அவனைப் பிரக்ஞைக்குக் கொண்டுவர தமது கைகளால் அசைத்தார். பின், அவரைத் தூக்கிப் பூமி மீது வீசினார். இன்னமும் எழுந்திருக்கவோ அல்லது பிரக்ஞையைத் திரும்பப் பெறவோ இல்லை, "எனது பிராண நாயகர் பரமாத்மாவிலே இலயமாகியிருக்கிறார்; இப்போது அவரது சூட்சுமதேகத்தின் மீது ஏகாக்ரம் செய்து, எனது ஞானக்கண் மூலமாக சத்துவ அல்லது வாழ்வின் மிச்சம் அவரது இதயத்தில் இருக்கிறதா எனக் கண்டுபிடிக்கிறேன். சத்துவம் அல்லது வாழ்வின் மிச்சம் இருக்குமானால், அவரை மற்றொரு வழி முறையிலே எழுப்பி அவரோடு சந்தோஷமாக வாழ்வேன். இல்லாவிட்டால், நான் கூட இச்சரீரத்தை விட்டு விட்டு விதேகமுக்தி அடைவேன்" என்று தமக்குள் அவர் எண்ணமிடலானார். இளவரசனின் சூட்சுமசரீரத்தின் மீது சூடாலை தனது மனத்தை ஏகாக்ரம் புரிந்து அந்தக்கரண ஞானக்கண் மூலமாக, அவருடைய இருதயத்திலே சத்துவம் அல்லது புத்தி அல்லது அவரது வாழ்வின் சேஷம் (மிச்சம்) இருக்கிறதைக் கண்டுபிடித்தாள். சூடாலை யோகக்கிரியை புரிந்தாள் பரகாயப் பிரவேசம் அதாவது பிறருடைய சரீரத்தில் புகுதலைச் செய்தாள். அவள் கும்பமுனி வடிவத்தை விட்டு விட்டு, தனது சூட்சும சரீரத்தை இழுத்துக் கொண்டு சிகித்வஜனின் மனத்திலே பிரவேசித்து சுத்த சத்துவத்தின் சேஷத்தை (மிச்சம்) அடைந்துள்ள மனத்தின் அந்தப் பகுதி அதிருமாறு செய்தாள். மனத்தின் அந்தப்பகுதி இயங்கவும் செயலாற்றவும் தூண்டினாள். அப்பால், அவள் மரக்கிளைக்குப் பறந்து போன ஒரு பட்சி தனது சொந்த கூட்டுக்குள் திரும்பி வந்தது போல, தனது சொந்த சரீரத்திற்குள் திரும்பினாள். பிறகு மலர்கள் சிதறுண்டு மெத்தை போன்று காட்சியளித்ததோர் இடத்திலே அமர்ந்து இனிமையான குரலில் சமாவேத கீதங்களைப் பாடலானாள். இளவரசர்

கீதங்களைக் கேட்டதும் புத்தி பூர்வமான பூரிப்பை அநுபவித்தார். சூரியனைக் கண்ட தாமரை இதழ் மலருகிறது போல அவரது இயக்கமற்ற உயிர் படிப்படியாக மலரலாயிற்று. அவர் மெதுவாகக் கண்களைத் திறந்தார். அவரது தேகம் முழுவதும் புத்துயிர் நிறைந்திருந்தது. தமக்கு முன்னால் கும்பமுனிவர் நிற்பதைக் கண்டு அவரைப் புகழ்ந்தார். "தங்கள் திருவருளால் நிர்விகல்ப சமாதியின் பேரானந்தத்தை நான் அனுபவித்தேன். நான் ஜனனமரண விலங்குகளிலிருந்து விடுதலை பெற்றுவிட்டேன். ஸ்வர்க் கத்தின் சுகபோகங்களை சமாதியின் பேரானந் தத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, ஸ்வர்க்க போகங்கள் ஒன்றுமில்லை" என்று கூறினார்.

கும்பமுனி பேசத் தொடங்கி, "ஓ, இளவரசே! இப்போது நீங்கள் வலிகள், சந்தேகங்கள், பிரமைகள் அனைத்தினின்றும் விடுதலை பெற்றிருக்கிறீர்களா? பிரம்மனுடைய நித்தியா னந்தத்தை பூரணமாகச் சுவைத்தீர்களா? புலன்நுகர்வுப் பொருள்கள் மீது உண்டாகும் விருப்பு வெறுப்புக்களிலிருந்து நீங்கள் விடுபட்டிருக்கிறீர்களா? தாங்கள் சமதிருஷ்டியை விருத்தி பண்ணினீர்களா? இப்பூமியிலே புலன்நுகர்வு சுகபோகங்கள் மீதுள்ள ஆசையை வேரோடு பிடுங் கினீர்களா?" என்று கேட்டார். சிகித்வஜன் "மரியாதைக்குரிய மகா குருவே! எல்லா விதங்களான வலிகள், சந்தேகங்கள், அச்சங்கள், தவறுகள், பிரமைகள், விருப்பு, வெறுப்பு ஆகியவற்றினின்று பூரணமாக விடுபட்டேன். நான் நோய், அழிவு, மரணம் ஆகியவற்றினின்று விடுபட்டிருக்கிறேன். அடையவேண்டிய எல்லாவற்றையும் நான் அடைந்து விட்டேன் - எனது ஆத்மாவிலே முற்றிலும் திருப்தி யாயிருக்கிறேன். பரமதிருப்தியை நான் அனுபவிக்கிறேன். எனக்குத் தெரியாததைத் தெரிந்துகொள்ள எதுவும் இல்லை; என்னால் அடையப் பெறாததை அடைய எதுவும் கிடையாது. பார்க்க வேண்டிய அல்லது கேட்க வேண்டிய ஆசை இன்னும் எதுவும் இல்லை. எனது ஞாபகத்திற்கு மேற்கொண்டு புத்திமதியை எவரிடமிருந்தும் நான்

விரும்பவில்லை. எல்லாரிடத்திலும் எனக்கு சமதிருஷ்டி ஏற்பட்டுள்ளது" என்றார். அப்பால், கும்பமுனியும் சிகித்வஜனும் காடுமலைகளில் சந்தோஷமாய் சஞ்சாரஞ் செய்தார்கள். அநேக ஏரிகளையும் நதிகளையும் அவர்கள் பார்த்தார்கள். கும்பமுனி இளவரசரைப் பார்த்து "இன்று தேவலோகத்திலே பெரியதோர் திருவிழா நடக்கும். அவ்விழாவில் நாரதருக்கு முன் நான் போயாகவேண்டும். அங்கு செல்லுவது, விதியால் கட்டளையிடப்பட்டுள்ளது. எந்த சாதனங்களினாலும் அது தவிர்க்கப்பட முடியாது. தடுக்க இயலாத சட்டத்தின் சக்திக்கு மீறி யாரால் செல்லக்கூடும்? நான் சூரிய அஸ்தமனத்தில் நிச்சயமாய்த் திரும்புகிறேன்" என்றார். சிகித்வஜனிடம் ஒரு கொத்து மலரைக் கொடுத்துவிட்டுச் சென்றார். கும்பமுனி சூடாலை வடிவத்தை எடுத்துக்கொண்டு வானத்தில் பிரயாணமாகி அவருடைய நகரத்தை அடைந்து அரசியல் சம்பந்தமான தனது கடமைகளை ஆற்றினாள். அவள் கும்பமுனி வடிவத்தைத் திரும்பப் பெற்றவளாய், வானத்தில் பறந்து சிகித்வஜன் இருப்பிடத்திற்கு அருகில் இறங்கினாள். சிகித்வஜன் "கண்ணியம் மிகுந்த ஐயா! இன்று ஏன் கவலையோடு இருக்கிறீர்கள்? தாங்கள் ஒரு முனிவர்" எனவும், கும்பமுனிவர் "உண்மையை அறிந்தவர்கள் சோதனைக்குரிய சூழ்நிலை களிலே உறுதியாயும் பொறுமையாயும் இல்லா விட்டால் அவர்கள் உண்மையான மனிதர்கள் அல்ல. அவர்கள் பாசாங்குக்காரர்கள்.

நமது உடல்களைப் பெற்றிருக்கும் காலம் வரையில், உடல் உறுப்புக்களை தக்கமாதிரி பயன்படுத்த வேண்டும். மகத்தான பிரம்மாவும் தேவர்களும்கூட தங்கள் உடல்களின் நிலைகளுக்கு உட்பட்டவர்கள். எவரும் தடுக்கமுடியாத மகத்தான சட்டத்தை எதிர்த்துச் செல்லமாட்டார்கள். விதியின் வலிமையைத் தடுத்தல் எவருடைய சக்திக்கும் அப்பாற்பட்டது. விதியின் வலிமையானது எல்லாப் பொருள்களையும், நதிகளின் நீர் கடலை நாடி ஓடுவதுபோல, அதன் விதிக்கப்பட்ட நெறியிலே ஓடும்படி செய்கிறது'' என்றார்.

சிகித்வஜன் 'விஷயங்கள் அப்படியிருக்கிறபோது, தங்களுக்கு நேர்ந்த ஏதாவது ஒன்றிற்காகத் தாங்கள் ஏன் கவலைப்படவேண்டும்?' எனவும், கும்பமுனி, "ஓ, இளவரசரே! எனக்கு நேர்ந்த அதிசயமான விபத்தைப் பற்றி கேட்பீர்களாக. நீங்கள் நிஜமாகவே வியப்படைவீர்கள்" என்றார்.

பிரம்மச்சரியத்தில் தம் கணவனார் உறுதியாய் இருக்கிறாரா இல்லையா என்பதைச் சோதிக்க விரும்பினாள் சூடாலை. அகஸ்மாத்தமாக நேர்ந்த சம்பவம் ஒன்றைக் கூறலானாள். ஓர் கொத்து மலரைத் தங்களிடம் கொடுத்துவிட்டு, வான வீதி வழி பயணமாகி தேவலோகத்திலுள்ள என் தகப்பனாரிடம் சென்று இந்திரனுடைய தேவ சபையில் கலந்து கொண்டேன். பிறகு, பூலோகம் திரும்புவதற்குக் காற்றுமண்டலத்துள் புகுந்தேன், துருவாச மாமுனிவரைச் சந்தித்தேன். "தாங்கள் நீல நிறமான மேகங்களால் சூழப்படிருக்கிறீர்கள். மோகங்கொண்ட மங்கை தன் காதலனைச் சந்திக்கச் செல்வது போல தாங்கள் வேகமாய்ச் செல்வதாகத் தோன்றுகிறது" என்று கூறிவிட்டேன். இதைக் கேட்டதும் துருவாசருக்குக் கோபம் பீறிட்டது. "ஒவ்வொரு நாள் இரவும் மோகங்கொண்ட மங்கையாக உருமாறக்கடவாய்" என்று சாபமிட்டார். அம்முனிவர் முன்னால் நான் எவ்வளவு அவமானப் பட்டவனாயிருந்திருப்பேன்! இனிமேல் பெண்ணின் உடலை ஒவ்வொரு இரவும் தாங்கிப் பெண்ணாக மாறவேண்டும்; இவ்விஷயம் குறித்து மகாதேவனிடம் விரிவாகக் கூறினாள். சிகித்வஜன், "முனிவரே! கவலைப்பட வேண்டாம். தடுக்கவொண்ணாத சட்டத்தின் சக்திக்கும் மீறி எவரும் செல்லமுடியாது. தாங்கள் முனிபுங்கவர்; தாங்கள் மாறுதலற்ற ஆத்மா. உடல் மாறுதலானது; உறுதியான ஆத்மாவைப் பாதிக்காது. ஆத்மா மாறுதலுக்கு வசப்படாதது" என்று கூறினார்.

சூடாலை பகற்பொழுதில் கும்பமுனிவராயும் இராப்பொழுதில் பெண் வடிவத்திலும் காலங்கழிக்கலானாள்.

ஒரு நாள் கும்பமுனிவர் "எவ்வளவு காலம் நான் கன்னியாயிருப்பது? நான் தங்களை கணவராக வரிக்கிறேன். ஒவ்வொரு நாளும் என்னை தயவு செய்து தங்கள் மனைவியாக ஏற்றுக்கொள்ளுங்கள்" என்றார். சிகித்வஜன் "தாங்கள் விரும்புகிறபடி செய்யச் சுதந்திரம் உண்டு" என்றார். அப்பால் மந்தாரமலையில் ஆவணி மாதப் பௌர்ணமியன்று அந்நியோன்னிய சம்மதத்தின் பேரில் இருவருக்கும் காந்தருவத் திருமணம் நடைபெற்றது. இப்போது மதனிகா என்ற திருநாமத்தால் சூடாலை அறியப்படுகிறாள். ஒவ்வொரு மூன்றாவது இரவில் இளவரசர் நன்கு தூங்கும்போது மதனிகா பழைய உருவம் தாங்கி தனது இராஜ்யத்திற்குச் சென்று அரசாங்கக் கடமைகளை நிறைவேற்றுவாள். அலுவல்கள் முடிந்த பிறகு அவள் தன் கணவனை அடைவாள். மதனிகா என்ற பெயரால் அறியப்படுகிற சூடாலை சிகித்வஜனைச் சோதிக்க விரும்பினாள். அவள் தனது யோக சக்தியால் இந்திரனை சிகித்வஜன் முன் தோன்றுமாறு செய்தாள். இந்திரன் 'ஓ, அரசரே! தங்கள் நற்குணங்களாலும் தவத்தாலும் நான் கவர்ச்சியடைந்தேன். தேவலோகம் வாருங்கள். இரம்பை முதலிய தேவமாதர்கள் தங்கள் வரவிற்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். பல்வேறு சுகபோகங்களில் ஆழ்ந்து இன்புறுவீர்களாக" என்று அழைத்தார். சிகித்வஜன், "ஓ, இந்திரா! சுவர்க்கம் எனக்குத் தெரியும். தெய்வலோகத்துச் சுகபோகங்களை எல்லாம் அறிவேன். எதையும் நான் விரும்பவில்லை" என்றார். சிகித்வஜன் முற்றிலும் சமமான மனநிலையில் உறுதியாயிருந்தார். சூடாலை இன்னும் சிகித்வஜனைச் சோதிக்க விரும்பினாள். ஓர் பர்ணகசாலையில் புகுந்து, தனது யோக சக்தியால் ஒரு காதலனைச் சிருஷ்டித்தாள். அவனைக் கட்டித் தழுவுவதுபோலப் பாவனை செய்தாள். சிகித்வஜனோ அவளைச் சோலைகளிலும் நந்தவனங்களிலும் தேடினார். கடைசியில் அவளைக் கண்டுகொண்டார். அவளும் அவளுடைய அழகான சோரநாயகனும் அன்னியோன்னியமாய்த் தழுவிக் கொண்டிருந்ததைக் கண்டார்! ஆனால் அவர் கிஞ்சித்தும் கலங்கவில்லை. அவர் தமது ஒழுக்கத்தில் எவ்வித

மாறுதலையும் உணரவில்லை. அவர் கோபத்தின் எவ்விதமான குறியும் காட்டவில்லை.

சூடாலை எப்படி நடந்துகொள்கிறாள் என்பதைக் கண்டு கொள்வதற்காகவே சிகித்வஜன் முன்னிலையில் தனது துர்நடத்தையால் அவமானப்பட்டவள் போல நாணமுள்ள முகத்துடன் தோன்றினாள். சிகித்வஜனோ இனிய குரலில் சூடாலையைப் பார்த்து, "நீ ஏன் இவ்வளவு விரைவில் என்னிடம் வருகிறாய்? ஓ, சீமாட்டியே! உனது காதலரிடம் போய் உனது காமத்தைப் பூர்த்தி செய்துகொள். இவ்விஷயத்திற்காக நான் கோபமோ, துக்கமோ கொள்கிறேன் என்று நீ நினைக்காதே. எப்போதும் நான் என் சொந்த ஆத்மாவிலேயே திருப்திப்பட்டுக் கொண்டிருக்கிறேன்" என்றார். மதனிகா என்ற சூடாலை, 'நான் பிழை செய்யக்கூடிய பலவீனமான ஸ்திரீ. நான் அஞ்ஞானி; காமத்தை அடக்கிக் கொள்ள என்னால் இயலவில்லை. ஆண்களைக் காட்டிலும் பெண் பத்துமடங்கு அதிகமான காமாவேசம் படைத்தவள். தடை செய்தலாலோ ஆண்பிள்ளையின் கண்டிப்பாலோ, கற்பின் மஹிமையை உணர்த்துதலாலோ அவளைக் காமத்தினின்று தடுக்க எப்பயனும் உண்டாவதில்லை. தயவுசெய்து என்னை மன்னியுங்கள். பக்திமான்களின் மிகவும் தலையாய குணம் மன்னித்திலே ஆகும்" என்றாள். அதற்கு சிகித்வஜன் "ஓ, இனிய மதனிகா! ஆகாயத்தில் மரத்திற்கு இடம் கிடையாததுபோல, என் இதயத்திலே கோபத்திற்கு இடம் கிடையாது" என்றார். சூடாலை சிகித்வஜனை மேலும் சோதிக்க விரும்பவில்லை. தனது கணவனார் ஆத்மஞானத்தை எய்திவிட்டாரென்றும் அவர் காமத்தினின்றும் கோபத்தினின்றும் முற்றிலும் விடுதலை பெற்றுவிட்டார் என்றும் அவள் நினைத்தாள்.

மதனிகாவின் சரீரத்தை விட்டுவிட்டு சூடாலையின் வடிவத்தை ஏற்றுக்கொண்டு சிகித்வஜனின் முன்னால் தோன்றினாள். சிகித்வஜன், "ஓ, சீமாட்டியே நீயார்?' எனக் கேட்டார். சூடாலை "நான் சூடாலை - தங்களை சட்டரீதியாக மணந்து கொண்டவள். நான் கும்பமுனியின் வடிவத்தையும்

மதனிகாவின் உருவத்தையும் எனது யோகசக்தியால் ஏற்றுக்கொண்டேன். தங்களுக்கு கைவல்யம் அல்லது ஆத்மஞானத்தின் மர்மங்களைப் பற்றி உபதேசித்தேன். தங்களது தவறான மார்க்கத்திற்காகத் தங்களைக் கண்டித்து தந்திர சாமர்த்தியமெல்லாம் பிரயோகித்துத் தங்களை சன்மார்க்கத்திற்கு இட்டுச் சென்றேன். பலவிதமாகத் தங்களைப் பரிசோதனைகள் செய்து பார்த்தேன். தங்கள் அறிவின் ஆழத்தை அறிந்தேன். நிர்விகல்ப சமாதியில் பிரவேசியுங்கள்; ஒவ்வொன்றையும் விவரமாகத் தெரிந்து கொள்வீர்கள்" என்றாள்.

சிகித்வஜன் தியானத்தில் அமர்ந்தார். தாம் இராஜ்ஜியத்தைத் துறந்து வெளியேறிய நாள் தொட்டு இறுதியில் சூடாலையின் சந்திப்பு வரை, நிகழ்ந்த சம்பவங்கள் முழுவதையும் ஞானதிருஷ்டியிலே தெளிவாகக் கண்டார். சூடாலை "ஓ, மரியாதைக்குரிய மன்னவரே, சந்தேகங்கள் அனைத்தினின்று விடுபட்டீர்களா? அஞ்ஞானத்தால் உண்டாக்கப்பட்ட மாயை அழிந்துபட்டதா? தாங்கள் தங்கள் சொந்த ஸ்வரூபத்தில் இளைப்பாறுகிறீர்களா? நித்தியப் பொருளின் ஆனந்தத்தை தாங்கள் அனுபவிக்கிறீர்களா?" என்று வினவினாள். சிகித்வஜன் "தடுமாற்றங்கள், தவறுகள், சந்தேகங்கள், மாயை ஆகியவற்றினின்று நான் இப்போது விடுபட்டிருக்கிறேன். உலகப் பந்தங்களினின்று நான் சுதந்திரம் அடைந்திருக்கிறேன். சதா காலமும் அமைதியாய் இருக்கிறேன். எனக்கு ஆசைகள் எதுவும் கிடையாது. எவரிடமிருந்தும் எதையும் எதிர்பார்க்கவில்லை. எனக்காக எதையும் நாடுவதில்லை. நான் அதுவாகவோ இதுவாகவோ இல்லை. உலகத்தில் நடக்கும் எதைப் பற்றியாவது அல்லது எந்த சம்பவத்தைக் குறித்தாவது, சந்தோஷமோ சஞ்சலமோ அடைவது கிடையாது. நான் எப்போதும் எனது சொந்த ஆனந்தமான ஆத்மாவிலே இளைப்பாறிக் கொண்டிருக் கிறேன். என் அமைதியை பங்கப்படுத்த எதுவாலும் முடியாது. துவந்தங்கள், கண்ணியங்கள், மாறுபாடுகள் இவற்றினின்று நான் விடுபட்டிருக்கிறேன். பொருள்களைப் பற்றி

நினைப்பதே இல்லை. நான் சர்வவியாபகமான பரிசுத்தமான சைதன்யமாயிருக்கிறேன். நான் எங்கும் நிறைந்த ஆகாச நுண்ணணுபோல் இருக்கிறேன். எல்லாப் பொருள்களையும் ஊடுருவியிருந்தாலும் கூட மலினமடையாத ஆகாசம் போல் நான் இருக்கிறேன்" என்று உரைத்தார். "போற்றத்தக்க பிராணநாதா? இப்போது இராஜரீகமான கடமைகளை திரும்பச் செய்யுங்கள். கர்மாக்களினால் தாங்கள் கட்டுப்படமாட்டீர்கள்" என்றாள்.

சிகித்வஜன் அதற்கு இணங்கினார். அப்பால் சூடாலை அவருக்கு எண்ணெய்தேய்த்துக் குளிப்பாட்டினாள். பட்டாபிஷேகத்துக்குரிய சகல கிரியைகளைச் செய்தாள். இரத்தினங்களால் பதிக்கப்பட்ட சிம்மாசனத்தில் அரசரை அமர்த்திப் பட்டாபிஷேகம் செய்தாள். நீடூழி வாழ்க வென்று ஆசி கூறினாள். அப்பால் சிகித்வஜனும் சூடாலையும் நேர்த்தியாக அலங்கரிக்கப்பட்ட யானை மீது ஏறி சொந்த அரண்மனைக்குத் திரும்பினார்கள். அவர்கள் இருபுறங் களிலும் இரண்டு சைனியங்கள் தொடர, ஆடல்பாடல் குழுவும் மேளதாள வாத்தியக் கோஷ்டியும் இன்னிசையுடன் இணங்க அணிவகுத்துச் சென்றார்கள். மந்திரி பிரதானிகளுடன் அரசன் அரண்மனைக்குள் புகுந்தார். மந்திரிகள், சேனாதிபதிகள் மற்றும் அரசியல் துணையாளர்கள் அரசரை மரியாதையுடன் வரவேற்றார்கள். ஆயிரம் ஆண்டுகள் அவர் தமது இராஜ்யத்தை அரசாண்டார். அப்பால் விதேகமுக்தி அடைந்தார். அதே காலத்தில் அவரது மனைவி சூடாலையும் விதேக முக்தி எய்தினாள்.

சிகித்வஜனின் கதை தமது வசிஷ்ட குருவால் அவ்வளவு அழகாகச் சொல்லப்பட்டதைக் கேட்ட ஸ்ரீராமர் வசிஷ்ட முனிவரைப் பார்த்து "தமது மனங்களைப் புறக்கணித்துவிட்டு பிரம்மனிலே தங்களை இலயமாக்கிக் கொண்டவர்களிடம் சத்துவத்தின் சேஷம் (மிச்சம்) எங்ஙனம் இருக்கும்? எவருடைய மனம் கல்லைப்போல குளிர்ந்தும் எவருடைய உடல் மண் கட்டி அல்லது மரக்கட்டையைப்போல உணர்ச்சியற்றும் இருக்கிறதோ, அப்பேர்ப்பட்ட யோகியின் உயிர் சேஷத்தில்

பிராண ஒளியின் நுண்ணிய கிரணம் எப்படி இருக்கக்கூடும்" என்று கேட்டார். வசிஷ்டமாமுனிவர் "புத்திக்குக் காரணமான வாழ்வின் மிச்சம் அல்லது சத்துவத்தின் சேஷம், புஷ்பங்களும் பழங்களும் ஒரு விதைக்குள் குப்தமாக (சூக்ஷ்மமாக) இருப்பன போன்று கண்ணுக்குத் தெரியாத அணுபோல இருதயத்தில் தங்கியிருக்கிறது. அமைதியாயும் சிலை அல்லது கற்பாறை போல அசையாமலும் நிஷ்டையில் அமர்ந்துள்ள யோகியிடம் புத்தியின் துடிப்பு இருக்கிறது. ஓர் ஜீவன் முக்தனின் மனம் நாசமடைந்து போனாலும் கூட சூக்ஷ்ம உடல் முற்றிலும் அழிக்கப்படவில்லை. அவரது மனம் சுகதுக்கங்களினால் பாதிக்கப்படவில்லை. பொருள்கள் மீது நாட்டமோ தேட்டமோ கிடையாது. புலன் நுகர்வுப் பொருள்களிடையில் அவரது உள்ளம் ஊடுருவி இயங்காமல் கவர்ச்சி மற்றும் வெறுப்பு இவைகளினின்று விடுபட்டிருக்கிறது. ஓ, இராமா! விதேகமுக்தி எய்தும் வரை இராஜ்யத்தை ஆண்ட இந்த இளவரசரின் பாதச் சுவடுகளைப் பின்பற்றுவாயாக. இராஜாங்கக் கடமைகளைப் புரிவாயாக. சமதிருஷ்டியும் சமமான மனப்பான்மையும் கொள்வாயாக. இன்ப போகங்களிடையே உபேக்ஷையாயிரு. துக்கங்களி டையில் ஆத்திரத்தினின்று விடுபட்டு இருப்பாயாக. பற்று எதுவும் வைக்காதே!; பொருள்களிடம் எவ்விதமான ஆசையும் கொள்ளாதே. உன்னைத் துன்பங்களும் தொல்லைகளும் சூழ்ந்து கொள்ளும்போது கவலைப்படாதே. எதனாலும் நீ பாதிக்கப்படமாட்டாய். கர்மங்கள் உன்னைக் கட்டுப்படுத்தாது. நீ மோக்ஷத்தை எய்துவாய். ஆத்மஞானம் பெறுவாய். நீ நித்தியானந்தமும் உத்கிருஷ்டமான அமைதியும் அனுபவிப்பாயாக" என்று உபதேசித்தார்.

# இக்ஷ்வாகுவின் கதை

"ஓ, சர்வமும் உணர்ந்த மகாமுனிவரே! அகங்காரத்தை இழந்து அழிந்துபோன, ஆனால் தன் ஆன்மீக வடிவத்தை மட்டும் தாங்கிக் கொண்டிருக்கிற ஒரு மனத்தினுடைய இலக்ஷணங்களைப் பற்றித் தயவு செய்து எனக்குச் சொல்லுங்கள்" என ஸ்ரீஇராமபிரான் கேட்க, வசிஷ்டமாமுனிவர் திருவாய் மலர்ந்தருளினார்.

"ஆசைகள், பிரமைகள், கர்வம் அஞ்ஞானம் மற்றும் இதர கல்மிஷங்கள் யாவும் அகங்காரத்தையும் மனத்தையும் ஒழித்துக் கட்டியவரும் ஆத்மஞானம் பெற்றவருமான பக்தரை ஒருபோதும் தொடமாட்டா - தடாகத் தண்ணீர் தாமரை இலையோடு தொடர்பு கொள்ளாதது போன்று. தன் அகங்காரம் அதனோடு சார்ந்த இதர குற்றங்கள் யாவும் நாசமடைந்த பிறகு ஒரு மனிதனுடைய பிரகாசமும் சாந்தமும் பொருந்திய வதனத்திலே, ஆத்மாவின் தூய்மை தெளிவாகப் பளிச்சிடுகிறது. தெய்வீக இயல்புகள் அனைத்தும் அவனது முகத்திலே ஜ்வலிக்கும்; காமவிகாரங்கள் ஆசாபாசங்கள் எனும் தளைகள் தெறிக்கும்படி அறுக்கப்பட்டிருக்கின்றன. பாபங்கள் எல்லாம் பறந்தோடின. அவன் சினம், பேராசை, வாசனைகள் ஆகியவற்றினின்று விடுபட்டிருக்கிறான். பஞ்சேந்திரியங்களும் பூரண கட்டுக்குள் அடங்கியுள்ளன. இடுக்கண்கள் அவனைப் பாதிக்கத் தவறிவிடுகின்றன. களிவெறியாட்டங்கள் அவனை பூரிப்படையும்படி செய்வதில்லை. பூரணமான மன அமைதி, இணக்கம், அழகு, எல்லாச் சூழ்நிலைகளிலும் இடங்களிலும் மனத்தின் திருப்தியும் சமநிலையும் அவன் வாய்க்கப் பெற்றிருக்கிறான். எல்லோரிடத்தும் அவனுக்குச் சமதிருஷ்டி உண்டு. வலிகள் உடலைத் தொட்டு முகத்திலே வெளிப்பட்டு காட்சியளித்தாலும் கூட அவனது மனம் சதா சாந்தமாயும் அமைதி நிறைந்ததாயும் இருக்கிறது. அவன் தேவர்களுக்கு ஓர் அத்யந்த நண்பனாக ஆகிறான். ஒரு போதும் எவரையும் பகைத்துக் கொள்ளவோ கோபமூட்டவோ செய்வதில்லை. யாவராலும் அவன் நேசித்துப் பாராட்டப்படுகிறான். உலக மாயைகள்

அவனைத் தொடமாட்டா. செல்வமும் வறுமையும் செழிப்பும் துரதிர்ஷ்டமும் அவனை எப்போதும் பாதிப்பதே கிடையா. அவன் முற்றிலும் உபேக்ஷையாயிருப்பான். அஞ்ஞானத்தில் அல்லது உலகாயதத்தில் மூழ்கியுள்ளவனும், தெய்வ நாட்டத்தோடிருந்து பரமாத்மாவை எய்தாதவனுமான மனிதன் சபிக்கப்படுகிறான். ஆத்மஞானத்தினால் பரமாத்மாவை சாக்ஷாத்கரிக்கக் கூடும். இவ்வுலகக் கஷ்டங்கள் எல்லாவற்றினின்றும் காப்பாற்றத் துணைபுரிகிறார் பரமாத்மா. பௌதிகத் துன்பங்கள் அனைத்தினின்றும் ஒரு மனிதனை ஆத்மஞானம் காப்பாற்றுகிறது. இந்த உலகமாகிய பிரம்மாண்டமான சமுத்திரத்திலே தனது துயரத்துக்கிடமான புனர்ஜன்மங்கள் எனும் அலைகளைக் கடப்பதன் மூலம் இந்த சாகரத்தைத் தாண்டி நித்தியானந்தத்தைப் பெற விரும்புகிறவன் "நான் யார்? இவ்வுலகம் என்பது என்ன? பரமாத்மாவெனும் பிரம்மனுடைய சுபாவம் என்ன? உலகாயத சுகபோகங்களினால் என்ன பிரயோஜனம்?" என்று சதா விசாரணை செய்யவேண்டும். அத்தகைய பகுத்தறிவு படைத்த விசாரணை இறுதி விடுதலை அல்லது மோக்ஷம் எய்துதற்குரிய சிறந்த சாதனம் ஆகும்.

"ஓ இராமா! உங்களது சூரிய வம்சத்தை ஸ்தாபித்த மூதாதையர் இக்ஷ்வாகு எனும் புகழ் வாய்ந்த மன்னர் மோக்ஷத்தை எப்படி அடைந்தார் என்பதைத் தெரிந்து கொள்வாயாக! முன்னொரு காலத்தில் அவ்வரசர் தமது இராஜ்யத்தை அரசாண்டு கொண்டிருந்த காலத்திலே, தமது ஏகாந்த வேளையிலே, மானிடத் தன்மையைப் பற்றிச் சிந்திக்கலானார். அழுகுரல், நோய், மரணம் இவற்றிற்கும் மற்றும் துன்பம் இன்பம் வலி இவற்றிற்கும், இதர தவறுகளுக்கும் இறக்குந் தன்மை கொண்ட இவ்வுலகிலுள்ள ஜீவர்கள் இலக்காவதற்கு என்ன காரணமாயிருக்கலாமென்று தமக்குள்ளே அவர் சிந்தனை புரியலானார். இச்சிந்தனைகள் மீது வெகுநேரம் ஆராய்ச்சி புரிந்தார்; ஆனால் ஒருமுடிவையும் கண்டுபிடிக்க இயலவில்லை. பிரம்மலோகத்திலிருந்து வந்த முதலாவது மனுவைச் சந்தித்து அவரைத் தக்க மரியாதைகளோடு வரவேற்றுபசரித்து "தயாளப் பிரபுவே!

இச்சம்ஸாரத் துயரங்களினின்று என்னை எப்படி விடுவித்துக் கொள்ளக்கூடும்? எனது உண்மையான ஆத்மாவின் ஸ்வபாவம் என்ன? நித்திய அல்லது அமரத்துவப் பொருளை எப்படி நான் அடைவேன்? இப்பிரபஞ்சம் எங்கிருந்து உற்பத்தி? இதனுடைய வடிவம் என்ன? இது எப்போது எப்படி தோன்றியது? இச்சிருஷ்டியைப் பற்றிய எனது சந்தேகங்கள் தவறான அபிப்பிராயங்கள் இவைகளினின்று நான் எப்படி விடுவித்துக் கொள்வது? தன் கூட்டிலிருந்து வெளியே பறக்கும் ஒரு பட்சிபோல இவ்வுலகினின்று எப்படி விடுதலை பெறுவேன்?" என்று கேட்கலானார்.

மனு பதில் கூறலானார் : "நீ காண்பவை யாவும் உண்மை அல்ல. அற்பமான இந்த பிரபஞ்சங்கள் எல்லாம் நிஜமாக நிலைபெறவில்லை. அவை தோற்றத் தன்மையுடையன. அவை மேகங்களிலே தோன்றும் கோட்டைகளுக்கும் மணற்பாங்கான பாலைவனங்களிலே தோன்றும் கானல் நீருக்கும் ஒப்பிடப்படுகின்றன. இந்த மனம் கூட நிஜமல்ல. மனத்திற்கும் புலன்களுக்கும் அப்பால் எட்டாததாயுள்ளதும், அழிக்கவொண்ணாததும், இடத்தால் வரையறை அற்றதும், ஆகாச நுண்ணணுவைக் காட்டிலும் வெகு சூட்சுமமாயிருப்பதுமான ஆத்மா அல்லது பிரம்மம் எப்போதும் இருக்கிறது. அது ஒன்றே சத்தியப்பொருள். காணும் பொருள்கள் அனைத்தும் ஆத்மாவாகிய கண்ணாடியிலே வெறும் பிரதி பிம்பங்களாயிருக்கின்றன. சில சக்திகள் அல்லது இயற்கையாயமைந்த பிரம்மனுடைய சக்திகள் ஒன்றுகூடி பிரகாசிக்கின்ற உலகங்களின் வடிவங்களை சிருஷ்டி செய்தார்கள். இதர சக்திகள் ஜீவர்களின் வடிவங்களைச் சிருஷ்டித்தார்கள். தேவலோகங்களாகச் சில வடிவங்கள் எதுவுமில்லை. பிரம்மன் மாத்திரமே துக்கங்கள் இல்லாமல் இருக்கிறார். அவர் எல்லாவற்றுள் எல்லாமாக இருக்கிறார். வேற்றியல்புகள் படைத்த நானாவிதப் பொருள்களைக் கொண்ட உலகமாக பிரம்மன் மாத்திரமே பிரகாசிக்கிறார் - சமுத்திர ஜலமே அலைகள், நீர்க்குமிழிகள், நுரைகள் போலத் தோன்றுவது போல. அத்வைத பிரம்மனைத் தவிர வேறு எதுவும் கிடையாது. அது ஒன்றே

சத்தியப் பொருள். அது ஒன்றே ஜீவிக்கின்ற உண்மை. ஓ, இக்ஷ்வாகு! பந்தமோக்ஷம் எனும் சிந்தனைகளை அப்புறப்படுத்து. எல்லாவகைப்பட்ட அச்சங்களினின்று நீ விடுபட்டு, கற்பாறை போன்று உறுதியாயும் திண்மையாயும் இருப்பாயாக" என்று திருவாய்மலர்ந்தருளினார்.

மனு மேலும் உபதேசிக்கலானார். சங்கல்ப எண்ணங்களோடு ஒருவன் சம்பந்தப்படுத்திக் கொண்டால், சமுத்திர ஜலம் அலை அல்லது நுரையாவதுபோல, அவன் ஜீவன் அல்லது ஜீவாத்மாவாக மாறுகிறான். அப்பால் அவன் சதா காலமும் ஜனன மரணக் காலச் சக்கரத்திலே சுழன்று கொண்டிருப்பான். துக்கங்களும் சுகங்களும் ஆத்மாவை அல்ல, உள்ளத்தைச் சார்ந்த இயல்புகள், ஜீவர்கள், தங்கள் பூர்வஜன்மங்களிலே எய்திய பழைய உத்தேசங்களுக்கேற்ப பாவ புண்ணியச் செயல்களைப் புரிந்து அவற்றின் பலன்களான இன்பதுன்பங்களை அறுவடை செய்கிறார்கள். கண்களுக்குப் புலப்படாத இராகுவின் கிராந்திபாகம் சந்திரகிரஹணத்திலே நமக்குத் தெரிகிறதுபோல, ஆத்மாவின் தூண்டுதலினாலே மனம் ஆற்றுகிற செயல் நம் கண்ணுக்குத் தோன்றுகிறது; சுக துக்கங்களை அநுபவிக்கிறது. இந்த அமரத்துவ ஆத்மன் ஆத்மஞானம் போதிக்கிற புத்தகங்கள், மற்றும் ஆன்மீக ஆசிரியர்கள் மூலம் அடையப் பெறமாட்டாது. ஒருவன் தனது ஆத்மா, தனது புத்தி மூலமாக இயற்கை உணர்வினாலே அறியப்படும். குறிப்பிட்ட பொருள் அல்லது இடம் மீது எவ்விதமான பற்றும் கொள்ளாமல் பிரயாணிகள் யாத்திரை செய்வதுபோல உனது உடல் மற்றும் புலன்களிடம் அசட்டையாயிருப்பாயாக. உடலையும் இந்திரியங்களையும் விரும்பவோ வெறுக்கவோ செய்யாதே. உடலையும் புலன்களையும் சித்திரவதை செய்யாதே. உடல் புலன்கள் மற்றும் எல்லாப் பொருள்களிடமும் அசட்டையாயிரு. உடலும் இந்திரியங்களும் கர்மாவின் விளைவுகள். அவற்றைத் தடுக்க உன்னால் இயலாது. அவை தவிர்க்கமுடியாதபடி உருக்கொள்கின்றன. பொருள்கள் மீதுள்ள ஆசையை விட்டுவிடு. அமைதியைப் பெற்றுப் பிரம்மனாக மாறுவாயாக. அழியக் கூடிய இவ்வுடலை நான்

எனும்படி அதனோடு அபேதமாக்கிக் கொள்ளுதல் தான் இவ்வுலகப் பந்தத்திற்குக் காரணமாகிறது. மோக்ஷத்தை நாடுவோர் இக்கொள்கையைப் பற்றக்கூடாது. ஆனால் "சர்வ வியாபகமான ஆத்மா அல்லது பிரம்மன் நான்" என்கிற உறுதியான கோட்பாடு இவ்வுலக பந்தத்தினின்று மனிதர்களை விடுவிக்கக்கூடியது. தோளின்மீது நிஜமாகத் தூங்கிக் கொண்டிருக்கிற குழந்தையைத் தேடிக் கவலைப்படுகிற தாயைப்போல மக்கள் எல்லோரும் தங்கள் இன்பத்தை அழியக்கூடிய வெளிப்பொருள்களிலே தேடி அலுத்துப்போகிறார்கள். அந்த இன்பம் வெகு எளிதில் அவர்களுடைய சொந்த ஆத்மாவின் உள்ளே காணக்கூடும். சமுத்திர ஜலம் அலைகளால் அலைக்கழிக்கப்படுவது போன்று எண்ணற்ற சங்கல்பங்களினால் மனம் அலைக்கழிக்கப்படுகிறது. சங்கல்பங்கள் அழிபட்டுப் போனால், ஓ, அரசரே! ஆத்மாவிலே தங்கள் மனத்தைப் பதித்தால், மகோன்னதமான ஸாந்தியையும் நித்தியானந்தத்தையும் தாங்கள் அநுபவிப்பீர்கள்; பிரம்மாண்டமான இந்த சம்ஸாரசாகரத்தின் அலைகளின் இடையிலேகூட முற்றிலும் அசையாமல் இருப்பீர்கள்.

பிரம்மனிலிருந்து இம்மாயா உலகம் எழுந்துள்ளது. மாயை மர்மமானது. தங்கள் சொந்தமான ஆத்மாவைத் தரிசித்துக் கொள்ள அது மனிதர்களை ஏமாற்றுகிறது. இவ்வுலகம் மாயையின் சக்தியின் மூலம் கனமான உண்மையாகத் தோன்றுகிறது. ஆத்மஞானம் இல்லாதவர்கள் இவ்வுலகத்திலே பாதிக்கப்படுகிறார்கள். மனமெனும் கித்தானிலே உலகம் ஓர் வண்ணக்காட்சியாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறதாக காண்கிறவனும் பற்று அற்றவனாய் எதிலும் ஆசை கொள்ளாமல் தனது ஆத்மாவில் முற்றிலும் திருப்திப்பட்டவனாயிருக்கிறவனும் எவனோ அவன் காயப்படுத்தமுடியாத படைக்கலத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறான். அம்பு அல்லது குண்டு எதுவும் இப்படைக் கலத்தைத் துளைக்காது. செல்வமோ ஆதாரமோ எதுவும் வாய்க்கப்பெறாதவன், ஆனால் தனது சொந்த ஆத்மாவைத் தரிசித்ததன் மூலம் யாவற்றையும் அடையப்பெற்றவன் எவனோ அவன்

எவ்வளவு ஆனந்தமாய் இருக்கிறான்! ஆசைகள் அனைத்தையும் ஒழிப்பாயாக. பிரம்மன் மீது தியானம் புரிந்து ஜீவன் முக்தனாக மாறுவாயாக. இச்சிறிய "நான்" என்பதை அழித்துவிடு. அழியக்கூடிய சரீரத்துடன் அபேதப்படுத்திக் கொள்ளாதே. சர்வ வியாபகமான மஹத்தான ஆத்மாவோடு நீ அபேதப்படுத்திக்கொள். அபாவம் (இருப்பு இன்மை) என்னும் கொள்கையை விருத்தி செய். பொருள்கள் அனைத்தும் உருவமற்றவையாகவும் தூய சைதன்யமாகவும் கருதி அவைமீது தியானம் புரி. "இது இன்பந்தரக்கூடியது" அல்லது 'அது துன்பம் நிறைந்தது', 'இது நல்லது' 'அது கெட்டது' எனும் கருத்து தொடர்ந்த வலிகளுக்குள்ள ஓர் விதையாகிறது. சமதிருஷ்டி எனும் நெருப்பினால் இவ்விதை பொசுக்கப்பட்டால், அப்பால் வலிகளுக்கு இடம் எங்கே உள்ளது? முயற்சி செய். அபாவம் எனும் வாளாயுதத்தைத் தரித்துக்கொள்க. சமதிருஷ்டி எனும் கோடாரியால் உள்ளத்திற்குப் பொருந்துவன, பொருந்தாதன எனும் உணர்ச்சியையும் விருப்பு வெறுப்பு ஆகிய உணர்ச்சியையும் வெட்டுக. வெளிஆசார ஒழுங்குக்குரிய சடங்குகள் எனும் அடர்ந்த சிக்கலான காட்டை கர்மாக்களினால் உண்டாகிற பாவபுண்ணியத்தின் மீது கொள்கிற உபேக்ஷை எனும் வாளாயுதத்தினால் சிந்தனைகள் பொருள்கள் அனைத்தையும் ஒழித்துக்கட்டுக. பேதங்கள் யாவற்றையும் உள் மனத்தினின்று வெளியே துரத்துக. விவேகத்தை விருத்தி செய்க. ஆத்மாவின் பரமானந்தத்தைச் சாட்சாத்கரிப்பாயாக. முற்றிலும் அமைதியாக இரு. உலகக் கவலைகள் அச்சங்கள் எல்லாவற்றி னின்றும் விடுபட்டு இரு. இந்த அற்பத்தனமான "நான்" ஆசைகள் சங்கல்பங்கள் அனைத்தையும் நாசஞ் செய்தவனும், மாயா பேதங்கள் யாவற்றையும் கரைத்தவனும் எவனோ அவன் பிரம்மனின் நித்தியானந்தத்தை அனுபவிப்பான். அவன் மாத்திரமே வலிகள், துக்கங்களினின்று விடுபடுவான்.

ஓ, மன்னவரே! சர்வ நிறைவாயும், களங்கமற்றும், மௌனமாயும் மாறுதலற்றும் சர்வத்திலும் சமமாயும் விளங்குகிற அந்த ஆத்மாவினை சதா காலமும் தியானிப்பீராக.

ஏழு ஞானப்படிகள் அல்லது ஞானபூமிகள் உள்ளன. ஆத்மஞானத்தைப் பற்றிய சாஸ்திரங்களை படிப்பதாலும் எவ்வித பலனை எதிர்பாராமல் புண்ணியந்தரக் கூடிய கர்மாக்களைப் புரிவதாலும் முதலாவது ஞானமார்க்கத்தை விருத்தி செய்தல் வேண்டும். இந்த நல்ல ஆசை முதாலவது பூமி அல்லது ஞானத்திற்கு முதல்படியாக அமைகிறது. இது மனத்திலே விவேகமாகிற நீரைப்பாய்ச்சி வளப்படுத்திக் காப்பாற்றுகிறது. இப்படித்தரத்திலே புலன்நுகர்வுப் பொருள்களிடத்தில் வெறுப்பு ஏற்படும். முதல்படியானது இதரபடிகளுக்கு அஸ்திவாரம். இதிலிருந்து அடுத்த இரண்டு படிகள் அதாவது விசாரணை தனுமானசி ஆகியவற்றிற்குச் செல்லலாம். இடையறாத ஆத்மவிசாரணை, இரண்டாவது படி, மூன்றாவது படி தனுமானசி; பொருள்களிடத்தில் பிரத்தியேகமான உபேக்ஷை வளர்ப்பதன் மூலம் இதை அடையக்கூடும். மனம் நூல் போன்று மெல்லியதாகிறது. ஆகையால் தனுமானசி எனும் பெயர் உண்டாகிறது. தனு என்றால் நூல், மனத்தினுடைய நூல் போன்ற தன்மை, மூன்றாவது படி அசங்கபாவனை எனும் பெயரால் கூட அறியப்படுகிறது. மூன்றாவது நிலையில் சாதகன் கவர்ச்சிகள்
அறியப்படுகிறது. மூன்றாவது நிலையில் சாதகன் கவர்ச்சிகள்
அனைத்தினின்றும் விடுபட்டிருக்கிறான். மூன்றாவது நிலையில் யாராவது இறந்தால், விண்ணுலகத்திலே நீண்ட காலம் இருந்து பூமியில் ஒரு ஞானியாக மறு பிறப்பு எடுப்பான். மேற்கண்ட மூன்று படிகள் ஜாக்கிரதா நிலையின் கீழ் சேர்க்கப்பட்டுள்ளன. நான்காவது படி சத்வபதி; இது அனைத்து வாஸனைகளையும் வேரோடு அழித்துவிடும். இது ஸ்வப்பன நிலையில் அடங்கக்கூடும். உலகம் ஸ்வப்பனமாகத் தோன்றும். நான்காவது படியை எட்டியுள்ளவர்கள் பிரபஞ்சப் பொருள்கள் யாவற்றையும் சமதிருஷ்டியுடன் காண்பார்கள்.

ஐந்தாவது நிலை அஸமா சக்தி. உலகப் பொருள்களிடத்தில் பரிபூரணமான பற்றின்மை ஏற்படுகிறது. இந்நிலையில் உலாவுதல் அல்லது உறங்குதல் எனும் உபாதியே கிடையாது. இது ஜீவன் முக்தி நிலை. இதிலே ஆனந்த ஸ்வரூபத்தின் அனுபவம் மாசற்ற ஞானத்தினால்

நிரம்பியவாறு சித்திக்கிறது. சுஷுப்தியின் கீழ் இது வருகிறது. ஆறாவது நிலை யதார்த்தபாவனை, சத்தியஞானம் உண்டாகிறது. ஏழாவது துரியம் அல்லது அதீத உணர்வுநிலை. இது மோக்ஷம். இது துரியாதீதம் எனும் நாமத்தால்கூட அறியப்படுகிறது. எவ்விதமான சங்கல்பங்களும் இல்லை. குணங்கள் எல்லாம் குன்றிப்போகும் இது மனம், வாக்குகளுக்கு அப்பாற்பட்ட எட்டாத நிலை. ஏழாவது நிலையில் உடலைக் களைந்த மோக்ஷம் (விதேகமுக்தி) சித்தியாகிறது. ஜீவன் முக்தன் அஹங்காரம், ஆசைகள், குணங்கள் பற்று இவற்றினின்று விடுபட்டிருக்கிறான். அவனுக்கு சமதிருஷ்டி உண்டு. அவன் பரிபூரணமான ஸாந்தியையும் நித்தியானந்தத்தையும் அநுபவிக்கிறான். ஆகையால் அவனுடைய மனம் ஒருபோதும் துன்புறுத்தப்படுவதில்லை. அமரத்துவமான ஆத்மா அல்லது பிரம்மனோடு தன்னை அபேதமாக்கிக் கொண்டவனும் இவ்வுலகில் அஞ்சுவதற்கோ கவலைப் படுவதற்கோ கவனிப்பதற்கோ எதுவும் இல்லாதவனு மாயிருக்கிறவன் எவனோ அவன் வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பினும் அல்லது அதனின்றும் விடுபட்டு ஒய்வு பெற்றிருப்பினும், குடும்பத்துடன் வாழ்ந்தாலும் அல்லது ஏகாங்கியாக வாழ்ந்தாலும் இவ்வாழ்விலே விடுதலை பெற்றவன் எனப் பாராட்டப்படுகிறான். ஆதியும் அந்தமும் இல்லாதவனாகவும் அழிவும் மரணமும் இல்லாதவனாயும் தன்னை அறிந்தவனும் தூய உணர்வு இயல்புள்ளவனாகத் தன்னை அறிந்தவனும் எவனோ அவன் எப்போதும் அமைதியிலாழ்ந்து இன்புற்று கவலைக்குக் காரணம் எதுவும் இல்லாமல் வாழ்கிறான். இது நான் எனவும் அது இன்னொருவன் எனவும் இது என்னுடையது எனவும் அது மற்றொருவனுடையது எனவும் அறிகிற அறிவு நீங்கப் பெற்றவன் விரைவிலே ஆத்மஞானத்தை அடைகிறான்.

ஒருவன் தனது வாஸனையின் மூலமாக ஒரு பொருளை அநுபவித்தலால் அது உடனடியாக இன்பத்தை நல்குகிறது. அப்பொருள் அழிந்தாலோ அதனால் துக்கத்தை அநுபவிக்கிறான். வாஸனைகள் முற்றிலும் நாசமடையினும்

அல்லது சிறுகச் சிறுக அழிந்துபட்டாலும், பொருள்களிலே எவ்விதமான இன்பத்தையும் நீங்கள் அநுபவிக்கமாட்டீர்கள். பொதுவாக மனிதர்களிடையிலே, ஏதோ ஒன்றின் தோற்றம் அல்லது மறைவு இன்பம் அல்லது துன்பத்திற்குக் காரணமாக விளங்குகின்றது.

இன்பமும் துன்பமும் இணைபிரியாதவை. இன்பம் துன்பத்திற்குக் காரணம். வாஸனைகள் நாசமடைந்தால், கர்மங்கள் இன்ப துன்பங்களை அளிக்கமாட்டா. அவை எரிக்கப்பட்ட விதைகள் போன்றிருக்கின்றன. பொருள் களிடத்தில் எவ்விதக் கவர்ச்சியும் இல்லாதவன் இதயத்தில் குளிர்ந்தவனாயிருக்கிறான். அப்பால், சஞ்சிதம் ஆகாமியக் கர்மாக்கள் எனும் பஞ்ச, பீஜகோசங்கள் உடைந்து ஒன்பது வாசலுள்ள இவ்வுடலாகிய பருத்திச் செடியினின்று வெளியே சிதறுண்டு போகும்-அறிவாகிய சூறாவளிக் காற்றினால் மோதப்பெற்று எண்ணங்கள் எல்லாம் மறையும் வளமான நிலத்தில் விதைக்கப்பெற்ற விதையினின்று நெற்பயிர் கிளம்புவதைப்போல, அறிவின் முளையானது தினந்தோறும் மனத்திலே அதிகமாகவளரும். ஆத்மா தனது புராதன தூய்மையோடும் மஹிமையோடும் பிரகாசிக்கும். ஓ, மன்னரே! எண்ணங்களோ வாஸனைகளோ இல்லாத தூய்மையான அத்துவைத பிரம்மன் என உம்மை உணர்ந்து கொள்வீர்களாக.

ஆத்மா ஆதிமூலத்திலே ஆனந்த நிறைவாகிய ஸ்வபாவமாயிருந்துள்ளது; ஆனால் அஞ்ஞானத்திற்கு இலக்காகி உலகாயத சுகபோகத்திற்கான வீண் ஆசையை வளர்த்தது. ஆகையால் ஜீவன் எனும் பெயரைப் பெற்றது. ஜீவாத்மா வேதனைக்கு உள்ளாகியது. அவிவேகத்தினால் ஆசைகள் கிளம்புகின்றன. விவேகம் உதயமானால் அவை மறையும். ஆசைகள் நாசமடைந்தால் ஜீவனுடைய நிலை சீர்குலையும். அவனுடைய ஆத்மா பரமாத்மாவோடு இலயமாகி ஒன்றாகும். ஆகையால் உனது ஆத்மாவை மோக்ஷத்திற்கும் நரகத்துக்குமாக மேலும் கீழுமாக இழுக்க பூலோக சுகபோகமாகிய உனது ஆசையை அனுமதிக்காதே - கழுத்தில் கயிறு கட்டப்பட்ட ஒரு வாளி கிணற்றிலே கீழே

எறியப்படுவதும் மீண்டும் மேலே இழுக்கப்படுவதும் போல, கர்த்திருத்துவமும் உடைமையும் எனும் கோட்பாடு கொண்டவர்களும், "நான்" "அவன்" "இது" " இது என்னுடையது" "அது உன்னுடையது" என்கிற பொய்யான வித்தியாசத்தினால் ஏமாற்றப்பட்டவர்களும் வாளியைப் போல கீழே கீழே இறக்கப்படுகிற விதிக்கு உள்ளாகிறார்கள். எவ்வளவு சுயநலமியாய் ஒருவன் இருக்கிறானோ, அவ்வளவு அற்பத்தனமாயும் அவமானப்பட்டவனாயும் இருக்கிறான். சத்தியம் அல்லது பிரம்மன் ஆகிய பாறை மேலே உறுதியாக நில். இப்பிரபஞ்சம் உனது சர்வ நிறைவான வடிவம் என்று எண்ணு; உனது சொந்த ஆத்மாவைக் கெட்டியாகப் பிடித்துக் கொள். இலயம் எனும் ஞானதிருஷ்டி அடையப்பெற்றால், அப்போது தான் மறுபிறப்புக்களிலிருந்து உன்னை விடுவித்துக் கொண்டு பரமாத்மாவோடு ஐக்கியமாகி இலயமாவாய். பிரம்மா, விஷ்ணு, உருத்திரர்கள் ஆற்றும் செயல்கள் அத்தனையும் உன்னால் செய்யக்கூடும். உனது உள்ளம், உயர்த்தப் பெற்று எல்லைகளை மீறி விரிவடைந்தால், அது தெய்வீக உள்ளத்தோடு அபேதமாகி அதிலே உறிஞ்சப்பட்டுவிடும். ஆத்மஞானத்தை அடைந்தால், பிரம்மா விஷ்ணு உருத்திரர்களால் அடையப்பெற்ற அதே நிலையை உன்னால் அடையக்கூடும். இயற்கையின் தோற்றங்கள் அனைத்தும் பிரம்மனுடைய வெறும் திருவிளையாடல்கள். ஆத்மாவின் நித்தியானந்தத்தை அனுபவிக்கிறவன் இணையற்றவனாயும் இருக்கிறான். அவனுக்கு நிகராக வேறே எவனும் கிடையாது. இவ்வுலகம் இல்லையெனவும் கூறுவதற்கில்லை. அது ஆத்மாவின் இயல்பாகவோ அநாத்மாவின் இயல்பாகவோ இல்லை. அது சூனியமாகவோ நிறைவாகவோ இல்லை. பிரம்மன் சாட்சாத்கரிக்கப்பட்டால் மாயை மறையும். மோக்ஷம் என்பது நித்தியானந்தப் பேறு ஆகும். ஜனன மரணங்களிலிருந்து விடுதலையாதல் மோக்ஷம் என்பது. மோக்ஷம் தன்னிலே காலம் இடம் என்பன கிடையாது. அதிலே வெளிப்புற அல்லது உட்புற நிலை என்பது இல்லை. அகங்காரம் அல்லது தனது இருக்கை நாசமடைந்தால் மோக்ஷம் சித்தியாகிறது. எண்ணத்தின்

முடிவே மோக்ஷம். மாயையின் முடிவே மோக்ஷம். பிரம்மசாக்ஷாத்காரம் மோக்ஷத்தை நிலைநாட்டுகிறது.

எதை அணிந்திருக்கிறான் அல்லது எதைச் சாப்பிடுகிறான் அல்லது எங்கே தூங்குகிறான் என்பதிலே உபேக்ஷையாயிருக்கிறவன் உலகம் முழுமைக்கும் உரிய சக்கரவர்த்தியாகப் பிரகாசிப்பான். ஜாதிகள் வாழ்வு ஒழுங்குப்பாடுகள் உலக தர்மங்கள் ஆகியவற்றினின்று, சிறைக் கூண்டிலிருந்து தன்னை விடுவித்து வெளியேறிய சிங்கத்தைப் போல, நீ விடுவித்துக் கொள்வாயாக. சம்ஸாரச் சுமையைக் குறைத்துக் கொள்க. அழியவொண்ணாத நிர்த்தோஷமான பதத்தை நீ எய்துவாய். முற்றிலும் சாந்தமடைந்து மறுபிறப்புக்களிலிருந்து உன்னை விடுவித்துக் கொள்வாயாக. அப்பால் நீ பூரணமான சமநிறைவான மனச்சாந்தியுடன் பிரம்மனின் நித்தியானந்தத்தை அனுபவிப்பாய். அத்தகைய மனிதன் ஜீவன் முக்தன் ஆகிறான். செயல்களின் பலன்களிலே அவன் உபேக்ஷையாயிருப்பான். மனிதர்களால் மரியாதையுடன் போற்றப் பட்டோ அல்லது தூற்றப்பட்டோ இருந்தாலும், அவன் புகழ்ந்து பேசவோ அல்லது இகழ்ந்து நிந்திக்கவோ செய்வதில்லை. எவருக்கும் அவன் தீங்கிழைப்பதில்லை, எவராலும் தீங்கிழைக்கப்படுவதில்லை. எந்தவிதமான பற்றினின்றும் அவன் விடுதலை பெற்றுள்ளான். அவனது உடல் வெட்டப்பட்டாலும் வலியினால் அவன் பாதிக்கப்படமாட்டான். தர்மநியமங்களுக்கும் விலக்குகளுக்கும் மேற்பட்டவன்; எனினும் வேத வாக்கியங்களின் பிரகாரம் அவன் செயலாற்றுவான். சாதாரண மனிதனைப் போன்று உலகில் அவன் வேலை செய்யலாம். ஆனால் கர்த்ருத்வக் கோட்பாடு அவனிடம் இல்லை. உலகச் சார்புகளிடம் முற்றிலும் தொடர்பு அற்ற உள்ளம் உடையவன் உலக சுபிட்சத்திற்காக உழைக்கிறான். எவனையும் அச்சுறுத்தும் பொருளாக அவன் இல்லை. ஆனால் எவனையும் அஞ்சுவதில்லை. அத்தகையவன் மரியாதை செய்யப்படவேண்டும். புகழ்ச்சிக்கு உரியவன். அத்தகையவன் எப்போதும் பரமாத்மாவிலே இளைப்

பாறுகிறான். காசியைப் போன்ற புண்ணிய ஸ்தலங்களிலோ அல்லது சண்டாளனுடைய வீட்டிலோ அல்லது தேசப்பிரஷ்டனாகவோ மரணமடைந்தாலும் பிரம்மாகார நிலைக்குத் தங்களை உயர்த்திக் கொண்ட மகத்தான புருஷர்களை மக்கள் மிக்க மரியாதையோடு வணங்க வேண்டும். இப்பூமியிலே அவர்கள் தேவர்கள். மறுபிறப்புக்களை ஒழித்து மோக்ஷத்தைப் பெற விரும்புபவர்கள், இத்தகைய மகோன்னத சாதகர்களை புகழ்ந்து நமஸ்கரித்துப் பெருமைப்படுத்த வேண்டும். பக்தியால் நனைந்த இதயத்துடனும், பழங்கள் நிறைந்த கரங்களுடனும் அடிக்கடி இவர்களைப் பரிவுடன் தரிசிக்க வேண்டும். பயபக்தியுடனும் பணிவு மரியாதையுடனும் அடிக்கடி சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரிக்கவேண்டும். ஜீவன் முக்தர்களாகப் பிரகாசிக்கும் மஹிமை வாய்ந்த இம்மகானுபாவர்களுக்குப் பக்தியோடு ஆற்றும் தொண்டுகளின் மூலம் பெறுகிற அதே நன்மைகள் அவ்வளவும் யக்ஞங்களோ, தபசோ, தருமங்களோ அல்லது விரதங்களோ ஒருவருக்குத்தர இயலாது. பெருந்தன்மையான இத்தகைய ஆத்மாக்களுக்கு ஆற்றும் தொண்டுகள் வெகு விரைவில் இதயத்தைச் சுத்திகரிக்கும்.

மனு எனும் பொய் நாமத்துடன் இப்போது சம்பாஷிக்கிற பிரம்மதேவர் உண்மையான பக்தியைப் பற்றி இக்ஷ்வாகுவுக்கு எடுத்துச் சொல்லியபின் தமது தெய்வீக வாசஸ்தல பிரம்மலோகத்திற்கு எழுந்தருளினார். இக்ஷ்வாகு மனுவின் உபதேசங்களின் பிரகாரம் வாழ்க்கை நடத்தி அழியாப் பதமாகிய மோக்ஷத்தை அடைந்து பிரம்மானந்த ஸாரத்தை அனுபவித்தார்.

ஓம் ஸாந்தி! ஓம் ஸாந்தி! ஓம் ஸாந்தி!

அனைத்து உயிர்களுக்கும் ஸாந்தி நிலவுக.

# சுவாமி சிவானந்தர் தமிழ் நூல்கள்

| | | |
|---|---|---|
| ஞானியர் வரலாறு (650 பக்கம் 1/8 டெம்மி பைண்டு வால்யூம்) | – | 100.00 |
| ஸ்ரீமத் பகவத் கீதை (800 பக்கம் 1/8 டெம்மி பைண்டு வால்யூம்) | – | 100.00 |
| சிவானந்தர் அன்றாடம் அருளிய அருள்மொழிகள்(3பாகம்) ஒவ்வொன்றும் (750 பக்கம் 1/8 டெம்மி பைண்டு வால்யூம்) | – | 100.00 |
| பேரின்பம் (பைண்டு வால்யூம்) | – | 100.00 |
| இயற்கை மருத்துவம் (பைண்டு வால்யூம்) | – | 100.00 |
| ஆன்மீக சாதனையில் இரகசியங்கள் (பைண்டு வால்யூம்) | – | 100.00 |
| அமைதிக்கும் ஆனந்தத்திற்கும் வழிகாட்டி (பைண்டு வால்யூம்) | – | 100.00 |
| இமயம் முதல் இலங்கை வரை | – | 80.00 |
| மன ஒருமைப்பாடும் தியானமும் (பைண்டு வால்யூம்) | – | 80.00 |
| உடல் நலமும் உணவு முறையும் (பைண்டு வால்யூம்) | – | 80.00 |
| மனமும் அதன் இரகசியங்களும் அதை அடக்கி ஆளும் முறையும் | – | 80.00 |
| சுவாமி சிவானந்தர் ஓர் அவதார புருஷர் (பைண்டு வால்யூம்) | – | 70.00 |
| சிவபெருமானும் சிவ வழிபாட்டுத் தத்துவங்களும் | – | 70.00 |
| இறைவனை உணர்தல் (பைண்டு வால்யூம்) | – | 70.00 |
| இந்து தர்மம் | – | 70.00 |
| வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் | – | 60.00 |
| 63 நாயன்மார் வரலாறு | – | 60.00 |
| கங்கையின் ஞான அலைகள் | – | 60.00 |
| பக்தியோக சாரம் | – | 60.00 |
| யோக வாசிஷ்டம் | – | 50.00 |
| விடுதலைக்கு ஓர் அறைகூவல் | – | 40.00 |
| விழித்தெழுங்கள் | – | 40.00 |
| பிரம்மச்சரியத்தின் ரகசியம் | – | 40.00 |
| நீதி நெறிக் கதைகள் | – | 40.00 |
| பகவத் கீதை (ஸ்லோகமும் அர்த்தமும்) | – | 40.00 |
| யோகாசனப்பயிற்சி வழிகாட்டி | – | 40.00 |
| எண்ணத்தின் ஆற்றல் | – | 40.00 |
| குண்டலினி யோகம் | – | 40.00 |
| சிறுவர்களுக்கு தெய்வீக வாழ்க்கை | – | 40.00 |
| தினசரி வாழ்வில் யோகா | – | 40.00 |
| பிராணாயாம விஞ்ஞானம் | – | 40.00 |
| ஆயுர்வேத வைத்தியம் | – | 40.00 |
| நாரத பக்தி சூத்திரம் | – | 40.00 |
| நன்றாகத் தூங்குவது எப்படி | – | 30.00 |
| பாரதத்தின் தவப்புதல்வர் | – | 30.00 |
| 100 ஆண்டுகள் வாழ்வது எப்படி? | – | 30.00 |
| சிவானந்தர் வாழ்க்கை வரலாறு | – | 30.00 |
| சிதானந்தர் வாழ்க்கை வரலாறு | – | 30.00 |
| எளிய யோக சாதனை | – | 30.00 |
| விடுதலைக்கான சத்தியவழி | | |
| சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | | |
| 32 பக்கமுள்ள சிறிய புத்தகம் –10 (ஒவ்வொன்றின்விலை | | |

Yoga Vasistam



9215595

GIRI MRP : 60.00